# அப்பர் தேவாரத்தில் வாழ்வியலும் இறையியலும்

முனைவர் அ. நலங்கிள்ளி

# அப்பர் தேவாரத்தில் வாழ்வியலும் இறையியலும்

**முனைவர் அ. நலங்கிள்ளி**
இணைப் பேராசிரியர்
முதுகலைத் தமிழாய்வுத் துறை
பிஷப் ஹீபர் கல்லூரி
திருச்சிராப்பள்ளி
620 017

**அருட்கவி**
திருச்சிராப்பள்ளி

- அப்பர் தேவாரத்தில் வாழ்வியலும் இறையியலும்
- முதற்பதிப்பு : 2001
- படிகள் : 1000
- உரிமை : ஆசிரியர்க்கு
- வெளியீடு : அருட்கவி வெளியீடு
  18, பேங்கர்ஸ் காலனி
  குமரன் நகர்
  திருச்சிராப்பள்ளி - 620 017
- பக்கங்கள் : 222
- விலை : **ரூ. 80.00**

---

- கணினி அச்சு : சபாநாயகம் பிரிண்டர்ஸ்
  176, கீழரத வீதி
  சிதம்பரம் - 608 001
  ✆ : 23040, 23020
- அச்சிட்டோர் : யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ்
  101-D, இராயப்பேட்டை நெடுஞ்சாலை
  மயிலாப்பூர், சென்னை - 600 004
  ✆ : 498 46 93, 466 1807

# வாழ்த்துரை

**பேராசிரியர் தே. சுவாமிராஜ்**
கல்லூரிச் செயலாட்சியர்
பிஷப் ஹீபர் கல்லூரி
திருச்சிராப்பள்ளி - 620 017

*தமிழிலக்கிய வரலாற்றில் களப்பிரர் காலத்திற்குப் பின்னர்த் தோன்றிய பக்தி இலக்கியங்கள் தனித்த சிறப்புடையன. தமிழ் மொழியின் உயர்வையும், தமிழரின் பண்பாட்டையும் மீண்டும் நிலை நிறுத்தும் வகையில் பக்தி இலக்கியங்கள் எழுச்சி பெற்று அமைந்தன. நாயன்மார்களும், ஆழ்வார்களும் இத்தகைய மறுமலர்ச்சிக்குத் துணை நின்றனர். காலப்போக்கில் பன்னிரு திருமுறைகளாகவும், நாலாயிர திவ்வியப் பிரபந்தமாகவும் பக்தி இலக்கியங்கள் வளர் நிலையை அடைந்தன. பன்னிரு திருமுறை களில் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய நாயன்மார் மூவரும் பாடிய முதல் ஏழு திருமுறைகளே தேவாரம் என அழைக்கப் படுகின்றன. இவற்றுள் அப்பர் அருளிய நான்கு, ஐந்து, ஆறு ஆகிய மூன்று திருமுறைகளைத் தெரிவு செய்து முனைவர் அ. நலங்கிள்ளி தம் ஆய்வினை மேற்கொண்டுள்ளார். அப்பர் பாடல்களில் பொதிந்து கிடக்கும் வாழ்வியற் கூறுகளையும் இறையியற் கூறுகளையும் இந்நூலில் தெளிவாகப் புலப்படுத்தி யுள்ளார்.*

*அப்பர் வாழ்விலும், அவர் தம் பாடல்களிலும் விரவிக் கிடக்கும் மனித வாழ்வின் நெறிமுறைகளை நூலாசிரியர் முனைவர் அ. நலங்கிள்ளி இந்நூலில் திறம்பட எடுத்துக் காட்டியுள்ளார். தொண்டு நெறியால் மேம்பட்டுத் திகழ்ந்த அப்பர், 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற உயரிய குறிக்கோளோடு வாழ்ந்தவர்.*

*மனித இனத்திற்கெல்லாம் இக்குறிக்கோள் தேவைப் படுவதை அப்பர் பாடல்கள் வாயிலாக நூலாசிரியர் உணர்த்தி யுள்ள திறம் குறிப்பிடத்தக்கது. பணிவு, கனிவு, அடக்கம்,*

அஞ்சாமை, மனத்திண்மை, செயலுறுதி முதலியவற்றை அடித்தளமாகக் கொண்ட அப்பரின் வாழ்வு நெறிகளை இந்நூலில் முதன்மைப்படுத்தி, இவையெல்லாம் மனித வாழ்க்கையில் ஒவ்வொருவரும் பின்பற்றத்தக்க நெறிகள் என நூலாசிரியர் சுட்டியுள்ள திறமும் போற்றத்தக்கது.

'இறையியல், இறைவனைப் பற்றியது மட்டுமன்று, மனிதனையும் உள்ளடக்கியது' என்ற கருத்தை ஆசிரியர் நலங்கிள்ளி அப்பர் பாடல்களின் வழி நன்கு நிறுவியுள்ளார். மேலை நாட்டு இறையியல் கருத்துக்களை அப்பரின் இறையியல் கருத்துக்களோடு பொருத்தமுற ஒப்பிட்டுள்ளார். இத்துறையில் மேலும் ஆய்வு செய்வதற்கு அவருக்கு மிகுதியும் வாய்ப்புகள் உள்ளன. சைவ சித்தாந்தக் கருத்துக்கள் தோற்றம் பெறுவதற்கு அப்பரின் பாடல்கள் பெரிதும் துணை நின்றன என்பதைத் தக்க சான்றுகளுடன் விரிவாகவும், தெளிவாகவும் விளக்கியுள்ளார். முனைவர் அ. நலங்கிள்ளியின் ஆராய்ச்சித் திறத்திற்கும், பக்தி இலக்கிய ஈடுபாட்டிற்கும் இந்நூல் சிறந்த சான்றாக அமைந் துள்ளது. ஆசிரியர் தாம் கற்ற அறிவை நூல்வழி வெளிப் படுத்துங்கால் அவ்வறிவு கூர்மையுடனும்; தெளிவுடனும், அழுத்தமுடனும் செறிவுடனும் வெளிப்படுகின்றது.

பேராசிரியர் முனைவர் அ. நலங்கிள்ளி அவர்கள் பிஷப் ஹீபர் கல்லூரியில் கடந்த 26 ஆண்டுகளாகச் சிறந்த பணியாற்றி வருகின்றார். ஆழ்ந்த தமிழறிவும், புலமையும், கற்பிப்பதில் தணியா ஆர்வமும் கொண்ட இவர் இக்கல்லூரித் தமிழ்த்துறைக்கும் கல்விக்கும் சிறந்த சேவை ஆற்றி வருவது பாராட்டத்தக்கது.

முனைவர் அ. நலங்கிள்ளியின் இரண்டாவது படைப்பாகத் திகழும் 'அப்பர் தேவாரத்தில் வாழ்வியலும் இறையியலும்' எனும் இந்நூல் சிறந்த ஆராய்ச்சிப் பெட்டகமாகவும், அறிவுசால் களஞ்சியமாகவும் விளங்குகிறதெனில் அது மிகையான கூற்றன்று. இவருடைய இம்முயற்சிக்கு என் உளங்கனிந்த பாராட்டுக்கள்.

அன்புடன்

**தே. சுவாமிராஜ்**

# அணிந்துரை

**தமிழ் மாமணி, நற்றமிழ்ப் பேராசான்**

**முனைவர் ப.ச. ஏசுதாசன்**

முன்னைத் தலைவர்
தமிழாய்வுத் துறை
பிஷப் ஹீபர் கல்லூரி
திருச்சிராப்பள்ளி - 620 017

*முனைவர் அ. நலங்கிள்ளி அவர்களின், 'அப்பர் தேவாரத்தில் வாழ்வியலும் இறையியலும்' என்ற முனைவர் பட்ட ஆய்வேடு நூல் வடிவம் பெறுவது குறித்துப் பெருமகிழ்வு அடைகின்றேன். இந்நூல் பக்தியுணர்வும், இலக்கியப் பயிற்சியும் மிக்குடைய நண்பர் அ. நலங்கிள்ளியின் ஆய்வுத் திறத்தை வெளிப்படுத்துவ தாகவுள்ளது.*

*ஆசிரியர் முனைவர் அ. நலங்கிள்ளியின் இந்நூல் அப்பர் வரலாறு, அப்பர் வாக்கு, வாழ்வியல், இறையியல் என்ற நான்கு இயல்களைக் கொண்டதாகும். 'அப்பர் வரலாறு', என்ற முதல் இயல் சேக்கிழார் பெருமானின் பெரியபுராண அடிப்படையில் அப்பர் வாழ்வினைக் கூறுவதுடன், அவர்தம் வாழ்வின் அகச்சான்று களுக்கு அப்பர் பெருமானின் தேவாரப் பாடற் பகுதிகளைத் தளமாகக் கொண்டு விளக்கியுள்ளது. அப்பரின் வாழ்வில் நடைபெற்ற 'அற்புத நிகழ்வுகள்' என்னும் அவ்வியலின் உட்பகுதி பல சிறந்த செய்திகளைக் கூறுகின்றது. அப்பர் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்கள், அருளியல் சார்ந்தவை என்ற மெய்மையைக் கூறுவதுடன், அவை அவர் சார்ந்திருந்த சமய மக்களுக்கு இறை நம்பிக்கையையும், ஈடுபாட்டையும், சமயப் பற்றுறுதியையும் உருவாக்கும் உத்திகள் என்று கூறியுள்ள கருத்து நினைவிற் கொள்ளத்தக்கது.*

*'அப்பர் வாக்கு' என்ற இரண்டாம் இயல் நாவுக்கரசரின் தேவாரப் பாடல்கள் குறித்த முழுமையான தகவல்களைத் தருகின்றது. நூலாசிரியர் அவற்றைத் தொகுத்தும், வகுத்தும், விரித்தும் சொல்லியுள்ள திறம் பாராட்டற்குரியது. அப்பரின் தேவாரப் பாடல்களில் காணக் கிடைக்கும் தமிழ்ப் பற்றினை ஆசிரியர் அகழ்ந்தெடுத்துத் தந்துள்ளார். அவற்றுள், 'தமிழன்' என்ற*

சொல்லாட்சியை அப்பர் பயன்படுத்தியுள்ள திறமும், அவரது பாடல்களால் தமிழிசை புத்துணர்வும், புதுத்தெம்பும் பெற்று எழுச்சி யுற்றதும் குறிப்பிடப்பட்டுள்ளமை ஆசிரியரின் உள்ளத்தையும், ஆய்வு ஈடுபாட்டினையும் விளக்க வல்லனவாயுள்ளன.

'வாழ்வியல்' என்ற மூன்றாம் பகுதி அப்பர் பெருமான் தம் வாழ்க்கையில் பெற்ற அனுபவத்தால் மனித குலத்திற்கு அறிவுறுத்திய பல நற்செய்திகளைக் கூறுவதுடன், அது இறையுணர்வுடன் கூடிய வாழ்வியல் என்ற பேருண்மையை நிலை நிறுத்துவதாகவுள்ளது. 'இறையியல்' என்ற இறுதியியல், இறையியல் என்றால் என்ன என்பதைப் பல மேனாட்டு அறிஞர்களின் விளக்கங்களைத் தருவதுடன், நமது நாட்டவரின் விளக்கம் அல்லது நம் நாட்டவர் அது குறித்துக் கருதுவது குறித்துத் திறம்படக் கூறி அவையே நாவுக்கரசரின் இறையியல் கொள்கைகள் என நிறுவுவதாகவுள்ளது.

முனைவர் அ. நலங்கிள்ளி அவர்கள் தமது ஆய்வின் முடிவு களாகக் கூறியவற்றுள், இறையியல் இறைவனைப் பற்றியது மட்டுமன்று மனிதனையும் உள்ளடக்கியது, அப்பரின் பாடல் களில் தன்னிரக்கவுணர்வு மேலோங்கியுள்ளது, ஓரிறைக் கொள்கை யுடையவர் அப்பர், இறை வணக்கம் போலவே அடியார் வணக்கமும் அவரால் போற்றப்பட்டுள்ளது, அப்பரின் முறையீடுகள் அவர் தம் மனித நேயத்தை உணர்த்துவன என்ற உண்மைகள் அப்பர் பெருமானை முற்றிலும் அறிந்து கொள்ளச் செய்கின்றன.

முனைவர் அ. நலங்கிள்ளி அவர்களின் ஈடுபாட்டுணர்வையும், கடின உழைப்பும், பல உண்மைகளை வெளிப்படுத்த வேண்டும் என்ற வேட்கையும் இந்நூலால் வெளிப்பட்டுள்ளன. இந்நூலால் அவர் பயின்ற அண்ணாமலைப் பல்கலைக்கழகமும், பணி செய்யும் பிஷப் ஹீபர் கல்லூரியும் பெருமைப்படுவதற்குரியன. தமிழுலகம் இப்பணியினைப் பாராட்டிப் பெரிதும் வரவேற்கும் என நம்புகின்றேன். ஆசிரியருக்கு என் மனம் நிறைந்த பாராட்டுகளையும், வாழ்த்துகளையும் உரித்தாக்குகின்றேன்.

அன்புடன்
**ப.ச. ஏசுதாசன்**

# முன்னுரை

தமிழில் அகம், புறம் பாடும் சங்க இலக்கியத்திற்குப் பின்னர், சமய உணர்வோடு கூடிய இலக்கியங்கள் தோன்றின. சமய உணர்வின் அடிப்படையில் நீதி நூல்களும், சமயச் சார்பின் அடிப்படையில் காப்பியங்களும், சமயம் பரப்பும் அடிப்படையில் பக்திப் பாடல்களும் எழுந்தன.

பக்தி இலக்கியத்தில் அடங்கும் தோத்திர, சாத்திர வகை களுக்கு முன்னோடிகளாக முறையே காரைக்காலம்மையார், திருமூலர் போன்றோர் திகழ்ந்தனராயினும் பக்தியுணர்வை இயக்கமாக்கி வளர்த்த பெருமக்களில் சம்பந்தரும் அப்பரும் முதன்மையானவர்கள். அவர்களிருவரும் தமிழகம் முழுவதும் பலமுறை கூட்டுப் பயணம் செய்து சைவநெறி தழைத்து வளரப் பாடுபட்டனர்.

சைவ சமயத்தில் தோன்றி, வாழ்க்கைச் சூழல்களால் சமண சமயத்தில் புகுந்து மீண்டும் சைவ சமயம் திரும்பிச் சைவ சமய வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றிய வரலாற்றினை உடையவர் அப்பர். அவர் சைவ சமயத்தில் அருளிய பாடல்கள் இன்று மூன்று திருமுறைகளாக முறைப்படுத்தப் பட்டுள்ளன.

அப்பர் பாடல்களின் தொகுதிகளான மூன்று திருமுறை களிலும் உள்ள பதிகங்களின் தொகை 312. அவற்றில் அடங்கிய பாடல்களின் தொகை 3064. அப்பர் அருளிய பாடல்களில் இருந்து தெரியலாகும் வாழ்வியல், இறையியல் பற்றிய உண்மைகளை உள்ளவாறு எடுத்துரைப்பது இவ்வாய்வு நூலின் நோக்கம். இறையுணர்வோடு கூடிய வாழ்வியலே ஏற்றம் பெறும் என்பது இவ்வாய்வின் முடிபு.

நூல் அச்சாகும் இத்தருணத்தில் முன்பு எனக்குத் துணைநின்ற அன்பு நெஞ்சங்களை இற்றைஞான்று நன்றியுடன் நினைத்துப் பார்க்கின்றேன்.

ஊக்கமளித்து அன்பு காட்டி, எனக்குத் துணைநின்று உற்றுழி உதவிய, பிஷப் ஹீபர் கல்லூரியின் முன்னை முதல்வரும் இந்நாள் செயலாட்சியரும் ஆகிய பேராசிரியர் தே. சுவாமிராஜ்,

தடையிலாக் கருத்துரிமை நல்கி என்னை நல்லாற்றுப் படுத்திய பேராசிரியர், சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த் துறையின் முன்னைத் தலைவர் முனைவர் வெ.தெ. மாணிக்கம்,

துறையில் என் முன்னேற்றத்திற்கு அடித்தளமாக இருந்த எம் தமிழாய்வுத் துறையின் முன்னைத் தலைவர் முனைவர் ப.ச. ஏசுதாசன்,

நாடிச்சென்றபோது இன்முகத்தோடு வரவேற்று அரிய கருத்துக் களை நல்கிய திருமுறைச்செல்வர் க. வெள்ளைவாரணனார், முதுபெரும் புலவர் மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர், வாகீச கலாநிதி கி.வா. ஜகன்னாதன், தவத்திரு குன்றக்குடி அடிகளார்,

ஆய்வை முடிப்பதற்கு மிகவும் உறுதுணையாக இருந்து வேண்டிய உதவிகளைச் செய்த எம் தமிழாய்வுத் துறைப் பேராசிரியர் முனைவர் (செல்வி) இந்திரா மனுவேல், என் நண்பர் முனைவர் ச. வேங்கடபதி,

அயர்வுற்ற காலத்தில் அயராது நின்று ஊக்கமளித்த எம் தமிழாய்வுத் துறையின் முன்னைப் பேராசிரியர் முனைவர் மு. நிலாமணி, தமிழாய்வுத் துறையின் இன்றைய தலைவரும், என் நண்பருமாகிய முனைவர் ஒய். டென்னிசன், பேராசிரிய நண்பர்கள் முனைவர் க. பூரணச்சந்திரன், முனைவர் பெ. சுபாசுசந்திரபோசு, முனைவர் ச. சோமசுந்தரம்,

என்னைப் படிக்க வைத்து ஆளாக்கிய என் பெற்றோர்கள், என் வாழ்க்கைக்கு ஒளியேற்றி வைத்த பேராசிரியப் பெருந்தகை முனைவர் வ.சுப. மாணிக்கம், சிறுவயதிலேயே எனக்குத் தமிழ்க் கல்வி பயிற்றுவித்த என் பாட்டனார் அருட்கவி ம.க. வேலாயுதம் பிள்ளை, எனக்கு உடனிருந்து உதவி ஊக்கமளித்த என் வாழ்க்கைத் துணைவி சுசீலா,

திருமலை, திருப்பதி தேவஸ்தானத்தின் நிதியுதவியோடு இந்நூல் வெளிவருவதற்குத் தூண்டுதலாக இருந்து உதவிகள் பல புரிந்த பேராசிரிய நண்பர் முனைவர் இரா. தாமோதரன் (அறவேந்தன்),

நூல் அச்சுருப் பெறுவதற்குப் பரந்த மனத்துடன் நிதியுதவி அளித்த திருமலை, திருப்பதி தேவஸ்தானத்தினர்,

மேலும் பல்வேறு வகைகளில் உதவி செய்த நண்பர்கள்,

நூலினை நன்முறையில் அச்சிட்டுக் கொடுத்த சென்னை யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் நிறுவனத்தார்.

இவர்கள் அனைவருக்கும் நெஞ்சம் நிறைந்த நன்றியன்.

**அ. நலங்கிள்ளி**

# உள்ளுறை

# 1. அப்பர் வரலாறு

தமிழ் நாட்டில் சைவ சமய மறுமலர்ச்சிக்கு வித்திட்ட சமய குரவர் நால்வருள் அப்பர் பெருமானுக்குத் தனிச் சிறப்புண்டு. அவர் தமிழகம் முழுவதும் பயணம் செய்து சைவ நெறி தழைத்து வளரப் பாடுபட்ட பெருந்தகையாளர். சமயத் தொண்டினைச் சமுதாயத் தொணடாக மாற்றிய மாட்சிமையாளர். துணிவு, கனிவு, தெளிவு ஆகிய முறையில் தம்முடைய வாழ்வை அமைத்துக் கொண்டு 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று வாழ்ந்தவர்.

அப்பர் தேவாரத்தில் வாழ்வியலையும் இறையியலையும் ஆராய்வதற்கு அவர் வரலாறு பெரிதும் துணை புரியவல்லது. அதனால் இவ்வியல் 'அப்பர் வரலாறு' பற்றி விளக்குகின்றது. அப்பரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், அவர் சமணம் புகுந்த சூழல், அவர்தம் வாழ்வு வளர்ச்சி யில் திலகவதியார் பெறும் பங்கு, இறையருள் பெற்று அப்பர் மேற்கொண்ட தலப் பயணங்கள், அவர் வாழ்வில் நிகழ்ந்த அற்புத நிகழ்ச்சிகள் - ஆகியவை இவ்வியலில் விளக்கம் பெற்றுள்ளன.

### அ. அப்பர் வாழ்வு

அப்பர் பெருமானின் வாழ்வு செயற்கரிய செயல்கள் நிறைந்த பெருவாழ்வு; தமிழ்நாட்டு அரசு, சமயம், மற்றும் சமுதாயம் சார்ந்த செய்திகளைக் காட்டும் நல்வாழ்வு; சிறப்பாகச் சைவ சமய நெறிகள், சைவக்கோயில் வழிபாடுகள், சைவ மரபினர் மனநிலைகள் ஆகியவற்றை விளக்கும் சீரிய வாழ்வு.

இத்தகு பெருமை சான்ற அப்பர் பெருமானின் வாழ்வினைப் பெரியபுராணத்தில் சேக்கிழார் விளக்கியுள்ளார். அப்பர் தேவாரத் திலுள்ள அகச்சான்றுகளையும் நம்பி ஆரூரர், நம்பியாண்டார் நம்பி போன்றோரின் பாடற் சான்றுகளையும் தம்கால மக்கள் வழக்காறு களையும் அடிப்படையாகக் கொண்டு சேக்கிழார் தந்துள்ள அப்பர் வாழ்வியலை முதலில் அறிவது அச்சான்றோரின் வாக்கை ஆராய்ந் தறியப் பயன்படும் என்பதால், பெரியபுராணத்தின் அடிப்படையில் அப்பர் பெருமானின் வாழ்வு இவ்வியலில் விளக்கப்படுகின்றது. சேக்கிழார் கூறும் அப்பரின் வாழ்வியல் நிகழ்வுகளுக்கு அகச்சான்றாகத்

திகழும் அப்பர் தேவாரப்பகுதிகளும் ஈண்டு ஆங்காங்கு எடுத்தாளப் பெற்றுள்ளன.

### பிறப்பும் இளமையும்

சோழநாட்டிற்கும், தொண்டை நாட்டிற்கும் நடுவில் இருந்த நாடு நடுநாடு. நடுநாட்டின் ஒரு பகுதியாகத் திகழ்ந்த திருமுனைப்பாடி நாட்டில், திருவாமூரில், சைவ வேளாளர் மரபில், குறுக்கையர் குடியில், புகழனார், மாதினியார் இருவர்க்கும் திலகவதியார் மகளாகப் பிறந்தார். திலகவதியார் பிறந்த சில ஆண்டுகட்குப் பின்னர் 'மருணீக்கியார்' தோன்றினார். உரிய பருவத்தில் பெற்றோர்கள் அவருக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்தனர். அவரைப் பள்ளியில் சேர்த்துக் கலை பயிலச் செய்தனர். எல்லாக் கலைகளை யும் திறம்பெறக் கற்றுத் தேர்ந்தார் மருணீக்கியார்.

### திலகவதியார் திருமணப் பேச்சு

திலகவதியாருக்குப் பன்னீராண்டு அகவை ஆயிற்று. உயர்ந்த ஒழுக்கமும், சிவபிரானிடத்து அன்பும் வாய்க்கப் பெற்று, அரசனிடத்துச் சேனைக்கடன் பூண்டவராய், விளங்கிய கலிப்பகையார் என்னும் வேளாண்குடித் தலைவர், திலகவதியாரை மனம் புரிய விரும்பிப் பெரியோர் சிலரைப் புகழனார்பால் அனுப்பினார். குலமும் குணமும் ஒத்த நிலையில், கலிப்பகையாருக்குத் திலகவதியாரை மணமுடிக்கப் புகழனாரும் இசைந்தார். திருமணம் நிகழ்வதற்குள் வடபுலத்தில் போர் மூண்டது. அரசன் கலிப்பகையாரைச் சேனைத் தலைவராக்கிப் போருக்கு அனுப்பினான்.

### தொடர்ந்து வந்த துயரம்

கலிப்பகையார், வடபுலத்தில் போர் செய்து கொண்டிருக்கை யில், புகழனார் உடல் நலம் குன்றி உயிர் நீத்தார். மாதினியாரும் புகழனாரோடு தம்முயிர் விடுத்து விண்ணுலகடைந்தார். தந்தையையும், தாயையும் பிரிந்த மருணீக்கியாரும், திலகவதியாரும், பெரியோர்கள் தேற்ற ஒருவாறு மனந்தேறினர். இந்நிலையில் கலிப்பகையாரும், வடநாட்டுப் போர்க்களத்தில் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டார். இச்செய்தியைச் செவிமடுத்த திலகவதியார், அவருக்கே உரிய யான், அவரோடு செல்வேன் என்று தம்முயிரை விடத் துணிந்தார்.

### தமக்கையின் தவநிலை

மருணீக்கியார், தமக்கையார் காலில் வீழ்ந்து "தாயும் தந்தையும் இறந்த பின்னர், எனக்குற்ற, தாயும் தந்தையும் எல்லாமு

மாய்த் தாங்கள் இருந்தீர்கள் என்பதால் உயிர் வாழ்ந்தேன்; தாங்கள் என்னை விடுத்து உயிர் நீப்பதாயின் தங்கட்கு முன்பாக யானும் உயிர்விடுவேன்" என்று மொழிந்தார். "தம்பியார் உளராக வேண்டும்" என்ற கருணையினால் திலகவதியார், மணவாழ்வை மறந்து, அனைத்துயிர்க்கும் அருள் பேணும் மனைத்தவம் மேற்கொண்டார்.

## மருணீக்கியார் சமணம் சார்ந்து தருமசேனராதல்

மருணீக்கியார் உலகவாழ்வின் நிலையாமையைக் கண்டு, எல்லா உயிர்க்கும் துன்ப நீக்கமும் இன்ப விளைவும் நேர்தற்குரிய பேரறங்களைச் செய்து வரலானார். நில்லாத உலக இயல்பு கண்டு, "நிலையாத இவ்வுலக வாழ்க்கையில் சிக்கி உழலேன்" என்று துறவுநெறியைச் சார்ந்தார். சமயங்கள் பலவற்றின் நன்னெறிகளைத் தெரிந்துணர எண்ணினார். சிவபெருமான் திருவருள் கைவரப் பெறாமையால் 'கொல்லாமை' என்னும் நல்லறப் போர்வையில் மறைந்துறையும் சமண சமயத்திற் சேரக் கருதினார்.

திலகவதியாரை விடுத்துப் பாடலிபுத்திரம் சென்று, சமணர்கள் வாழும் பள்ளியை அடைந்தார். அங்குள்ள சமணர்கள், மருணீக்கியார் மனநிலை அறிந்து, 'சமண சமயமே வீடுபேற்றையளிக்கும்' என்று மெய்போலக் கூறி அவரைத் தங்கள் சமயத்தில் ஈடுபடுத்த முயன்றனர். அவர்கள் கூறிய கருத்துக்களின் வயப்பட்ட மருணீக்கியார் சமண சமயத்திற் சேர்ந்து, அச்சமயத்தில் உள்ள அரிய நூல்கள் அனைத்தை யும் கற்றுத் தேர்ந்தார். சமணர்க்குத் தலைவராய்த் 'தருமசேனர்' என்ற பட்டம் பெற்றுத் தேரரை வாதில் வென்று புகழோடு திகழ்ந்தார்.

## திலகவதியார் வேண்டுகோள்

தம்பியார், சமண சமயம் சார்ந்த செய்தியைக் கேட்ட திலகவதியார் மனம் கவன்றார். சுற்றத் தொடர்புவிட்டுத் திருவதிகை சென்று திருவீரட்டானத் திருக்கோயிலை அடைந்தார். திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், மாலை புனைதல் முதலான திருப்பணிகளில் ஈடுபட்டார். தீவினைத் தொடர்பால், தம்பி புறச் சமயம் சார்ந்ததை எண்ணி எண்ணி, மனம் நொந்து அதிகைப் பெருமானை நோக்கி,

"............என்னை
ஆண்டருளி னீராகி லடியேன்பின் வந்தவனை
ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்று மெடுத்தாள
வேண்டும்" (பெ.பு. திருநாவு-46)

என்று பன்முறை வேண்டினார். இறைவர் திலகவதியார் கனவில் தோன்றி "உன்னுடைய மனக்கவலையை ஒழி, உன் தம்பி

முன்னமே ஒரு முனிவனாக எனை அடையத் தவம் முயன்றான்; அவனைச் சூலை நோய் தந்து ஆட்கொள்வோம்'' என்று அருளிச் செய்தார்.

### சூலைமடுத்து ஆட்கொள்ளல்

சிவபெருமான் அருளால், மருணீக்கியார் வயிற்றில், சூலை நோய் சென்று பற்றியது. அந்நோய் அவர் குடலைக் குடைந்தது. சமண சமயத்திற்கற்ற மந்திரங்கள் பயனற்றுப் போயின. நஞ்சு தலைக்கேறியதுபோல் நடுநடுங்கி மயங்கி விழுந்தார். சமணர்கள் குண்டிகை நீரை மந்திரித்து அவரைக் குடிக்கச் செய்தனர்; பீலி கொண்டு தடவினார்; இயன்றன அனைத்தும் செய்தனர். நோய் மேலும் மேலும் முடுகியதேயன்றிக் குறையவில்லை. "இது நம்மாற் போக்கரிது" என்று சமணர்கள் கைவிட்டுச் சென்றனர். தருமசேனருக்குத் தமக்கையார் நினைவு எழ, அடிசில் சமைப்பவனை, அவர்பால் தம் நிலைமையைச் சொல்லி வரும்படி விடுத்தார். திலகவதியார் ''நன்றறியார் அமண் பாழி நண்ணுகிலேன்'' எனக் கூறி அவனை அனுப்பிவிட்டார்.

### சைவம் மீண்டு திருநாவுக்கரசராதல்

ஈசன் அருள் கூடுதலால் மருணீக்கியார், பாயும் குண்டிகையும் பீலியும் ஒழிய, சூலை நோய் உடன் தொடர, நள்ளிரவில் பிறர் காணாவகையில் திருவதிகை சென்று, திலகவதியார் இருந்த திருமடத்தை அடைந்தார். உய்யும் நெறி உரைத்தருளுமாறு அவர்தம் திருவடியில் வீழ்ந்து வேண்டினார். 'பரசமயப் படுகுழியில் விழுந்ததால் துயருழந்தீர்; எழுந்திரீர்; இது கற்றை வேணியர் அருளே; சிவபெருமானை வணங்கிப் பணி செய்வீராக' எனத் திலகதியார் பணித்தார். திருவதிகைக் கோயிலுட் புகுந்து சிவபெருமானுக்குத் தொண்டு செய்யும் தகுதியை மருணீக்கியார் பெறுமாறு, திருவைந்தெழுத்தை ஓதித் 'திருவாளன் திருநீறு' திலகவதியார் அளித்தார். மருணீக்கியாரும், பெருவாழ்வு வந்ததெனப் பணிந்து ஏற்று அதனை உருவார அணிந்தார். திருப்பள்ளியெழுச்சிக் காலமாகிய விடியற்காலத்தில், தமக்கையாருடன் மருணீக்கியார் திருக்கோயில் சென்று வணங்கிய நிலையில் இறைவன் அருளால் அவருக்கு உரைத்தமிழ் மாலைகள் பாடிப் போற்றும் உணர்வு உண்டாயிற்று. தம்முடைய சூலைநோயை நீக்கும் பொருட்டு, அதிகைப் பெருமானைக் ''கூற்றாயினவாறு விலக்ககலீர்'' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடிப் போற்றினார். அவர்தம் வயிற்றில் வருத்திய சூலை நோய் நீங்கிற்று. அவ்வளவில் யாவரும் வியப்ப,

"பாவுற்றலர் செந்தமி ழின்சொல்வளப்
பதிகத்தொடை பாடிய பான்மையினால்
நாவுக்கர சென்றுல கேழினுநின்
னன்னாம நயப்புற மன்னுக" (பெ.பு. திருநாவு. 74)

என்று வான்மொழி எழுந்தது. அன்று முதல் அவருக்குத் திருநாவுக்கரசர் என்ற பெயர் வழங்கலாயிற்று. சிவச் சின்னங்கள் அணிந்து, உழவாரப் படை ஏந்தி முக்கரணங்களாலும் பக்தி செய்ய முற்பட்டார்.

## சமணம் செய்த வஞ்சனைகளை வென்று மீளல்

திருநாவுக்கரசர், மீண்டும் சைவரான செய்தியைக் கேட்ட சமணர்கள், 'நம்பெருஞ்சமயம் வீழ்ந்தது' என்று மருண்டனர். தருமசேனர் நம் சமயத்தை அழித்தார் என்று அரசனிடம் முறையிட்டனர். அரசன் நாவுக்கரசரை அழைத்துவர அமைச்சர்களுக்கு ஆணையிட்டான். நாவுக்கரசர் தம்மை அழைக்க வந்த அமைச்சர்களிடம், "நாமார்க்கும் குடியல்லோம், நமனையஞ்சோம்" எனத் தொடங்கும் மறுமாற்றத் திருத்தாண்டகப் பதிகம் பாடி அரசனைக் காண்பதற்கு வர மறுத்தார். அமைச்சர்கள் அவர் திருவடிகளில் வீழ்ந்து, வந்தருள வேண்டும் என்று வேண்டினர். நாவரசர் "ஈண்டுவரும் வினைகட்கு எம்பிரான் உளன்" என்னும் உறுதியோடு நாட்டரசன் முன் அடைந்தார்.

அரசன், சமணர்கள் கூறியபடி, நாவுக்கரசரை நீற்றறையில் இடுமாறு பணித்தான். ஏவலர் அவரை நீற்றறையில் இட்டுத் தாளிட்டனர். நாவுக்கரசர், இறைவன் தாள் நிழலைத் தலைக்கொண்டு, "மாசில் வீணையும் மாலை மதியமும்' எனத் தொடங்கும் பதிகம் பாடி இனிதிருந்தார். ஏழுநாட்கள் சென்று சமணர்கள் நீற்றறையைத் திறந்து பார்த்தனர். எவ்வித ஊனமும் இன்றி நாவுக்கரசர் வீற்றிருந்ததைக் கண்டு வியந்தனர்.

சமண சமயத்தில் இருக்கும்போது கற்ற மந்திரத்தால் நாவுக்கரசர் உயிர் பிழைத்தார் என நினைத்த சமணர்கள், நஞ்சு கலந்த பாற்சோற்றைக் கொடுத்து அவரை உண்ணச் செய்தனர். "நஞ்சும் அமுதாம் எங்கள் நாதன் அடியார்க்கு" (பெ.பு. திருநாவு. 104) என்ற உறுதியுடன் அவர் அதை உண்டு எவ்விதத் தீங்குமின்றி இருந்தார். இந்நிகழ்ச்சியைத் திருநனிபள்ளிப் பதிகத்தில்,

"வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா வமணர்தந்த
நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளி யடிகளாரே" (4:70:5)

என நினைவு கூர்ந்துள்ளார். சமணர்கள் துணுக்குற்றனர். அரசனிடம் சென்று, 'இவனுக்கு நஞ்சும் அமுதாயிற்று; இவன் பிழைத்தால்

எங்கள் உயிரும் நும் அரசாட்சியும் அழிவது திண்ணம்; உமது யானையை அவன் மீது ஏவி மிதிக்கச் செய்து கொல்லுக' என்று வேண்டினர். அரசனும் அவர்கள் வஞ்சனைக்கு இணங்கினான். நாவுக்கரசர் மீது யானை ஏவப்பட்டது. அவர் சிறிதும் அஞ்சாது சிவன் கழலே சிந்தித்துச் "சுண்ண வெண் சந்தனச் சாந்தும்" எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடியருளினார். கூற்றெனக் கடுகி வந்த மதயானை அவரை மும்முறை வலம் வந்து வணங்கித் தன்னை ஏவிய பாகரையும், சமணரையும் மிதித்துக் கொன்றது.

யானைக்குத் தப்பிப் பிழைத்த சமணர்கள், நாவுக்கரசரைக் கல்லுடன் சேர்த்துக் கட்டிக் கடலிற் பாய்ச்சும்படிக் கூறவே, அரசனது ஏவலரும் அங்ஙனமே செய்தனர். உண்மைத் தொண்டின் உறைப்புடைய நாவுக்கரசர், 'எப்பரிசாயினும் ஆகுக' என்று எண்ணிச் "சொற்றுணை வேதியன்" எனத் தொடங்கும் நமச்சிவாயப்பதிகம் பாடினார். பாடிய அளவில் கல் கடலில் மிதந்தது; கயிறு அறுந்தது. வருணன் தன் அலைக்கைகளால் நாவுக்கரசரைத் தாங்கி அவரைத் திருப்பாதிரிப் புலியூர் அருகே கரை சேர்த்தனன். இந்நிகழ்ச்சியைத் திருநீலக்குடிப் பதிகத்தில்,

"கல்லி னோடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேனன்றே" (5:72:7)

எனக் குறிப்பிட்டுள்ளார். கரையேறிய நாவுக்கரசர், திருப்பாதிரிப் புலியூர்த் தோன்றாத்துணை நாதரை, "ஈன்றாளுமாய் எனக் கெந்தையு மாய்" எனத் தொடங்கும் பதிகத்தால் போற்றிப் பரவினார்.

### குணபர ஈச்சரம்

திருமாணி குழி, திருத்தினை நகர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருவதிகையை அடைந்தார். அங்கேயே சில நாள் தங்கி உழவாரப் பணி செய்து வந்தார். பல்லவ மன்னன், நாவுக்கரசர்க்குத் தான் செய்த கொடுமைகளையும், சமணர் செய்த சூழ்ச்சிகளையும் உணர்ந்து திருவதிகை அடைந்தான். நாவுக்கரசர் திருவடிகளில் பணிந்து, திருநீறு அணிந்து சைவனாக மாறினான். பாடலிபுத்திரத்தில் இருந்த பள்ளிகளையும், பாழிகளையும் இடித்துக் கொணர்ந்து திருவதிகையில் 'குணபர ஈச்சரம்' என்ற பெயரில் சிவபெருமானுக்குத் திருக்கோயில் எடுப்பித்தான். (பெ.பு. திருநாவு. 147)

## இடபக் குறி, சூலக் குறி பொறிக்கப் பெற்றமை

நாவுக்கரசர், திருத்தலந்தோறும் சென்று திருப்பதிகம் பாடித் திருத்தொண்டு செய்ய எண்ணினார். திருவெண்ணெய் நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவலூர் முதலான தலங்கட்குச் சென்று திருப்பதிகம் பாடித் திருப்பெண்ணாகடம் அடைந்தார். அங்கு திருத்தூங்கானை மாடத்து இறைவனைப் பணிந்து, "பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்" (4:109:1, 2, 3) என்று வேண்டித் தம் உடலில் இடபக் குறியும், சூலக் குறியும் பொறித்துத் திருவடி நீற்றுப் பூச்சும் செய்தருள வேண்டினார். சிவபூதம் ஒன்று வந்து அவர் தோள்களில் இடபக் குறியும், சூலக் குறியும் பொறித்தது.

### தில்லைக் கூத்தனை வணங்கல்

பெண்ணாகடத்தில் இருந்து, திருவரத்துறை, திருமுதுகுன்றம் முதலான தலங்கட்குச் சென்று, வெள்ளாற்றங்கரை வழியாகத் தில்லையை அடைந்தார். மேலைக்கோபுர வாயில் வழியாகத் திருக்கோயில் சென்று கூத்தப்பிரானின் பேரின்பப் பேராடல் கண்டு தொழுதார். அம்பலவாணரின் திருவருட் குறிப்பு "என்று வந்தாய்" என்பதைப் போன்று இருந்த தன்மையைக் குறிப்பிட்டு, "கருநட்டகண்டனை" எனத்தொடங்கும் திருவிருத்தப்பதிகம் பாடிப் பரவினார். தில்லையில் இருந்தவாறே, திருவேட்களம், திருக்கழிப்பாலை முதலான தலங்கட்கும் சென்று வந்தார்.

### சம்பந்தர் சந்திப்பு

சீர்காழியில் ஆளுடைய பிள்ளையார், மூவாண்டில் உமையம்மை யின் ஞானப்பாலுண்டு, திருஞான சம்பந்தராகி நிகழ்த்திய தெய்விகச் செயல்களை அடியவர்கள் வாயிலாகக் கேள்வியுற்றார் நாவுக்கரசர். அப்பெருமானைக் கண்டு மகிழவேண்டும் என்ற பேரவாவினால், தில்லையினின்றும் நீங்கி, வழியில் திருநாரையூர் சென்று வழி பட்டுச் சீர்காழியை அடைந்தார். நாவுக்கரசரின் பெருமைகளை முன்பே அறிந்திருந்த ஞானசம்பந்தர், அடியவர் குழாத்தோடு அவரை எதிர்கொண்டு வரவேற்றார். நாவுக்கரசர், சம்பந்தர் திருவடிகளைப் பணிந்தார். சம்பந்தர் அவர் கரங்களைப் பற்றித் தூக்கித் தாமும் வணங்கி 'அப்பரே' என்று மனங்கனிந்து மொழிந்தார். அன்றுமுதல் திருநாவுக்கரசர் பெருந்தகைக்கு அப்பர் என்னும் பெரும்பெயர் வழங்கலாயிற்று. அவ்விருவரும் ஒன்று சேர்ந்து தோன்றிய தோற்றம், அருட்கடலும் அன்புக்கடலும் போன்றும் சைவசமயம் பெற்ற

இருபுண்ணியக் கண்களைப் போன்றும் இருந்தது. சம்பந்தர், அடியவர் குழாம் புடைசூழ அப்பர் பெருமானைத் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றார். பலநாட்கள் சம்பந்தருடன் உடனுறைந்து, அவரிடம் விடைபெற்றார்.

## நல்லூரில் திருவடி தீக்கை

திருக்கருப்பறியலூர், திருப்புள்ளிருக்கு வேளூர், திருப்புன்கூர், திருநீடூர், திருக்குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி முதலிய தலங்களையும், திருச்செம்பொன்பள்ளி, திருமயிலாடுதுறை, திருத்துருத்தி, திருவாவடுதுறை, திருவிடைமருதூர் முதலிய தலங் களையும் வணங்கிய அப்பர், திருச்சத்தி முற்றத்திற்கு எழுந்தருளினார். சத்தி முற்றத்துச் சிவக்கொழுந்தீசரைப் பணிந்து, "கூற்றம் குமைப்பதன் முன் பூவாரடிச் சுவடு என்தலைமேல் பொறித்து வை" (4:96:1) என்று தமக்குத் திருவடி தீக்கை செய்தருளுமாறு வேண்டினார். சிவக்கொழுந்தீசர் "நல்லூருக்கு வா" என்று அருளிச் செய்தார். அவ்வாறே நல்லூரை அடைந்து, பெருமானை வணங்கிய அளவில், அப்பரின் திருமுடிமேல் பெருமானார், தம் திருவடியைச் சூட்டியருளினார். அப்பர், "நினைந்துருகும் அடியாரை" எனத் தொடங்கி,

> "நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
> நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே"

என்று இறைவனின் கருணைத் திறத்தைப் போற்றிப் பரவினார். நல்லூரில் சிலநாள் தங்கிய அப்பர், அருகில் உள்ள பல தலங் கட்குச் சென்று வழிபட்டார்.

## அப்பூதி அடிகள் தொடர்பு

நல்லூரில் இருந்து, திருவெண்ணியூர், திருப்பூவனூர், திருப்பழனம் முதலான தலங்களை வழிபட்டுத் திங்களூரை அடைந்தார். திங்களூரில் அந்தண குலத்தில் சிறந்து விளங்கிய அப்பூதி அடிகள், சாலை, குளம், கிணறு, தண்ணீர்ப்பந்தல் முதலான வற்றைத் திருநாவுக்கரசர் பெயரால் அமைத்தும், தம் மக்களுக்கு அவர் பெயரையே வைத்தும் பக்தி செலுத்தி வந்தார். இதனை அறிந்த நாவுக்கரசர், அப்பூதி அடிகளின் இல்லம் அடைந்தார். தம்மீது அப்பூதி அடிகள் கொண்ட அன்புத் திறம் அறிந்து வியந்த நாவுக்கரசர், தம்மை யாரென்று அறிமுகம் செய்து கொண்டார். அப்பூதி அடிகள் தம் குலதெய்வமே, எழுந்தருளியதாக மகிழ்வடைந்து, இல்லத்தார் அனைவரையும் அழைத்து வணங்கச் செய்து, தாமும்

வணங்கினார். தம் இல்லத்தில் அமுது செய்தருளும்படி வேண்டினார். நாவுக்கரசரும் இசைந்தார்.

## விடம் தீர்த்தது

விருந்து படைப்பதற்குத் திருநாவுக்கரசர் பெயர் பூண்ட அப்பூதி அடிகளின் மூத்த மகன் வாழைக் குருத்தை அரிய முற்பட்ட போது ஒரு தழல் நாகம் அவனைத் தீண்டியது. விடம் தலைக்கேறிய அந்நிலையிலும் இலையைக் கொண்டுவந்து தாயின் கையில் கொடுத்துவிட்டு அவன் மயங்கி வீழ்ந்தான்: நாவுக்கரசர் இதனை அறியின் அமுதுண்ண இசையார் என்று எண்ணிய அப்பூதி அடிகளும் தேவியும் அவனது உடலைப் பாயில் மூடிப் புறத்தே வைத்தனர். நாவுக்கரசரை விருந்து செய்ய அழைத்தனர்.

விருந்துண்ண அமர்ந்த நாவுக்கரசர் உள்ளத்தில் இறையருளால் ஒரு தடுமாற்றம் உண்டாகி, "மூத்த திருநாவுக்கரசை அழையும் என்றார்". அப்பூதி அடிகள் "இப்போது அவன் இங்கு உதவான்" என்று கூறினார். நிகழ்ந்தவை யாவும் அறிந்த திருநாவுக்கரசர், அவன் உடலைத் திருக்கோவிலுக்கு முன் எடுத்து வரச் செய்து, "ஒன்று கொலாம்" (4:18) என்ற திருப்பதிகம் பாடியருளினார். விடம் நீங்கியது. உறங்கி எழுவானைப் போலப் பிள்ளையும் எழுந்து நாவுக்கரசரைப் பணிந்தான். அப்பூதி அடிகள் வேண்டுகோட்கிணங்க நாவுக்கரசர் மீண்டும் அவர் இல்லம் சென்று எல்லோருடனும் அமுது செய்தருளினார். பின்னர், திருப்பழனம் சென்று சேர்ந்து பாடிய 'சொன்மாலைப்' பதிகத்துள் அப்பூதி அடிகளின் பெருமையை அமைத்துப்பாடினார்.

## புகலூரில் சம்பந்தருடன் தங்குதல்

திருப்பழனத்தில் இருந்து, திருநல்லூர், வலஞ்சுழி, திருவாஞ்சியம், குடமூக்கு முதலான தலங்களுக்குச் சென்று திருவாரூர் வந்தார். புற்றிடங் கொண்ட ஈசனையும், தியாகேசனையும் பணிந்து "பாடிளம் பூதத்தினானும்" என்று தொடங்கும் பதிகம் பாடிப் பரவினார். திருவாதிரைத் திருநாளில் வீதிவிடங்கப் பெருமான் திருவுலாப் போந்தருளியது கண்டு வணங்கி மகிழ்ந்தார். திருவாரூரில் இருந்து திருப்பயற்றூர், திருவிற்குடி, திருப்பனையூர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருப்புகலூர் வந்தார்.

திருப்புகலூரில் முருக நாயனார் மடத்தில் தங்கியிருந்த சம்பந்தர், அப்பர் வருகையைக் கேள்வியுற்று அடியவர் புடைசூழ அவரை எதிர்கொண்டு வரவேற்றார். திருவாரூரில் நிகழ்ந்த

திருவாதிரை விழாச்சிறப்பினை (4:21) அப்பர் வாயிலாகக் கேள்வி யுற்ற சம்பந்தர் "நானும் திருவாரூர் சென்று மீண்டும் இங்கு வந்து உம்மோடு உடனிருப்பேன்" என்று கூறித் திருவாரூர் சென்றார். நாவுக்கரசர் புகலூரில் தங்கிப் பாமாலைகள் பாடி உழவாரப் பணி செய்து வந்தார். திருவாரூர் சென்ற சம்பந்தரும் திருப்புகலூர் மீண்டார். இருவரும் முருக நாயனார் திருமடத்தில் சில நாட்கள் தங்கியிருந்தனர். முருக நாயனார், சிறுத்தொண்டர், திருநீல நக்கர் முதலியோரும் உடனிருந்து அளவளாவி மகிழ்ந்தனர்.

### படிக்காசு பெற்றமை

திருப்புகலூரில் இருந்து, சம்பந்தரும், நாவுக்கரசரும் ஏனைய அடியவர்களிடம் விடைபெற்றுத் திரு அம்பர் சென்று வணங்கினர். பின்னர், திருக்கடவூர் அடைந்து அமுதகடேசரை வழிபட்டனர். குங்கிலியக் கலய நாயனார் திருமடத்தில் அவரோடு தங்கித் திருவமுது செய்தனர். திருக்கடவூர், ஆக்கூர் முதலிய தலங்களை வழிபட்டுத் திருவீழிமிழலையை அடைந்தனர். விண்ணிழி விமானத்தில் வீற்றிருக்கும் இறைவனைப் பணிந்து பரவினர். திருவீழிமிழலையில் வேறு வேறு மடங்களில் இருவரும் தங்கினர். அந்நாளில் மழையின்மையாலும், ஆற்று நீர்ப்பெருக்கு வற்றியமை யாலும் பஞ்சம் உண்டாயிற்று. மக்கள் பட்டினியால் வருந்தினர். வீழிமிழலை இறைவர், இருவரின் கனவிலும் தோன்றி "நீங்கள் காலவேறுபாட்டினால் துன்பமுற மாட்டீர்கள். எனினும் உங்களைச் சார்ந்து வழிபடும் தொண்டர்கட்கு உணவளிக்கும் பொருட்டு உங்களுக்குப் படிக்காசு தருகின்றோம்" (பெ.பு. திருநாவு. பா.எ். 247, 248) என்று கூறினார். அவ்வாறே கிழக்குப் பீடத்தில் ஞானசம்பந்தருக்கும், மேற்குப்பீடத்தில் நாவுக்கரசருக்கும் படிக்காசு வைத்தருளினர். இருவரும் அக்காசுகளைக் கொண்டு சிவனடியார் களுக்கு இருபொழுதும் பறைசாற்றி உணவளித்தனர். நாவுக்கரசர் சிவபிரானுக்குக் கைத்தொண்டு புரியும் அடியவராதலால் அவருக்கு வாசியில்லாக் காசும், ஞானசம்பந்தர் சிவனாரின் திருமகனார் ஆதலின் அவருக்கு வாசியுள்ள காசும் கிடைத்தன. சம்பந்தர், மிழலைப் பெருமானை "வாசி தீரவே காசு நல்குவீர்" (1:92:1) என்று வேண்டி வாசியில்லாக் காசு பெற்றார். சிலகாலம் கழித்து எங்கும் மழை பெய்து வளம் பெருகியது.

### மறைக்கதவம் திறப்பித்தமை

அப்பரும், சம்பந்தரும் திருவீழிமிழலையில் இருந்து, விடை பெற்றுத் திருக்கொண்டீச்சரம், திருவாஞ்சியம், திருத்தலையாலங்காடு,

திருப்பேரெயில் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, திருமறைக்காட்டை அடைந்தனர். அங்கு, வேதங்கள் இறைவனை வழிபட்டு அடைத்திருந்த திருக்கோவில் வாயிற்கதவுகள் அந்நாள் முதல் திறக்கப்படாமலே இருந்தன. மக்கள், கோயிலின் வேறொரு வழியாகச் சென்று வழிபட்டு வருவதை இருவரும் கேட்டறிந்தனர். சம்பந்தர் நாவுக்கரசரை நோக்கி, "நாம் நேர்முக வாயில் வழியே சென்று இறைவனை வழிபடுமாறு இக்கதவம் திறக்கப்பாடும்" என்று வேண்ட நாவுக்கரசரும், 'பண்ணினேனர் மொழியாள்' என்று திருப்பதிகத்தில் 'கதவினைத் திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே" (5:10:10) என்று விண்ணப்பித்தார். செந்தமிழ்ப் பாடல்களின் சுவையினைத் துய்க்க விரும்பிய மறைக்காட்டீசர், கதவம் திறக்கக் காலம் தாழ்த்தினார். பதிகம் முழுதும் பாடி முடிக்கும் நிலையிலும், இறைவன், கதவம் திறப்பிக்காமல் காலந்தாழ்த்தாமை கண்டு மனம் வருந்தினார் நாவுக்கரசர். இறுதியாக,

> "அரக்கனைவிரலால் அடர்த் திட்ட நீர்
> இரக்க மொன்றி லீர் எம்பெருமானீரே" (5:10:11)

என்று பாடியருளவே திருக்கதவம் திறந்தது. இருவரும் நேர்வழியே சென்று இறைவனை வழிபட்டனர். வெளியே வரும்போது, நாவுக்கரசர், சம்பந்தரை நோக்கிச் "கதவம் அடைக்க நீரும் பாடியருளும்" என்று வேண்டினர். சம்பந்தரும் "சதுரம் மறை' என்று பதிகம் பாடத் தொடங்கினார். முதற்பாடலிலேயே கதவம் அடைக்கப் பெற்றது. அன்று முதலாக அக்கதவம் திறக்கவும், அடைக்கவுமாக உள்ள வழக்கத்தைப் பெற்றது. அன்று, இரவு இருவரும் திருமறைக்காடு மடத்தில் தங்கினர்.

### திருவாய்மூரில் திருக்காட்சி

நாவுக்கரசர் தாம் அரிதில் திறக்கப்பாடியதையும், சம்பந்தர் எளிதில் அடைக்கப் பாடியதையும் எண்ணி, "நம்பர் திருவுள்ளம் அறியாது அயர்ந்தேன்" என்று கவன்று திருமடத்தின் ஒருபால் துயில் கொண்டார். (பெ.பு. திருநாவு. 275) இறைவர் அவர் கனவில் தோன்றி "வாய்மூரில் இருப்போம்; தொடர வா" என்று அருளி மறைந்தனர். நாவுக்கரசர் துயிலெழுந்து இறைவரைப் பின் தொடர்ந்து வாய்மூருக்குச் சென்றார். முன்னே சென்ற இறைவர் பொற்கோயில் ஒன்றைக் காட்டி அதனுள் புக்கு மறைந்தனர். நாவுக்கரசர் வாய்மூருக்குச் சென்றதை அறிந்த ஞானசம்பந்தரும் அங்கு வந்து சேர்ந்தார். "திறக்கப் பாடிய என்னினும் அடைக்கப் பாடிய ஞானசம்பந்தர் ஈண்டு வந்தார்; அவருக்கும் ஒளிக்கலாமோ" (5:50:1) என்று நாவுக்கரசர் பாடினார். இறைவர் ஞானசம்பந்தருக்குக் காட்சி தர,

அவர் காட்டக் கண்ட நாவுக்கரசர், "பாட அடியார் பரவக் கண்டேன்" (6:77:1) என்று பாடித் தொழுதனர். இருவரும் திருவாய்மூரில் சிலநாள் தங்கி மீண்டும் திருமறைக்காட்டுக்கு வந்தனர்.

பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும், விடுத்த தூதர் சிலர், சம்பந்தரைக் கண்டு பாண்டிய நாடும், பாண்டிய மன்னனும் சமணம் சார்ந்து உழல்வதை எடுத்துக் கூறினர். திருநீற்றின் துணைகொண்டு, சமணர் வன்செயலை மாற்றிச் சைவ நெறி வளர்க்க ஞானசம்பந்தர் பாண்டிய நாடு செல்லத் துணிந்தார். நாவுக்கரசர் சம்பந்தரை நோக்கி, "அமணர் வஞ்சனையில் வல்லவர்; நாளும் கோளும் தீயன; நீர் அங்குச் செல்லலாகாது" எனக் கூறினர். சம்பந்தர், "இறைவர் துணை நிற்க, நாளும் கோளும் நல்ல வாகும்" என்று கூறி மதுரைக்குப் புறப்பட்டார்.

## உண்ணா நோன்பு

நாவுக்கரசர், பின்பு திருமறைக்காட்டிலிருந்து, திருநாகைக் காரோணம் திருவீழிமிழலை, திருவாவடுதுறை முதலான தலங் களுக்குச் சென்று வழிபட்டார். பின்னர், திருப்பழையாறை வடதளி என்னும் தலத்தை அடைந்தார். அங்குள்ளோர், "சமணர்கள் இக் கோயிலை மறைத்துப் பாழியாக்கினர்" எனக் கூறக் கேட்டு வருந்தினார். "சிவபெருமான் திருவுருவத்தை இக்கோயிலுட் கண்டு வணங்கி யன்றி மேற்போகேன்" என்று விமானத்தின் ஒரு புறமாக அமர்ந்து அமுது செய்யாது உண்ணாநோன்பு மேற்கொண்டார். அடியவர் பசி பொறாத இறையவர், அரசனது கனவில் எழுந்தருளி, அமணரின் வஞ்சனையால் தாம் மறைக்கப்பட்டிருக்கும் அடையாளங்களைக் காட்டி, அவற்றைப் போக்கி, நாவுக்கரசர் தம்மை வணங்க வழிவகை செய்யுமாறு பணித்தார். அரசன் இறைவர் காட்டிய அடையாளத்தின் வழிகொண்டு, சமணர் மறைந்திருந்த சிவலிங்கத்தை வெளிப் படுத்தியதோடு, சமணரைத் தூரறுத்தான். மேலும், வடதளியில் பெரிய சிவாலயம் எடுப்பித்தும் மகிழ்ந்தான். நாவுக்கரசர் அவ்வாலயத்துட் சென்று, "தலையெலாம்" எனத் தொடங்கிப் பாடிய பதிகத்தில்,

> "மூக்கி னால்முரன் றோதியக் குண்டிகை
> தூக்கி னார்குலந் தூரறுந் தேதனக்
> காக்கி னான்" (5:58:2)

என்று இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றார். நாவுக்கரசர் சிவத்தொண்டில் இஃது ஓர் அறப்போர் வெற்றியாகும்.

## பொதி சோறு பெற்றது

பழையாறையை விடுத்துத், திரு எறும்பியூர், திருஆனைக்கா, திருக்கற்குடி, திருச்சிராப்பள்ளி, திருப்பராய்த்துறை முதலிய தலங்கட்குச் சென்று வணங்கியபின் திருப்பைஞ்ஞீலி செல்லும் வேட்கை கொண்டார். செல்லும் வழியில் நாவுக்கரசர், வழிநடந்த இளைப்பு, பசி, நீர்வேட்கை இவற்றால் வருந்தினாலும் மனத்திண்மை யுடன் பைஞ்ஞீலியை நோக்கி நடந்தார். அடியவரின் வருத்தம் காணப்பொறாது சிவனார் அவர் வரும் வழியில் சோலையும் குளமும் உண்டாக்கியதோடு, அந்தணர் வடிவங் கொண்டு பொதிசோற்றுடன் வீற்றிருந்தார். அவர் வேண்டுகோட்கிணங்கிப் பொதிசோறு உண்டு இளைப்பு நீங்கிய நாவுக்கரசரை அந்தணர், "எங்குப் போகின்றீர்?" என வினவினார். திருப்பைஞ்ஞீலிக்குப் போவதாய் நாவுக்கரசர் கூற, அந்தணர் தாமும் அங்கு வருவதாய்க் கூறி உடன்சென்றார். பைஞ்ஞீலியை அடைந்ததும் இறைவர் மறைந்தார். நாவுக்கரசர், சிவபிரானின் கருணையை வியந்து கண்ணீர் மல்க அழுதார்.

## தொண்டை நாடடைதல்

திருப்பைஞ்ஞீலியில் சிலநாள் தங்கிய பின், அங்கிருந்து திருவண்ணாமலை சென்று வழிபட்டார். தொண்டை நாடடைந்து, திருவோத்தூர்ப் பெருமானை வணங்கிக் காஞ்சிபுரத்தை அடைந்து "கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரியானை" என்ற பதிகம் பாடி ஏகம்பரைப் பணிந்தார். திருக்கச்சிமயானம், திருமேற்றளி, திருமாற்பேறு, முதலிய தலங்களையும் வழிபட்டு உழவாரத் தொண்டு செய்து மீண்டும் காஞ்சிபுரம் அடைந்தார்.

தொண்டை நாட்டில் மேலும் பல தலங்களைக் காண விரும்பித் திருக்கழுக்குன்றம், திருவான்மியூர், மயிலாப்பூர் முதலிய தலங்களை வழிபட்டுத் திருவொற்றியூர் சேர்ந்தார்.

அத்தலத்தில் சில நாள் தங்கித் திருக்குறுந்தொகை, திருநேரிசை, திருவிருத்தம் முதலாய பதிகங்கள் பாடித்தொண்டு செய்தார். பின், திருப்பாசூர், திருவாலங்காடு, காரிக்கரை, முதலான தலங்கட்குச் சென்று, திருக்காளத்தி என்னும் தென்கயிலைத் திருமலையை அடைந்தார். "விற்றூண் ஒன்றில்லாத" எனத் தொடங்கும் திருத்தாண்டகத்தால் "காளத்தி யானவனென் கண்ணுளானே" என்று பாடிப் பரவினார். காளத்தியில் இருந்த நாவுக்கரசருக்குத் திருக்கயிலை யில் இறைவர் எழுந்தருளியுள்ள பெருங்கோலத்தை நேரிற்சென்று காணவேண்டும் என்ற பெருவிருப்பு விளைந்தது.

## கயிலைப் பயணம்

காளத்தியில் இருந்து புறப்பட்டுப், பெருமலைகளையும், கான்யாறுகளையும், அவை தொடர்ந்த நாடுகளையும் கடந்து திருப்பருப்பதத்தை அடைந்து பதிகம் பாடி வழிபட்டார். தெலுங்கு, கன்னடம், மாளவம், இலாடம் முதலிய நாடுகளைக் கடந்து காசித் தலத்தைப் பணிந்து போற்றினார். தம்முடன் வந்தவர்களை அங்கேயே விடுத்துத் தனியே, காடு, மலை, மேடு, பாலைவனங்களின் வழியாக இரவு பகலாக நடக்கத் தொடங்கினார். கிழங்கு, இலை, கனி முதலியவற்றை உண்ணுதலையும் விடுத்தார். கால்கள் பரடுவரை தேய்ந்தன. கயிலையைக் காணும் உள்ளத்துறுதி வலுப் பெற்றது. கைகளால் தாவித் தாவிச் சென்றதனால், கைகளும் மணிக்கட்டுவரை தேய்ந்தன. மார்பினால் உந்திச் சென்றார். மார்பமும் தசை நைந்து எலும்புகள் முறிந்தன. உடலும் தேயலாயிற்று. மேலும செல்ல வழியின்றி ஓரிடத்தில் செயலற்றுத் தங்கினார்.

## திருக்கயிலைக் காட்சி

நாவுக்கரசர், இவ்வுலகத்தில் இருந்து மேலும் தீந்தமிழ்ப் பாடல்கள் பாடவேண்டும் என்னும் திருவுள்ளத்தினால், அவர் கயிலைக் காட்சியைக் காண, இறைவர் அருள் செய்யவில்லை. பொய்கை ஒன்றைத் தோற்றுவித்து, இறைவர் தாமே ஒரு முனிவராக உருக்கொண்டு, நாவுக்கரசரின் நேர் நின்று நோக்கினர். அவரும் எதிர்நோக்க, "அங்கம் சிதைய இவ்வருங்கானில் வந்தது என்கருதி" என்று முனிவர் வினவினார். கயிலைக் காட்சி காணவந்த தம் நோக்கத்தை நாவுக்கரசர் தெரிவித்தார். "கயிலை மாமலை மானிடர் சென்றடைவதற்கு எளிதோ? அமரரும் அணுகுவதற்கு அரியது; நீர் இம்மட்டில் மீள்வதே கடன்'' என்று முனிவர் அருளியது கேட்டு,

> ''ஆளு நாயகன் கயிலையி லிருக்கைகண் டல்லால்
> மாளு மிவ்வுடல் கொண்டுமீ ளேன்'' (பெ.பு. திருநாவு. 366)

என்று நாவுக்கரசர் மறுத்துரைத்தார்.

முனிவராய் வந்த இறைவர் வானில் மறைந்து, ஓங்கு நாவினுக்கரசனே, எழுந்திரு" என்று வான்மொழியாகக் கூறியருளினார். ஊறுபாடுகள் முற்றும் நீங்கிய திருமேனியுடன் நாவுக்கரசர் எழுந்திருந்து, ''அண்ணலே, கயிலையில் இருந்த நின் திருக்கோலத்தை நான் கண்ணினாற் காண அருள் புரி'' என்று வேண்டினார். இறைவர் மீண்டும் வான்மொழியாக, "இப்பொய்கையுள் மூழ்கித் திருவையாற்றில், நாம் கயிலையில் இருக்கும் காட்சியைக் காண்க" என்று பணித்தார்.

நாவுக்கரசர், திருவைந்தெழுத்தைச் சொல்லிப் பொய்கையுள் மூழ்கினார். திருவையாற்றில் உள்ள பொய்கையில் எழுந்தார்.

திருவையாற்றில் உள்ள இயங்கியல், நிலையியல் உயிர்கள் அனைத்தும் சிவமும் சத்தியுமாகி அவர்க்குக் காட்சியளித்தன. திருக்கோயிலின் முன் அவர் வந்தபோது அக்கோயிலே கயிலை மலையாகக் காட்சியளித்தது; மறைகள் முழங்கின; திருமால், பிரம்மன், இந்திரன் முதலானோர் போற்ற, சித்தர், வித்யாதரர் களுடன் மாதவர் முனிவர் வணங்க, இறைவன் இறைவியோடு எழுந்தருளியிருக்கும் அருட்காட்சி கண்டு ஆனந்தம் அடைந்தார். சிறிது நேரத்தில் கயிலைக் காட்சியை இறைவன் மறைத் தருளினான். நாவுக்கரசர் வருந்தி, இதுவும் இறைவன் திருவருளே எனத்தெளிந்து, "மாதர்ப் பிறைக் கண்ணியானை" என்ற திருப்பதிகம் பாடித் தொழுதார். அத்தலத்தில் சிலநாள் தங்கி உழவாரப் பணி செய்தார்.

### திருப்பூந்துருத்தியில் சம்பந்தர் சந்திப்பு

திருவையாற்றில் இருந்து, திருநெய்த்தானம், திருமழபாடி முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, திருப்பூந்துருத்தியை அடைந்தார். சில நாள் அங்குத் தங்கும் விருப்புடன் உயர்ந்த திருமடம் ஒன்று நிறுவினார். அங்கிருக்கும் நாளில் தனித் தாண்டகம், அடைவுத் தாண்டகம், திருவங்கமாலை முதலிய பாமாலைகள் பாடிப் பரவினார்.

திருமறைக் காட்டில், நாவுக்கரசரிடம் விடைபெற்றுச் சென்ற ஞானசம்பந்தர், பாண்டிய நாட்டில் சமணரை வாதில் வென்று திருநீற்றின் ஒளியும், சிவநெறியும் பரப்பி, அங்குள்ள பல தலங்களையும் வணங்கிச் சோழநாட்டுக்கு எழுந்தருளினார். நாவுக்கரசர் திருப்பூந்துருத்தியில் இருப்பதை அறிந்து அவரைக் காணும் விருப்புடன் பூந்துருத்தி நோக்கி வரலாயினர். நாவுக்கரசர் இதனை அறிந்து, அவரைத் தாமே எதிர்கண்டு வணங்க அவாவினார். நகரின் புறத்தில் ஒருவரும் காணாவகையில் அடியவர் கூட்டத் துடன் உட்புகுந்து, சம்பந்தரின் சிவிகையைத் தாமும் ஒருவராயத தாங்கி வந்தார். பூந்துருத்தியை நண்ணிய அளவில், "அப்பர் எங்குற்றார்?" என்று சம்பந்தர் வினவ, நாவுக்கரசர்

"......உம்மடியே னும்மடிக டாங்கிவரும்
பெருவாழ்வுவந் தெய்தப் பெற்றிங்குற் றேன்" (பெ.பு. திருநாவு. 396)

என்றார். கேட்ட சம்பந்தர் பதைபதைத்து விரைந்து அப்பரைப் பணிய வந்தார். அவர்க்கு முன் நாவுக்கரசர் சம்பந்தரை வணங்கினார்.

## இருவரும் பூந்துருத்தித் திருக்கோயில் சென்று பொய்யிலியாரைப் பணிந்து நாவுக்கரசர் திருமடத்தில் தங்கினர்

பாண்டிய நாட்டில் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் சம்பந்தர் நாவுக்கரசரிடம் கூறினார். மங்கையர்க்கரசியாரின் அன்பையும் குலச்சிறையாரின் பெருமையினையும் கேள்வியுற்ற நாவுக்கரசர் பாண்டிநாடு செல்ல விழைந்தார். சம்பந்தருக்குத் தொண்டை நாட்டுத் தலங்களின் சிறப்பை நாவுக்கரசர் எடுத்துக்கூற, சம்பந்தர் தொண்டை நாட்டுத் தலங்களை வழிபடுவதற்குப் பூந்துருத்தி யினின்றும் விடைபெற்றுச் சென்றார். நாவுக்கரசர் பாண்டிய நாட்டிற்குப் புறப்பட்டார்.

### பாண்டிய நாட்டுப் பயணம்

பாண்டிய நாட்டில், முதற்கண் திருப்புத்தூருக்குச் சென்று வழிபட்ட நாவுக்கரசர், பின்னர் மதுரைத் திருவாலவாய் சேர்ந்தார். ஆலவாய்ப் பெருமானையும், அங்கயற்கண்ணியையும் வணங்கி, "முளைத்தானை" என்று தொடங்கும் திருத்தாண்டகம் பாடிப் போற்றினார். பாண்டிய மன்னன் நெடுமாறனும், மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் அடிபணிந்து போற்ற மதுரையில் சில நாள் தங்கினர். பின், திருப்பூவணம், இராமேச்சுரம், திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலாகப் பாண்டி நாட்டுத்தலங்களை வணங்கிக் கொண்டு, சோழ நாடடைந்து மேலும் தலங்களைப் பணிந்து திருப்புகலூரை வந்தடைந்தார்.

### திருப்புகலூரில் திருவடிப்பேறு

திருப்புகலூரில் நாவுக்கரசர், கோயில் திருமுன்றிலில் உழவாரத் திருத்தொண்டினை நாள்தோறும் செய்து வந்தார். அந் நாட்களில், நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்து திருத்தாண்டகம் (சேத்திரக் கோவை), குறைந்த திருநேரிசை, தனித்திருநேரிசை, ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணத் தடைவு, பாவநாசப் பதிகம், இறைவனை நேர்பட நின்று அறைகூவும் சரக்கறைத் திருப்பதிகம் முதலான எண்ணிறந்த திருப்பதிகங்களைப் பாடியருளினார்.

இறைவர் நாவுக்கரசரின் பற்றற்ற நிலையை உலகிற்குக் காட்டத் திருவுளங்கொண்டார். அவருடைய உழவாரம் நுழைந்த விடமெல்லாம் பொன்னும் நவமணிகளும் மின்னின. ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் இயல்புடைய நாவுக்கரசர்

அவற்றைக் கல்லோடும், மண்ணோடும், புல்லோடும் ஒன்றாக மதித்து உழவாரப் படையால் ஏந்திக் குளத்தில் எறிந்தார். நாவுக்கரசரின் முன்பு தேவ அரம்பையர்கள், விண்ணிலிருந்து மின்னற் கொடிகள்போல் வந்து இழிந்தனர். இன்னிசை பாடினர்; இன்பச்சுவை புலப்படுமாறு ஆடினர். அவர்மேல் மழைபோல் மலர்களைத் தூவினர். காம இச்சை பெருகும்படி உடைகள் நெகிழ, கூந்தல் அவிழ அவரை நெருங்கிப் பலவித செயல்களைச் செய்தனர். தவச் செல்வராகிய நாவுக்கரசர் தம் சித்த நிலை சிறிதும் பிறழாது, ஒருமை நிலையில், தாம் செய்யும் பணியில் உறைப்புடையவராகத் திகழ்ந்தார்.

"பொய்ம்மாயப் பெருங் கடலில்" என்று தொடங்கும் திருத்தாண்டகம் பாடித் தம் உள்ளத் திண்மையைப் புலப்படுத்தினார். ஒரு செயலும் செய்யமாட்டாது அரம்பையர் அவரை இறைஞ்சி அகன்றனர்.

சிவபெருமானின் திருவருட் பெருக்கில் ஒடுங்கி அவன் திருவடியை அடையும் காலம் அண்மையில் இருப்பதை உணர்ந்த நாவுக்கரசர் புகலூரிலேயே சிலநாள் தங்கினார். அந்தக் கரணங்கள் யாவும் இறைவன் திருவடியைத் தலைப்படும் செவ்வியை எய்தினார். புகலூர்ப் புனிதன் தன் சேவடிக்கீழ் எளியேனை இருத்தி அருள்புரிவான்" என்னும் முன்னுணர்ச்சி மூளப்பெற்றுப் பல திருவிருத்தங்கள் பாடிப்போற்றினார்.

புகலூர்ப் பெருமானை நோக்கி, "எண்ணுகேன், என் சொல்லி எண்ணுகேனோ" என்று தொடங்கும் திருத்தாண்டகம் பாடிப் போற்றினார். தம் எண்பத்தோராம் வயதில் சிவானந்த ஞானவடிவேயாகிச் சித்திரை மாதத்துச் சதயத் திருநாளில், எல்லாவுலகங்களும் வாழ்த்தி வணங்க, அண்ணலார் சேவடிக்கீழ் நாவுக்கரசர் அமர்ந்து இன்புற்றார்.

### ஆ. சமணச்சூழல்

நாவுக்கரசரின் இளமை வாழ்க்கை, துயரங்கள் தொடர்ந்து வந்த பெருந்துன்ப வாழ்க்கையாக அமைந்திருந்தது. அதனால் நிலையாமை உணர்வு அவர் மனத்தில் நிரம்பியது. குடும்பச் செல்வங்களை எல்லாம் அறம் பல புரிந்து மக்கட்குப் பயன்படுமாறு செய்தார். தம்பொருள் கொண்டு பிறர்க்கு இன்பம் விளைவித்தபோது கூட, அவர் மனத்தில் அமைதி இல்லை. தொடர்ந்து துன்பத்தில் தொடக்குண்டார். பல சமய நெறிகளை நாடி அறிந்தார்.

வடதமிழ் நாட்டில் பல்லவரும், தென் தமிழ்நாட்டில் பாண்டியரும் அப்போது ஆட்சி செய்தனர். அன்றைய அரசியல் செல்வாக்கு மிக்க சமயமாகச் சமணமே திகழ்ந்தது. சமணர்கள், நாடெங்கும் கல்வி நிறுவனங்கள், தத்துவ மையங்கள் அமைத்துச் சமயத்தைப் பரப்பி வந்தனர். கொல்லாமை, நிலையாமை ஆகிய கொள்கை களை வற்புறுத்திய சமணம் அந்தச் சூழ்நிலையில் நாவுக்கரசருக்கு ஏற்புடைய சமயமாகத் தோன்றியது. சைவம் விடுத்துச் சமணம் சார்ந்தார். அச்சமய நெறியெல்லாம் அறிந்து உணர்ந்து தருமசேனரானார்.

> "நாவுக்கரசரைப் பொறுத்தமட்டில் சமண சமயம் கூறும் தத்துவங் களில் ஈடுபட்டு அச்சமயம் புகுந்தார். ஆனால் சமயம் கூறும் முறையில் அச்சமயிகள் வாழவில்லை. அரசியல் செல்வாக்கும் அதிகார வேட்கையும் சமயிகளிடம் புகுந்துவிட்டன... அச்சமயம் கடவுள் நம்பிக்கையில்லாத சமயமாகும்.. நாளாவட்டத்தில் இந்த நம்பிக்கை யின்மை அவரை வாட்டியது. அவருடைய பரம்பரையில் ஊறிவந்த அடிப்படையான நம்பிக்கைகள் அவ்வளவு எளிதில் அவரை விட்டுவிடவில்லை....எந்த அமைதியை நாடி அங்குச் சென்றாரோ அது கிடைக்கவில்லை... மேலும் அவர் நினைத்த அகிம்சை என்பது அச்சமயத்தில் பேச்சளவில் கொள்கையளவில் இருந்ததே தவிர காரியத்தில் காட்டப்படவில்லை"

என அ.ச. ஞானசம்பந்தன் கூறுவன யாவும், அப்பர் சமணச் சூழலில் இருந்த போது காலப்போக்கில் அவருக்கு ஏற்பட்ட அனுபவங்களாயின.

திலகவதியாரின் வேண்டுதலுக்குச் சிவபெருமான் செவிசாய்த்து அளித்த உறுதிமொழியினால் நாவுக்கரசருக்குச் சூலைநோய் தோன்றியது. அவர் மேற்கொண்ட சமண சமய வாழ்க்கை முறை களும் அவருடைய உடல்நிலையைப் பெரிதும் பாதிக்கும் அளவிற்கு அமைந்திருந்தன. உடன் இருந்த சமணர்களால் அவருக்கு ஏற்பட்ட கொடிய வயிற்று நோயைத் தீர்க்க முடியவில்லை. நோயின் கொடுமை, மன அமைதியின்மை ஆகிய இரண்டும் சமண சமயத்தின் மீது வெறுப்பைத் தோற்றுவித்தன. இந்நிலையில் பல்லாண்டு காலம் தமக்கையைப் பிரிந்து வாழ்ந்த நாவுக்கரசருக்கு அவரைக் காணும் எண்ணமும் ஏற்பட்டது. சமணத்தில் இருந்த தம்பியார் தம் தாய்ச் சமயத்திற்குத் திரும்பவேண்டும் என்று நாளும் எண்ணியிருந்த திலகவதியாருக்கும் இஃது ஒரு வாய்ப்பாக அமைந்தது. நாவுக்கரசர் மனமாற்றம் பெற்றுச் சமணம் விடுத்துச் சைவம் சேர்ந்தார். இதனை ஆ. வேலுப்பிள்ளை கீழ்க்கண்டவாறு விளக்குவர்.

"தரும சேனருக்கு வந்த சூலைநோயைச் சமணரால் தீர்க்க முடியாமல் போனதும், சைவராகிய திலகவதியாராலே பூசப்பெற்ற திருநீறு சகிதம் சூலைநோய் தீர்க்க ஆற்றல் பெற்றதும் தமிழர் சமய வரலாற்றில் ஒரு திருப்பத்தின் மையமாக அமைந்துவிட்டன. சமணமும் தருமசேனர் என்ற பெயரும் அழிந்தன. அந்த அழிவிலே சைவமும் திருநாவுக்கரசர் என்ற பெயரும் தோன்றின"[2]

சமணத் தலைவராகத் திகழ்ந்து புகழ் பெற்ற தருமசேனர், சைவ சமயம் புகுந்து நாவுக்கரசரானதைச் சமணர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அரசியல் செல்வாக்கினால் வலிமை மிக்க சமணர்கள் நாவுக்கரசருக்கு இன்னல் விளைக்க முற்பட்டனர்.

"பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மன் சமணனாதலால், பல்லவர் பேரரசின் நிர்வாக இயந்திரமே சமணர் விருப்பத்திற்கேற்ப அப்பருக்கு எதிராக இயங்கியது... அப்பர் ஒரு பேரரசையே எதிர்த்துப் போராட்டம் தொடங்க வேண்டியிருந்தது. மலைபோல் நின்றார் அப்பர்; வந்த இடுக்கண்கள் இடுக்கணுற்றன. அப்பர் வெற்றிபெற்றார். பல்லவ மன்னன் அப்பர் கொள்கையை ஏற்றான். வரலாறு அறிந்தவரையில், தமிழ் மண்ணில் நடந்த முதல் சாத்துவிக எதிர்ப்புப் போராட்டம் வெற்றி பெற்றது"[3]

என்று ஆ. வேலுப்பிள்ளை மேலும் குறிப்பிடுவர். அப்பருக்கு நேர்ந்த இத்துயரச் சூழல்களைச் சேக்கிழார் தம் புராணத்துள் ஐம்பத்தைந்து பாடல்களில் விளக்கியுள்ளார் (பெ.பு. திருநாவு. 79-133).

'கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம்' என்று சேக்கிழார் கூறியதற்கேற்பவே, நாவுக்கரசருக்குச் சமணர்கள் உயிர் போக்கும் பல இன்னல்களை விளைவித்தனர். திருநீறும், ஐந்தெழுத்தும் துணைக்கொண்டு அப்பர் எதிர்த்து நின்றார். அவர்கள் இழைத்த துன்பங்கள் அப்பர் வாழ்வில் நல்ல வளர்ச்சிப்படிகளாக மாறின. மன்னனும் மக்களும் தலைவணங்கத்தக்க பெருமையுடையவராகத் திகழ்ந்தார் அப்பர்.

திருவாரூர்ப் பதிகம் ஒன்றில் பத்துப்பாடல்களிலும், தாம் சமணத்தில் இருந்த சூழலை நினைத்து அப்பர் மனம் வருந்திப் பாடியுள்ளார்.

"கரப்பர்கண் மெய்யைத் தலைபறிக்
கச்சுக மென்னுங் குண்டர்
உரைப்பன கேளாதிங் குய்யப்போந்
தேனுக்கு முண்டு கொலோ

திருப்பொலி யாரூர்த் திருமூலட்
 டானன் றிருக் கயிலைப்
பொருப்பன் விருப்பமர் தொண்டர்க்குத்
 தொண்டராம் புண்ணியமே" (4:101:8)

என்று கூறிச், சமணத்தில் இருந்து வந்த தமக்கு உய்வு கிடைக்குமா என மனம் வருந்தினார். மேலும்,

"......பொய்யினை மெய்யென் றெண்ணி
நெறியலா நெறிகள் சென்றேன்" (4:54:4)

"ஓர்த்துள வாறுநோக்கி உண்மையை உணராக்குண்டர்
வார்த்தையை மெய்யென்றெண்ணி மயக்கில் வீழ்ந்து அழுந்துவேனை"
(4:73:2)

"சினந்திருத்துஞ் சிறுப்பெரியார் குண்டர் தங்கள்
செதுமதியார் தீவினைக்கே விழுந்தேன்" (6:40:6)

"அறம் தெரியா ஊத்தைவாய் அறிவில் சிந்தை
 ஆரம்பக் குண்டரொ டயர்த்து நாளும்
மறந்துமரன் திருவடிகள் நினைய மாட்டா
 மதியிலியேன்" (6:91:8)

என்று, தம் பதிகங்கள் பலவற்றில், தாம் சமணத்தில் இருந்தமைக்கு வருந்திப் பாடுவதைக் காணமுடிகின்றது.

'ஒன்றாக நல்லது கொல்லாமை' (குறள் 323)

'நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
 கொல்லாமை சூழும் நெறி' (குறள் 324)

என்றாங்கு, உயரிய நெறியாகிய கொல்லாமை நெறியை முதன்மை யாகப் போற்றிய சமண சமயத்தினர், அந்நெறிமுறையை மீறியமையும் ஈண்டு எண்ணத்தக்கது. அப்பருக்குத் தீங்கு விளைத்த சமணர்கள் சங்க காலம் முதல் தமிழகத்தில் சைவ வைணவர்களுடன் காழ்ப் பின்றி வாழ்ந்த சமணர்கள் இல்லை என்றும், களப்பிரர் காலத்தில் இங்குக் குடியேறின வேற்றுநாட்டுச் சமணர்கள் என்றும் அ.ச. ஞானசம்பந்தன் கூறுவர்.[4] சங்ககாலத்தில் சைவ, வைணவப் பாகுபாடு இருந்தமைக்கும், சமணர்கள் சைவ, வைணவர்களோடு காழ்ப்பின்றி வாழ்ந்தமைக்கும் போதிய வரலாற்றுச் சான்றுகள் இல்லை. அப்பர் பெருந்தகைக்குத் தீங்கு விளைத்த சமணர்கள் குடியேறிய வேற்று நாட்டுச் சமணர்கள் என்று கருதுவதற்கும் ஏற்ற சான்றுகள் இல்லை. எவ்வாறாயினும் சமய நெறிகளைப் போற்றி அப்பர் காலத்தில் வாழ்ந்த சமணர்களின் வாழ்க்கை முறை

அச்சமய நெறிகளுக்கு மாறாக அமைந்திருந்தது. எனவேதான் அச் சமணர்களையும், சமணச் சூழலையும் அப்பர் வெறுத்தொதுக்க நேர்ந்தது.

## இ. தமக்கையும் தம்பியும்

தம்பியார் திருநாவுக்கரசர் உயிர்வாழ வேண்டும் என்பதற் காகவே உயிர் வாழ்ந்தவர் தமக்கையார் திலகவதியார். தம்பியார் புறச்சமயம் புகுந்தார் என்பதறிந்து, தம் வாழ்வே பொருளற்றுப் போய் விட்டதென்று பெருந்துயருற்றார். அவர் மனத்தை மாற்றி அவரை மீண்டும் சைவராக்க வேண்டுமென்று அதிகை வீரட்டரை நாளும் வேண்டினார்.

திலகவதியார் வேண்டுதலுக்கு நம்பிக்கையளிக்கும் வகையில்,

'முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றான்
அன்னவனை யினிச்சூலை மடுத்தாள்வம்' (பெ.பு. திருநாவு. 48)

என்று அதிகைப் பெருமான் மொழிந்ததாகச் சேக்கிழார் குறித்துள்ளார்.

நாவுக்கரசரின் முன்னைத்தவம் பற்றி இருவேறு கதைகள் வழங்குகின்றன. இவ்விரு கதைகளும் நாவுக்கரசர் சமணம் புகுந்தமைக்கும், சூலைநோய் உற்றமைக்கும் அவருடைய முற் பிறவியைக் காரணங்காட்டிக் கூறப்படுவனவாய் உள்ளன.

இராவணன் வானவீதியில் மலர் விமானத்தில் உலாவரும் போது, குறுக்கிட்டு நின்ற கயிலை மலையைப் பெயர்த்துத் தோளில் வைக்க முயன்றான். மலையசைவால் உமை நங்கை அஞ்ச, கால் விரலூன்றினான் இறைவன். அதனால் இராவணன் மலையின் கீழ் அகப்பட்டுப் பெருந்துன்புற்றான். அவ்வழியே வந்த வாகீச முனிவர், இராவணன் துன்புறும் நிலை காணச் சகியாது 'சங்கரன் சாமகானப் பிரியன்' என்று கூறி அவனுக்குச் சிவனருள் பெறும் வழியைக் குறிப்பால் உணர்த்தினார். அதுகேட்ட இராவணன், தன் ஒருதலையைத் துண்டித்துக் கைநரம்புகள் கொண்டு வீணை செய்து சாமகானம் இசைத்தான். அவனுக்குச் சிவனருள் கிடைத்தது. சிவபெருமான் உளக் குறிப்பறியாது இராவணனுக்கு உதவியதால் வாகீச முனிவர் மண்ணுலகில் பிறந்து சமணம் புகுந்து சூலை நோயால் துன்புற்றார் என்பது ஒரு கதை[5].

கோதாவிரிக் கரையில் தவம் புரிந்து கொண்டிருந்த சாந்திபத முனிவர் என்பவர் தம்மை நாடிவந்து, உண்மைச் சமயம் யாது?

என வினவிய முனிவர்களுக்குச், 'சமணமே மெய்ச் சமயம்' என்று தம் ஆற்றல் விளங்கக் கூறினார். அவர் சமண சமயமே சிறந்ததென்று நிலைநாட்டியதன் விளைவாக, அம்முனிவர்களால் சாபம் பெற்று மறுபிறவியில் மருணீக்கியராகப் பிறந்து, சமணம் புகுந்து சூலைநோயால் துன்புற்றார் என்பது மற்றொரு கதை[6].

சேக்கிழார் கூறியனவற்றுள்,

"வருஞானத் தவமுனிவர் வாகீசர்" (பெ.பு. திருநாவு. 1)

"முன்னமே முனியாகி எமையடையத் தவ முயன்றான்" (பெ.பு. திருநாவு. 48)

"பண்டுபுரி நற்றவத்துப் பழுதினள விறைவழுவும் தொண்டர்" (பெ.பு. திருநாவு. 49)

என வரும் மொழிகள் நாவுக்கரசரின் முற்பிறப்புச் செய்திகட்குச் சான்றுகளாக உள்ளன.

சிவக்கவிமணி, நாவுக்கரசரின் முற்பிறப்பைப் பற்றி,

"நாயனார் முன்னைப் பிறப்பில் சிவனை அடைய நல்ல தவம் புரிந்த முனிவர் என்பதும் அத்தவத்தில் சிறிது வழுவினார் என்பதும் ஐயமின்றிப் பெறப்படும். 'நில்லாத நிணக்குரம்பைப் பிணக்கம் நீங்க நிறைதவத்தை அடியேற்கு நிறைவித்து' (6:84:8) என்ற திருத் தாண்டகத்தின் அகச்சான்று கொண்டும் அவை ஐயமின்றித் துணியப்படும். 'வரும் ஞானத் தவமுனிவர்' என்பதில் 'வரும்' என்றதும் இக்கருத்துக்களை வலியுறுத்துகின்றது. வாகீசர் என்றது முற்பிறப்பிற் கொண்ட பெயராயும் திருநாவுக்கரசு என்றது அப்பொருளே பட இப்பிறப்பிற் கொண்ட பெயராயும் உள்ள வேற்றுமை கருதியே ஒரு பொருள்படும் இரண்டு பெயர்களை இங்கு ஆசிரியர் கூறினார் என்பதும் பொருந்தும்"[7]

எனக் கூறுவர்.

இம்முற்பிறப்புச் செய்திகட்கு

"முன்னம்அடி யேன்அறி யாமையினான்
முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப்
பின்னைஅடி யேன்உமக் காளும்பட்டேன்" (4:1:4)

என்ற பாடற் பகுதியை அகச்சான்றாகச் சுட்டுவர். எனினும் இப்பகுதி நாவுக்கரசரின் சமணஞ் சார்ந்த வாழ்வைக் குறிப்பதாகவே உள்ளது.

கயிலையில் ஆலால சுந்தரராய் இருந்து, பூவுலகில் நம்பியாரூரராய்த் தோன்றிய சுந்தரரின் வாழ்வினைச் சேக்கிழார் வெளிப்படக் கூறியுள்ளார் (பெ.பு. திருமலைச் சிறப்பு. பா.எ். 22-29). அதுபோல, நாவுக்கரசரின் முற்பிறப்புப் பற்றிய செய்தியை

வெளிப்படக் கூறவில்லை. நாவுக்கரசர், முற்பிறவியில் வாகீச முனிவர், சாந்தீபத முனிவர் ஆகியோராக இருந்தார் என்று கூறுவது, பிற்காலத்தில் கற்பனையாகக் கூறப்பெற்றதாகவே கொள்ளத்தக்கது. இம்முற்பிறவிக் கதைகளுக்குக் கூறப்பெறும் சான்றுகளும் பொருத்த முடையனவாக இல்லை. நாவுக்கரசர், வாகீசர் ஆகிய பெயர்கள் சொல்லளவில் ஒப்புமையுடையனவேயன்றி முற்பிறவிக் கதைக்குச் சான்றாக அமைவனவல்ல.

நாவுக்கரசர் சமணம் புகுந்ததற்கும் சூலைநோய் உற்றதற்கும் அவர்தம் வாழ்க்கைச் சூழலே காரணமாகும். அவர் மீண்டும் சைவம் புகுந்து அருளாளராய்த் திகழ்ந்தமைக்குத் திலகவதியாரின் வேண்டுதலே காரணமாய்த் திகழ்கின்றது.

திலகவதியாரின் அருட்பணி வாழ்வு நாவுக்கரசர் தம் பதிகங் களில் ஆங்காங்கு உணரக் கிடக்கின்றது. நாவுக்கரசர் 'ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய்' (4:94:1) எனத் தமக்கையாருக்கு நன்றி கூறும் வகையில் பாடியுள்ளார். தாய், தந்தை முதலாகப் பல்வேறு உறவினர்களாக இறைவன் திகழ்கின்றான் என்பதைக் கூறும் திருமுறை அருளாளர்கள் உடன்பிறப்பைப் பற்றிக் குறிப்பிடவில்லை. 'உடன் தோன்றினர்' என்று நாவுக்கரசர், அவர்தம் தமக்கையாரை நினைவிற் கொண்டே குறிப்பிட்டுள்ளார் எனலாம்.

திலகவதியார் தொடங்கிய திருப்பணித் தொண்டினையே ஊர்தோறும் சென்று நாவுக்கரசர் நிகழ்த்தியுள்ளார். இஃது அவர், தம் தமக்கையாரின் இறைத்தொண்டுக்குச் செய்த நன்றியாகவும் திகழ்கின்றது.

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் *அலகிட்டு மெழுக்கு மிட்டுப்*
*பூமாலை* புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் *கும்பிட்டுக்* கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீயென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே" (6:31:3)

என்னும் ஆரூர்த் தாண்டகப் பாடலில் தம் தமக்கையாரின் திருத்தொண்டுகளையே நினைவு கூர்ந்தார் என்று கொள்வதற்கு இடமுள்ளது. அலகிடுதல், மெழுக்கிடுதல், பூமாலை தொடுத்தல்

ஆகிய தொண்டுகளைத் திலகவதியார் செய்தார் என்பதனைச் சேக்கிழாரும் விளக்கியுள்ளார் (பெ.பு. திருநாவு. பாள். 43-44).

"எம்மை யாரிலை யானுமு ளேனலேன்
எம்மை யாரு மிதுசெய வல்லரே
அம்மை யாரெனக் கென்றென் றரற்றினேற்
கம்மை யாரைத்தந் தாராரூ ரையரே" (5:6:6)

இப்பாடலில் நாவுக்கரசர், தம் வாழ்வில் நடந்த ஒரு பெருந்துயரச் சூழலையும், அதன் பின்னணியில் திலகவதியார் தந்த ஆதர வினையும், அவரது பெரும் தியாக வாழ்வினையும் நினைவு கூர்ந்துள்ளமை புலனாகின்றது. தாய் தந்தையரை இழந்த நிலை யில், தமக்கு அம்மையும் அப்பருமாய்த் திகழ்ந்த திலகவதியாரை நாவுக்கரசர் போற்றும் திருப்பாடல் இதுவாகும். இக்குறிப்புகளிலிருந்து திருநாவுக்கரசரின், 'திருத்தொண்டுநெறி'க்குத் திலகவதியாரே முழுமுதற் காரணமாய்த் திகழ்ந்தவர் என்பதை உணரமுடிகின்றது.

### ஈ. அப்பரின் தலப்பயணம்

தலப்பயணம் செய்து, தமிழகத்தைப் பல்வேறு வகைகளில் ஒருங்கிணைத்து, மக்கட்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்திச் சைவ நெறியைத் தழைக்கச் செய்த பெருமை ஞானசம்பந்தர், அப்பர் ஆகிய இருவரையே சாரும்.

அப்பர் சென்ற தலங்களைத் திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் முறைப்படுத்திக் கூறியுள்ளார். அவர் கூறிய முறைப்படி அப்பர் சென்ற தலங்கள் தொண்ணூற்றாறு[8]. அப்பர் பாடிய திருமுறை களின் அடிப்படையில் அவர் சென்று வழிபட்ட தலங்களின் எண்ணிக்கை நூற்றிருபத்தைந்தாக உள்ளது[9].

திருமுறைச் செல்வர் க. வெள்ளைவாரணனார் பண்டைத் தமிழ்நாட்டில் இருந்தனவாக 274 சிவத்தலங்களைக் குறிப்பிட்டு அவற்றைச் சோழநாடு முதலான ஒன்பது நாட்டுப் பிரிவுகளில் அடக்கிக் காட்டியுள்ளார்[10]. அப்பிரிவுகளின் அடிப்படையில்,

நடுநாட்டில் உள்ள 22 சிவத்தலங்களில் நாவுக்கரசர் சென்று வழிபட்டுப் பாடிய தலங்கள் ஒன்பது.

சோழ நாட்டில் உள்ள 190 சிவத்தலங்களில் நாவுக்கரசர் பயணம் மேற்கொண்டு பாடிய தலங்கள் 99. நாவுக்கரசரின் தலப் பயணத்தில் சோழநாட்டுத் தலங்களே மிகுதியாக உள்ளன.

கொங்கு நாட்டில் உள்ள ஏழு சிவத்தலங்களில் நாவுக்கரசரால் பாடல் பெற்ற தலம் பாண்டிக் கொடுமுடி என்ற தலமேயாகும்.

தொண்டை நாட்டில் உள்ள 32 சிவத்தலங்களில், அவரால் பாடல் பெற்ற தலங்கள் ஒன்பது.

துளுவ நாட்டில் உள்ள கோகரணம், வடநாட்டில் உள்ள திருப்பருப்பதம், கயிலைச்சாரல் ஆகிய தலங்களுக்கும் நாவுக்கரசர் சென்று பதிகங்கள் பாடியுள்ளார்.

பாண்டிய நாட்டில் உள்ள 14 தலங்களில் நாவுக்கரசரின் பாடல் பெற்ற தலங்கள் நான்கு.

திருக்கோலக்கா, திருமயிலை போன்ற பிற சிவத்தலங்களுக்கும் சென்று நாவுக்கரசர் வழிபட்டுள்ளார் (பெ.பு. திருநாவு. பா.எ. 189; 332). ஆயினும் அவற்றிற்குத் தனிப்பதிகங்கள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. நடுநாட்டுத் திருவதிகையில் தொடங்கிய அவரது தலப்பயணம், சோழநாட்டுத் திருப்புகலூரில் நிறைவெய்துகின்றது.

| வரிசை எண் | தலங்களின் எண்ணிக்கை | இப்போது கிடைக்கும் பதிகங்களின் எண்ணிக்கை | பதிகங்களின் கூடுதல் |
|---|---|---|---|
| 1 | 76 | 1 | 76 |
| 2 | 23 | 2 | 46 |
| 3 | 7 | 3 | 21 |
| 4 | 5 | 4 | 20 |
| 5 | 8 | 5 | 40 |
| 6 | 1 | 7 | 7 |
| 7 | 2 | 8 | 16 |
| 8 | 1 | 12 | 12 |
| 9 | 1 | 16 | 16 |
| 10 | 1 | 21 | 21 |
| | 125 | | 275 |

நாவுக்கரசர் பாடியுள்ள 312 பதிகங்களில் தலஞ்சாா்ந்த பதிகங்கள் 275 நீங்கலாக எஞ்சியுள்ள முப்பத்தேழும் பொதுப்பதிகங்கள். அவற்றுள் நான்காந் திருமுறையில் உள்ளவை 17, ஐந்தாம் திருமுறையில் உள்ளவை 12, ஆறாம் திருமுறையில் உள்ளவை 8. இப்பதிகங் களிலும் பல தலங்களைப் பற்றிய குறிப்புக்கள் இடம்பெற்றுள்ளன.

அப்பர் தலப்பயணம் செய்தபோது அடியாா் பலரும் அவருடன் பயணம் செய்தனா். ஒவ்வோா் ஊராரும் அவா்களை எதிா்கொண்டு வரவேற்றனா். அக்காலத்தில் அவா்கள் தங்குவதற்கு எல்லாத் தலங் களிலும் மடங்கள் இல்லை. திருவதிகை, திருநல்லூா், சீா்காழி, திருப்புகலூா், திருக்கடவூா், திருமறைக்காடு, திருப்பூந்துருத்தி, திருவாரூா், திருவீழிமிழலை, மதுரை, காஞ்சி, காளத்தி, சாத்தனூா், கொடுங்கோளூா், ஒற்றியூா் ஆகிய பதினைந்து ஊா்களில் மடங்கள் இருந்தன. திருப்பூந்துருத்தியில் அப்பா் தாமே ஒரு மடம் கட்டி அங்குப் பலநாள் தங்கியிருந்த குறிப்புள்ளது.

தலப்பயணம் மேற்கொண்ட நிலையில் அப்பா் தம்முடைய பதிகங்களில் தலங்களின் இருப்பிடம், தலப்பெயா், கோவிற்பெயா், இறைப்பெயா், கோவில்களில் நடைபெற்ற விழாக்கள், தலச்சிறப்புக்கள் முதலியனவற்றைச் சுட்டியுள்ளாா். பாவநாசத் திருப்பதிகம், சேத்திரக் கோவை ஆகியவற்றுள் தலப்பெயா்களைப் பட்டியலிட்டுக் காட்டி யுள்ளாா். அடைவுத் திருத்தாண்டகத்தில் 'பள்ளி' என முடியும் சிவத்தலங்கள் சிலவற்றைச் சுட்டியுள்ளாா். இப்பதிகத்தின் பிற பாடல்களிலும் இதுபோலவே வீரட்டம், குடி, ஊா், காடு, வாயில், சுரம், மலை, ஆறு, குளம், கா, துறை என முடியும் பல தலங்களின் பெயா்களைத் தொகுத்துக் கூறியுள்ளாா்.

அவா் காலத்தில் இருந்த பல்வேறு கோயில் அமைப்புக் களைப் பற்றி,

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
*பெருங்கோயில்* எழுபதினோ டெட்டும் மற்றுங்
*கரக்கோயில்* கடிபொழில் சூழ் *ஞாழற் கோயில்*
கருப்பறியற் பொருப்பனைய *கொகுடிக் கோயில்*
இருக்கோதி மறையவா்கள் வழிபட் டேத்தும்
*இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்*
*திருக்கோயில்* சிவனுறையுங் *கோயில்* சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே" (6:71:5)

என வரும் பாடலில் எடுத்துக் காட்டியுள்ளாா்.

இவ்வாறு தலப்பயணங்கள் மேற்கொண்டு தலங்களையும் கோயில்களையும் பாடி, உழவாரப் பணிசெய்து, மடங்களை அமைத்து மக்கட் பணிபுரிந்து நாவுக்கரசர் பெருந்தொண்டாற்றியுள்ளார்.

### உ. அற்புத நிகழ்ச்சிகள்

உலகிடை எண்பத்தொரு ஆண்டுகள் வாழ்ந்த நாவுக்கரசர் சமண சமயத்தில் இருந்து, மீண்டும் சைவ சமயம் சார்ந்தபின், இறையருள் கைவரப்பெற்ற அருளாளராகத் திகழ்ந்தார். அவருடைய வாழ்வில் இறையருளால் பல அற்புத நிகழ்ச்சிகள் நடந்தன. அந்நிகழ்ச்சிகள் சைவ சமய வளர்ச்சிக்கும், நிலைபேற்றுக்கும் உறுதுணையாக இருந்தன.

1. நீற்றறை குளிர்ந்தமை
2. நஞ்சு அமுதானமை
3. கொலைக்களிறு வலம் வந்து வணங்கியமை
4. கல் தெப்பமாகக் கடலில் மிதந்தமை

இந்நான்கும் சமணரின் வஞ்சகச் செயல்களிலிருந்து உய்யும் பொருட்டு இறைவன் நிகழ்த்தியவை.

1. திருப்பெண்ணாகடத்தில், திருத்தூங்கானை மாடத்துப் பெருமானை வேண்டித் தம் தோளில் இடபக் குறியும் சூலக் குறியும் பொறிக்கப் பெற்றமை.
2. நல்லூரில் திருவடி தீக்கை பெற்றமை.

இவ்விரண்டும் புறச்சமயப் புன்மை நீங்க அப்பர் வேண்டிப் பெற்ற செயல்கள்.

1. அப்பூதி அடிகள் மகனுக்கு விடம் தீர்த்தமை.

இஃது அடியார் நலங்கருதி இறையருள் துணைகொண்டு அப்பர் நிகழ்த்திய செயல்

1. திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றமை
2. மறைக்காட்டில் திருக்கதவம் திறப்பித்தமை
3. திருவாய்மூரில் இறைவன் திருக்காட்சியை ஞானசம்பந்தர் காட்டக் கண்டு மகிழ்ந்தமை.

இம்மூன்றும் ஞானசம்பந்தருடன் இருந்த காலத்தில் நிகழ்ந்த செயல்கள்.

1. பழையாறை வடதளியில், சமணர்களால் மறைக்கப்பட்ட சிவலிங்கத்தை, உண்ணா நோன்பிருந்து, வெளிப்படுத்தச் செய்து கண்டு களித்தமை.

இது சமணரால் மறைக்கப்பட்ட சிவத்திருக்கோலத்தை வெளிப் படுத்த அப்பர் செய்த செயல்.

1. திருப்பைஞ்ஞீலியில் இறைவன் அளித்த பொதிசோறு உண்டு இளைப்பு நீங்கியமை.
2. திருவையாற்றில் கயிலைக் காட்சி கண்டமை.

இவை அப்பரடிகளுக்குப் பேரருள் காட்டிச் சிவபெருமான் நிகழ்த்திய செயல்கள்.

இந்நிகழ்ச்சிகள் அப்பர் வாழ்வில் புலனாகின்ற அருளியல் வெளிப்பாடுகள். அருளாளர்களிடத்தில் தோன்றலாகும் அற்புத நிகழ்ச்சிகள். அவ்வச்சமய மக்களுக்கு, இறையீடுபாட்டையும், சமய நம்பிக்கையையும் உருவாக்கும் உத்திகளாகத் திகழ்கின்றன. தேவார முதலிகள் மூவருள்ளும், நாவுக்கரசர் வாழ்வில் காணப்படும் அற்புத நிகழ்வுகளின் எண்ணிக்கை குறைந்தே காணப்படுகின்றது. அற்புத நிகழ்ச்சிகளைக் காட்டி மக்களைச் சைவத்திற்கு ஈர்ப்பதைக் காட்டிலும், அரனியல்பை உணரச் செய்து, அவர்களைச் சைவத்தில் நிலை நிறுத்துவதே தக்கது எனும் திண்மை உடையவர் அப்பராதலின், இவர் வாழ்வில் அற்புத நிகழ்ச்சிகள் அருகியே காணப்படுகின்றன. அவையும் வாழ்வில் ஏற்பட்ட இன்னல்களில் இருந்து அவர் விடுபடு வதற்கு, இறைவன் நிகழ்த்திய அருட்செயல்களாகவே அமைந்துள்ளன.

அப்பர், மீண்டும் சைவம் சார்ந்தமை கண்டு மனம் பொறாத சமணர்கள் செய்த நான்கு வஞ்சகச் செயல்களை, அவர்தம் மன உறுதியோடும், அஞ்சாமையோடும், திருவைந்தெழுத்தின் அருந் துணையோடும் வென்றுள்ளார்.

அப்பர், சைவம் சார்ந்த நிலையில், தாம் முன்பு புறச்சமயமாகிய சமணத்தில் இருந்த மன உலைவு நீங்குவதற்காகவும், தம்மை மெய்யடியார் என்று உலகம் ஒப்பக் கருதுவதற்காகவும் இறைவனிடம், சூலக்குறி, இடபக்குறி மற்றும் திருவடி தீக்கை ஆகியவற்றைத் தாமே வேண்டிப் பெற்றார். எனவே இந்நிகழ்வுகள் அவரின் மெய்யடிமையைப் போற்றும் வகையில் இறைவன் அருளிய செய்கை களாகவே கொள்ளற்குரியன.

ஞானசம்பந்தரும், நாவுக்கரசரும் இணைந்து மேற்கொண்ட இரண்டாவது திருத்தலப் பயணத்தின்போது, மூன்று அற்புத நிகழ்ச்சிகள் நடைபெற்றன. திருவீழிமிழலையில் இறைவன் நாவுக்கரசருக்கு, வாசியில்லாக் காசு நல்கியமைக்கு அவர்தம் கைத்தொண்டு

செய்யும் பான்மையே காரணமாகத் தெரிகின்றது. திருமறைக்காட்டில் திருக்கதவம் திறப்பித்த அற்புத நிகழ்ச்சிக்கு அப்பர் பெருந்தகை உள்ளூற மகிழ்ந்தாலும், ஆளுடைய பிள்ளை அடைக்கப்பாடிய விரைவொடு ஒப்பிட்டு உள்ளூற வருந்திய வருத்தமே மேம்பட்டுத் தோன்றுகின்றது. இறைவன் திருவுள்ளம் அறியாது பாடியதாக அவர் பெரிதும் அஞ்சினார். அதனால் இறைவன் அழைக்க வாய்மூருக்குச் சென்ற நிலையிலும் அங்கு இறைவனைக் காணாமல் அயர்ந்தார். ஞானசம்பந்தர் வந்து கண்டு காட்டிய பின்னரே, நாவுக்கரசர் இறைவன் ஆடல் கண்டு போற்றினார். இந்நிகழ்ச்சியிலும் நாவுக்கரசரின் தன்னிரக்க உணர்வும் மேம்பட்ட பணிவுமே முதன்மை பெற்றுள்ளன.

பழையாறை வடதளி நிகழ்ச்சியும், இறைவனை வணங்குவதற்கு அப்பர் எடுத்துக்கொண்ட உறுதியை நிறைவேற்றுவதற்காக நிகழ்ந்த அருளிச் செயலாக உள்ளது. திருப்பைஞ்ஞீலி செல்லும் வழியில் பொதிசோறு பெற்றமையும், தம்மை ஒரு பொருளாகக் கொண்டு இறைவன் அளித்த கருணை என்றுதான் அப்பர் கருதுகின்றார்.

அப்பர் மேற்கொண்ட கயிலைப் பயணத்தை, இறைவன் இடை மடுத்துத் திருவையாற்றில் கயிலைக் காட்சியை அருளியதற்கு, 'மன்னு தீந்தமிழ் புவியின்மேல் பின்னும் தன்னை அவர் வழுத்த வேண்டும் என்பதே நோக்கமாக உள்ளது. மேலும் வயது மூத்துத் தளர்ந்த நிலையில் உள்ள அப்பர் தொடர்ந்து பயணம் செய்வதை விரும்பாத இறைவன் அவருக்கு மனமிரங்கிச் செய்த செய்கையாகவும் இஃது உள்ளது.

அப்பர் வாழ்வில் நிகழ்ந்த மேற்கூறிய அற்புதச் செயல்களில், எஞ்சியுள்ள ஒன்று அப்பூதியடிகள் மகனுக்கு விடம் தீர்த்தமை யாகும். இச்செயல் ஒன்றே அடியவர் பொருட்டு அப்பர் பெருமான் தாமே முன்னின்று வெளிப்படுத்திய செயற்கருஞ் செயலாகத் திகழ் கின்றது. ஞானசம்பந்தர் என்பு பெண்ணுருவாகச் செய்ததும், சுந்தரர் முதலையுண்ட பாலனை மீட்டதும் நாவுக்கரசரின் இச்செயற்கருஞ் செயலோடு ஒப்பு நோக்கத்தக்கவை.

சம்பந்தரும், சுந்தரரும் தம்பொருட்டு இறைவனிடம் வேண்டி நிகழ்த்திய பல அற்புத நிகழ்ச்சிகள் உள்ளன. ஆனால் அப்பர் வாழ்வில் அத்தகைய அற்புத நிகழ்ச்சிகள் இடம்பெறவில்லை. சூல, இடபக் குறிகள் பொறிக்கவும், திருவடி தீண்டப்பெறவும் இறைவனிடம் அவர் வேண்டியமை அவர்தம் தன்னலத்தைக் குறிக்காது இறையுணர்வுத் திறத்தையே குறிக்கொண்டிருப்பது கருதத்தக்கது.

## முடிபுகள்

அப்பரின் இளமை வாழ்வில் நேர்ந்த துன்பச் சூழல்கள், அவற்றால் தோன்றிய நிலையாமை உணர்வுகள் ஆகியவை அவரைச் சமண சமயம் புகச் செய்தன.

திலகவதியாரின் வேண்டுதலும் அப்பருக்கு ஏற்பட்ட சூலை நோயும் அப்பர் மீண்டும் சைவராவதற்கு வழிவகுத்தன.

அப்பர் திண்ணிய மனத்தராய் அஞ்சாமை கொண்டு சமண வீழ்ச்சிக்கும் சைவ எழுச்சிக்கும் பாடுபட்டார்.

சமயநெறிகளைப் போற்றாது வாழ்ந்த சமணரின் போக்கு அப்பருக்கு அம்மதத்தில் வெறுப்பினை உருவாக்கியது.

அப்பர் சமணம் புகுந்ததற்கும் சூலை நோய் உற்றதற்கும் முற்பிறப்புச் செய்திகள் காரணமானவையல்ல.

அப்பர் பயணம் செய்த திருத்தலங்கள் 125. இத்தலப் பதிகங்களில் தலப்பெயர், தலப்பெருமை, கோவில் அமைப்பு, விழாச் சிறப்பு ஆகியவை இடம்பெற்றுள்ளன.

அப்பர் வாழ்வில் நிகழ்ந்த அற்புத நிகழ்ச்சிகளில் புறச்சமய வீழ்ச்சிக்குக் காரணமானவை பல. விடந்தீர்த்த நிகழ்ச்சி அவரது செயற்கருஞ் செயலுக்குச் சான்றாகத் திகழ்கின்றது.

### அடிக்குறிப்புகள்

1. ஞானசம்பந்தன், அ.ச., பெரியபுராணம்-ஓர் ஆய்வு, ப. 254.
2. வேலுப்பிள்ளை, ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 104.
3. வேலுப்பிள்ளை, ஆ., தமிழர் சமய வரலாறு, ப. 82.
4. ஞானசம்பந்தன், அ.ச., பெரியபுராணம்-ஓர் ஆய்வு, ப. 253.
5. சுப்பிரமணிய முதலியார், சி.கே., வாகீசர் (அ) மெய்யுணர்தல், ப. 5.
6. மேலது, வாகீசர் (அ) மெய்யுணர்தல், ப. 15.
7. திருத்தொண்டர் புராணம், 3-1; 1266.
8. இராச மாணிக்கனார், மா., பெரியபுராண ஆராய்ச்சி, ப. 335-341.
9. காண்க; பின்னிணைப்பு, எண் 1.
10. வெள்ளை வாரணனார் க., பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பகுதி, ப. 947-960.

# 2. அப்பர் வாக்கு

அப்பர் வாக்கு என்னும் இவ்வியலில் சைவத் திருமுறைகளின் அமைப்பு, அப்பர் தேவார அமைப்பு, திருமுறை - தேவாரம் - பதிகம் என்னும் சொற்களின் பொருள் விளக்கம், அப்பர் தேவாரப் பதிகங்களின் தொகை, அவர் பாடிய பாடல்களின் எண்ணிக்கை, அவர் பதிகங்கள் பெற்றுள்ள பெயர்களின் அமைப்பு முறை, அப்பதிகங்களில் அமைந்துள்ள செய்திகளின் தன்மை ஆகியவை விளக்கப்பெறுகின்றன.

## அ. அப்பர் தேவாரம்

### திருமுறைப் பகுப்பு

'திரு', 'முறை' என்னும் இரு சொற்களின் சேர்க்கை திருமுறை. திரு என்பது அழகு, அறிவு, செல்வம் முதலிய பல சீரிய பொருள் களை உள்ளடக்கிய செஞ்சொல் ஆகும்.

'முறை' என்ற சொல்லுக்கு, உறவு ஒழுக்கம், ஒழுங்கு, ஊழ், கட்டு, குணம், பழமை, நூல், முறைமை, முறையீடு, வரிசை எனப் பலபொருள்கள் உள்ளன.[1] இவற்றுள், ஈண்டு முறை என்பது ஒழுங்கு, முறைமை மற்றும் நூல் என்னும் பொருள்களை உள்ளடக்கியதாக உள்ளது. முறைப்படுத்தி இயற்றப்பட்டமையின் 'முறை' என்பது நூலுக்குப் பெராயிற்று. 'முறை' என்ற சொல், நூல் என்ற பொருளில் வழங்குவதை,

"இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன்
முறைவரை வேனென முயல்வ தொக்குமால்"[2]

என வரும் கந்தபுராணச் செய்யுளடிகள் உணர்த்தும்.

திருமுறை என்ற சொல் வழக்கைப்,

"பாடுந்திருமுறை பார்ப்பதி பாதங்கள்"[3]

எனத் திருமந்திரத்திலும்,

"திருமுறையெழுதுவோர் வாசிப்போர்" (பெ.பு. கணநாதர்.3)

எனப் பெரியபுராணத்திலும் காண முடிகின்றது.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு என முறைப்படுத்தப் பெற்றுள்ளன. அவற்றைப் பாடியவர் இருபத்தெழுவர். 18,357 பாக்கள் திருமுறைகளில் அடங்கியுள்ளன. முதல் திருமுறை, இரண்டாந் திருமுறை, மூன்றாந் திருமுறையென இத்திருமுறைகள் எண்ணிக்கையின் அடிப்படையில் பெயர் பெற்றுள்ளன.

முதல் மூன்று திருமுறைகள் ஞானசம்பந்தர் பாடியன. மொத்தப் பாடல்கள் 4169.

நான்கு, ஐந்து, ஆறு திருமுறைகள் நாவுக்கரசர் பாடியன. மொத்தப் பாடல்கள் 3064.

ஏழாந் திருமுறை சுந்தரர் பாடியது. மொத்தப் பாடல்கள் 1026.

எட்டாந் திருமுறை மாணிக்கவாசகர் பாடிய திருவாசகமும், திருக்கோவையாரும் ஆகும். வாசகத்தில் 658 பாடல்களும், கோவையாரில் 400 பாடல்களும் உள்ளன.

ஒன்பதாந் திருமுறை திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் உள்ளடங்கியது. திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகியோர் பாடிய 301 பாடல்களின் தொகுப்பு.

பத்தாந் திருமுறை திருமூலர் அருளிய திருமந்திரம், 3047 பாடல்கள் கொண்டது.

பதினோராந் திருமுறை திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர் கோன், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீர தேவ நாயனார், கல்லாட தேவ நாயனார், கபில தேவ நாயனார், பரண தேவ நாயனார், இளம் பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி ஆகியோர் அருளிய 1406 பாடல்கள் கொண்ட தொகுப்பு நூல்.

பன்னிரண்டாம் திருமுறை, சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் புராணம் எனப் பெயர் பெறும் பெரியபுராணம். இந்நூலில் 4286 பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

முதல் மூவர் பாடிய தேவாரத் திருப்பதிகங்களை மட்டும் நம்பியாண்டார் நம்பி முதல் ஏழு திருமுறைகளாகத் தொகுத்துள்ளார். அவருக்குப் பின்னரே எஞ்சிய ஐந்து திருமுறைகள்

தொகுக்கப்பட்டுள்ளன. ஆயினும், திருமுறை கண்ட புராணம், நம்பியாண்டார் நம்பியே பதினொரு திருமுறைகளையும் தொகுத்தார் எனக் கூறுகின்றது.[4] பன்னிரு திருமுறைகளையும் நன்கு ஆராய்ந்த அறிஞர் க. வெள்ளைவாரணனார்,

> "திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய தேவாரத் திருப்பதிகங்களை மட்டுமே நம்பியாண்டார் நம்பி ஏழு திருமுறைகளாகத் தேடித் தொகுத்தார் எனவும், எட்டு முதல் பதினொன்று வரையுள்ள திருமுறைகள் நம்பியாண்டார் நம்பி காலத்திற்குப் பின் தோன்றிய பெருமக்களால் அம்முறையே தொகுக்கப் பெற்றிருத்தல் வேண்டுமெனவும் கொள்ளுதலே வரலாற்று முறைக்குப் பெரிதும் பொருந்துவதாகும்"[5]

என்று கூறியிருப்பதிலிருந்து நம்பியாண்டார் நம்பி முதல் ஏழு திருமுறைகளையே தொகுத்தார் என்பதே பொருந்தும்.

திருமுறைகளைப் பாடிய அருளாளர்கள், இறைவனை இடைவிடாது நினைந்து, அவனது பேரருள் தம்பால் விளங்கப் பெற்றவர்கள். எனவே, அவர்கள் வாயிலாகச் சிவபெருமானே இத்திருமுறைகளை வெளிப்படுத்தினான் எனக் கொள்ளுதற்கு இடமுண்டு.

"தெய்வத் தமிழ் நூல்களாகிய இத்திருமுறைகளை இறைவனால் அருளிச் செய்யப்பட்ட வேத சிவாகமங்களைப் போன்று இறைவனருளிய மறைகளாகவே கொண்டு போற்றிப் பயிலுதல் வேண்டுமென்பது முன்னோர் துணிபு."[6] ஞானசம்பந்தர் "எனதுரை தனதுரையா" (1:76:3) என்றும், நாவுக்கரசர், "பன்னிய செந்தமிழ் மாலை பாடுவித்தென் சிந்தை மயக்கறுத்த திருவருளினானை" (6:84:4) என்றும் கூறுவன கருதத்தக்கன. சுந்தரருக்குப் 'பித்தா' எனவும், சேக்கிழாருக்கு 'உலகெலாம்' எனவும் அடியெடுத்துக் கொடுத்தவன் இறைவன். எனவே, திருமுறைகள் 'தெய்வத் தமிழ்' எனப் போற்றப்பெறும் சிறப்புடையன.

## தேவாரம் - ஆட்சிமுறை

ஞானசம்பந்தர், அப்பர் சுந்தரர் ஆகிய மூவரும், இறைவனை இன்னிசையால் பரவிப் போற்றிய செந்தமிழ்ப் பாடல்கள் தேவாரம் ஆகும்.

சம்பந்தர் பாடல்கள் திருக்கடைக்காப்பு என்றும், நாவுக்கரசர் பாடல்கள், 'தேவாரம்' என்றும், சுந்தரர் பாடல்கள் 'திருப்பாட்டு' என்றும் சிறப்பித்து வழங்கப்பெற்றன.[7] பாடியவரின் பருவ நிலைகளை அடிப்படையாகக் கொண்டு சம்பந்தர் பாடல்களைப் 'பால்ய

தேவாரம்' எனவும், நாவுக்கரசர் பாடல்களை 'விருத்தாப்பிய தேவாரம்' எனவும், சுந்தரர் பாடல்களை 'யௌவன தேவாரம்' எனவும் கூறும் வழக்குண்டு.[8]

சேக்கிழார் மூவர் பாடல்களைத் தேவாரம் எனக் குறிப்பிட வில்லை. பதினான்காம் நூற்றாண்டிற்கு முன்னர், மூவரின் பதிகங்கள் தேவாரம் என்ற பெயரில் வழங்கப்பட்டு வந்தன என்பதற்குக் கல்வெட்டுச் சான்றோ, இலக்கியச் சான்றோ இல்லை என்பர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார்.[9]

நச்சினார்க்கினியர், தொல்காப்பிய உரையில் மூவர் பாடல் களையும் 'திருப்பாட்டு' எனக் கூறுவர்.[10]

மூவர் பாடிய திருப்பதிகங்களுக்குத் தேவாரம் எனப் பெயர் கொடுத்து, முதன் முதல் ஏகாம்பர நாதருலாவில் இரட்டைப் புலவர்கள்,

"மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரஞ் செய்த திருப்பாட்டும்"[11]

என்று கூறினர். சைவ எல்லப்ப நாவலரும், திருவருணைக் கலம்பகத்தில்,

"வாய்மை வைத்த சீர்த் திருத் தேவாரமும் திருவாசகமும்
உய்வைத் தரச் செய்த நால்வர் பொற்றாள் எம்உயிர்த் துணையே"[12]

எனப் பாடிப் பரவுமிடத்து, மூவர் பதிகங்களையும் தேவாரம் எனத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

திருமுறைகளாகத் தொகுக்கப்பெற்ற காலத்து அவை பாடியவர் அடைமொழியோடு திருமுறை என்றே வழங்கப்பெற்று வந்துள்ளன. பின்னர்த் திருவாசகம், திருமந்திரம் போன்ற நூல்கள் தொகுப்பில் இடம்பெற்றபோது முதல் மூவரின் பாடல்களைத் தேவாரம் எனப் பொதுவாகச் சுட்டும் வழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

### தேவாரம் - சொற்பொருள்

தேவாரம் என்பதற்கு அறிஞர்கள் பல்வேறு பொருள்களைக் கூறுவர். தே + ஆரம் எனப் பிரித்துத் தெய்வத்தன்மை பொருந்திய பாமாலை என்றும், தே + வாரம் எனப் பிரித்து, தே - தெய்வம்; வாரம் - அன்பு காட்டும் பாமாலை என்றும் உரைப்பர். வாரம் என்பதற்கு இசைப்பாடல் எனப் பொருள். கொள்ளும் வழக்கும் உண்டு.[13] தேவாரம் என்பதற்கு மலையாள மொழியில் பூசை என்பது பொருளாம்.[14] நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கு உரை

எழுதிய ஜீயர், தேவாரம் என்பதற்குக் 'கிருகார்ச்சை' எனப் பொருள் கூறியுள்ளார்.[15] கிருகார்ச்சை என்பதற்கு வீட்டிலே பூசிக்கப்படுவது என்பது பொருள். சிலப்பதிகார உரையாசிரியர்களான அரும்பத உரையாசிரியரும், அடியார்க்கு நல்லாரும், வாரம் என்பது 'சொல் லொழுக்கமும் இசையொழுக்கமும் உடையது' எனப் பொருள் கொள்வதும் சிந்திக்கத்தக்கது.[16]

> "இறைவனைப் பண்ணார்ந்த இசையால் பாடிப் போற்றுதற்கேற்ப அமைந்தவை மூவர் திருப்பதிகங்களாதலின் இவை தேவாரம் என வழங்கப்பெற்றன. தெய்வ இசைப்பாடல்களாகிய இவை இறைவழிபாட்டிற்கு இன்றியமையாச் சாதனமாக அமைந்தமை கருதி இவற்றுக்கு வழங்கிய தேவாரமென்ற சொல், வழிபாடு என்னும் பொருளிலும் வழங்கப் படுவதாயிற்று"

என்று க. வெள்ளைவாரணனார் கருதுவர்.[17] எனவே தெய்வத்தைப் பாடும் இசைப்பாடலைத் தேவாரம் என்று வழங்கியமை பொருத்த மாக அமைகின்றது.

### அப்பர் அருளிய தேவாரம்

அப்பர் அருளிய திருப்பதிகங்களின் தொகையை,

> "இணைகொ ளேழெழு நூறிரும் பனுவல்
> ஈன்றவன் திருநாவினுக் கரையன்" (7:65:2)

என்று சுந்தரர் குறிப்பிட்டுள்ளார். சுந்தரர் குறிப்பிட்ட 'ஏழுஏழுநூறு' என்ற இத்தொகையினைச் சேக்கிழாரும் ஏயர்கோன் கலிக்காமர் புராணத்தில் (பா.150) சுட்டியுள்ளார். நம்பியாண்டார் நம்பி, 'திருஏகாதச மாலை'யில், (பா.7)

> "பதிக மேழெழு நூறு பகருமா கவியோகி
> பரசுநாவரசான பரம காரணவீசன்"

என்று அப்பர் 'ஏழுஏழுநூறு' பதிகம் பாடியதைத் தெளிவுறுத்தி யுள்ளார். இவற்றால் அவர் பாடிய பதிகங்களின் தொகை நாலாயிரத்துத் தொள்ளாயிரம் என்று புலனாகின்றது. எனினும் உமாபதி சிவம், திருமுறை கண்ட புராணத்தில் (பா.15)

> "ஒரு *நாற்பத்தொன்பதினா யிரம*தாகப்
> பெருநாமப் புகலூ ரிற் *பதிகங்கூ*றிப்
> பிஞ்ஞகனார் அடியிணைகள் பெற்றுள்ளாரே"

எனக் கூறியிருப்பது, அப்பர் நாற்பத்தொன்பதினாயிரம் பதிகங்கள் பாடினார் எனக் கருதச் செய்கின்றது. இப்பாடலில் உள்ள நாற்பத் தொன்பதினாயிரம் என்ற எண்ணிக்கை, பதிகங்களைக் குறிக்காமல் பாடல்களைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தமுடையது.

நாலாயிரத்துத் தொள்ளாயிரம் பதிகங்களில் நாற்பத்தொன்பதினாயிரம் பாடல்கள் பாடினார் என்று கருதலாம்.

> "திருநாவுக்கரசர் 'கூற்றாயின' என்ற பாடல் முதல் 'ஒருவரையு மல்லாது' என்ற பாடல் ஈறாக, நாற்பத்தொன்பதினாயிரம் பாடலாகப் பதிகங் கூறினார் எனத் திருமுறை கண்ட புராணத் தொடர்க்குப் பொருள் கொள்ளுதலே சுந்தரமூர்த்தி சுவாமிகள், நம்பியாண்டார் நம்பி என்னும் இவ்விரு பெருமக்கள் கருத்துக்கும் ஏற்புடைய தாகும்[18]"

என்று க. வெள்ளைவாரணனார் கூறுவதும் சிந்திக்கத்தக்கது.

தேவார ஆசிரியர்கள் மூவரும் முறையே பதினாறாயிரம், நாற்பத் தொன்பதினாயிரம், முப்பத்தெட்டாயிரம் ஆக நூற்றுமூன்று ஆயிரம் பதிகங்கள் பாடியனவாகக் கருதுவர்.[19] ஆனால் இன்று மூவர் பதிகங்களாகக் கிடைப்பவை எழுநூற்றுத் தொண்ணூற்றாறு. பாடல் களாகக் கிடைப்பவை எண்ணாயிரத்து இருநூற்றெழுபத்திரண்டு.

நம்பியாண்டார் நம்பி திருமுறைகளைத் தொகுக்கும்போது அப்பர் பாடியனவாக முந்நூற்றுப்பத்துப் பதிகங்களே கிடைத்தன என்பர் உமாபதிசிவம்.[20]

அச்சில் வெளிவந்துள்ள தேவாரப் பதிப்புக்களில் அப்பரின் பதிகத் தொகைகளும், பாடல் தொகைகளும் வேறுபட்டுள்ளன. அவ்வேறுபாடுகளைப் பின்வரும் அட்டவணை புலப்படுத்தும்.

| வரிசை | பெயர் | பதிகம் | பாடல் |
|---|---|---|---|
| 1. | சுவாமிநாத பண்டிதர் (1911) | 311 | 3067 |
| 2. | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் (1928) | 313 | 3065 |
| 3. | வெள்ளைவாரணனார் (1961) | 312 | 3066 |
| 4. | தருமபுர ஆதினப் பதிப்பு (1957, 1961, 1963) | 312 | 3064 |
| 5. | பிரெஞ்சு இந்தியக் கல்வி நிறுவனம் -புதுவை (1985) | 312 | 3065 |

இவ்வட்டவணையில் காணப்படும் பதிகத்தொகை, பாடல் தொகை வேறுபாடுகளன்றியும், சில பதிப்புக்களில் பாடல் வேறுபாடு களும் உள்ளன.

நான்காந் திருமுறை தொண்ணூற்றெட்டாவது திருவையாற்றுப் பதிகம் இரண்டு பாடல்களை உடையது. அவற்றுள் முதற்பாடலின் முதலடி,

"அந்திவட்டத் திங்கட் கண்ணியன் ஐயாறமர்ந்து..."

என்று அமைந்துள்ளது. இவ்வாறே பல பதிப்புக்களிலும் உள்ளன.[21] இதே திருமுறையில் நூற்றுப் பதின்மூன்றாவது பொதுப் பதிகத்தில்,

"அந்தி வட்டத்து *இளங்* கண்ணியன் *ஆறமர்* செஞ்சடையான்"...

என்று சில சொல் மாற்றங்களுடன் ஐந்தாவது பாடல் சில பதிப்புக் களில் இடம் பெற்றுள்ளது.[22] தருமையாதினப் பதிப்பில் ஐயாற்றுப் பாடல் மட்டும் உள்ளது; சில சொல் மாற்றங்களைக் கொண்ட பொதுப்பதிகப் பாடல் இடம் பெறவில்லை, இது தனிப்பாடலாகக் கொள்ளுதற்குரியதன்று என்பதற்குரிய காரணத்தையும் தருமை ஆதினப் பதிப்பின் உரையாசிரியர் முத்து. மாணிக்கவாசகம் விளக்கி யுள்ளார்.

அப்பர் பாடிய பதிகங்களின் எண்ணிக்கையை முந்நூற்றுப் பன்னிரண்டு என்றும், பாடல்களின் எண்ணிக்கையை மூவாயிரத்து அறுபத்து நான்கு என்றும் பெரும்பாலோர் கணக்கிட்டுள்ளனர்.[23] இவ்வாராய்ச்சிக்கு அடிப்படையாக உள்ள தருமபுர ஆதினப் பதிப்பில் அப்பர் அருளிய தேவாரப் பதிகத் தொகைகளும், பாடல் தொகை களும் பின்வருமாறு அமைந்துள்ளன.

| வரிசை எண் | திருமுறைகள் | பதிகங்கள் | பாடல்கள் |
|---|---|---|---|
| 1. | நான்காந் திருமுறை | 113 | 1069 |
| 2. | ஐந்தாந் திருமுறை | 100 | 1015 |
| 3. | ஆறாந் திருமுறை | 99 | 980 |
| | ஆக மொத்தம் | 312 | 3064 |

## அப்பர் திருமுறையமைப்பு

நான்காந் திருமுறைப் பதிகங்கள், திருநேரிசை, திருவிருத்தம் என்ற அமைப்புடையவை. திருக்குறுந்தொகைப் பதிகங்கள் ஐந்தாந் திருமுறையாகவும், திருத்தாண்டகப் பதிகங்கள் ஆறாந் திருமுறை யாகவும் தொகுக்கப்பட்டுள்ளன. நான்காம் திருமுறையில் பண்ணமைந்த பதிகங்கள் உள்ளன. ஐந்து, ஆறு திருமுறைப் பதிகங்கட்குப் பண் வகுக்கப்படவில்லையாயினும், அப்பாடல்கள்

இயற்றமிழ் யாப்பில் அமைந்த இசைப்பாடல்களாகவே கொள்ளத் தக்கன. சம்பந்தர், சுந்தரர் அருளிய பதிகங்களில் காணப்பெறாத, திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் ஆகிய இயற்றமிழ்ச் செய்யுளினங்கள் அப்பர் தேவாரத்தில் சிறப்பாக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

அப்பர் முதன் முதலில், 'கூற்றாயினவாறு விலக்ககலீர்' எனத் தொடங்கும் பதிகம் பாடியமையால் இப்பதிகம், நான்காந் திருமுறை யின் முதற் பதிகமாக இடம்பெற்றுள்ளது. திருப்புகலூரில் கைத் திருத்தொண்டு செய்து தங்கியிருக்கும் காலத்தில், 'எண்ணுகேன், என்சொல்லி எண்ணுகேனோ' என்ற முதற்குறிப்புடைய பதிகம் பாடிச் சிவபெருமான் திருவடி நீழலை அடைந்தமையால், அஃது ஆறாந் திருமுறையின் இறுதிப் பதிகமாக அமைந்துள்ளது.

நான்காந் திருமுறையில், திருநேரிசை, திருவிருத்தம் என்ற பகுதிகளிலும், ஐந்து, ஆறு திருமுறைகளிலும் 'கோயில்' என வழங்கும் தில்லைக்குரிய பதிகங்கள் முதற்கண் வைக்கப் பெற்றுள்ளன.

## பண்ணமைந்த பதிகங்கள்

ஞானசம்பந்தரின் முதல் மூன்று திருமுறைகளிலும் இருபத்திரண்டு பண்கள் இடம்பெற்றுள்ளன. சுந்தரரின் ஏழாந் திருமுறையில் பதினேழு பண்களுக்குரிய பதிகங்கள் முறையே தொகுக்கப் பெற்றுள்ளன.

அப்பர் பதிகங்களில், நான்காந் திருமுறையில் முதல் இருபத்தொரு பதிகங்கள் மட்டுமே பண்ணமைப்பில் தொகுக்கப் பெற்றுள்ளன.

1. கொல்லி, 2. காந்தாரம், 3. பியந்தைக் காந்தாரம், 4. சாதாரி, 5. காந்தார பஞ்சமம், 6. பழந்தக்கராகம், 7. பழம்பஞ்சுரம், 8. இந்தளம், 9. சீகாமரம், 10. குறிஞ்சி என்னும் பத்துப் பண்களும் இவ்வகை யில் இடம்பெறுகின்றன.

அப்பர் திருமுறைகளிலுள்ள திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் என்பன யாப்பை நோக்கிய பெயர்களாயினும் அவை இசைப்பாடல்களாகவே கொள்ளத்தக்கன. திருநேரிசையை, நேரிசைக் கொல்லி எனவும், திருவிருத்தத்தை விருத்தக் கொல்லி எனவும் வழங்குதல் மரபு.

## திருநேரிசை

நான்காந் திருமுறையில் இருபத்திரண்டு முதல், எழுபத்தொன்பது வரையுள்ள ஐம்பத்தெட்டுப் பதிகங்கள் திருநேரிசையன. இவை

வெண்பா நேரிசை, ஆசிரிய நேரிசை போலின்றி அறுசீர்க் கட்டளை யடியில் அமைந்துள்ளன.

"........... நீலமாமலர் கவ்வி நேரிசை
பாணில் யாழ்முரலும் புறவார்பனங் காட்டூர்" (2:53:10)

என வரும் ஞானசம்பந்தரின் திருப்பாடற் பகுதியும்,

"நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு"

என வரும் உமாபதி சிவனாரின் திருமுறைகண்டபுராணப் பாடற் பகுதியும் (பா.39) நேரிசைப் பதிகங்களைக் கொல்லிப் பண்ணிற் பாடும் வழக்குண்மையை உணர்த்துகின்றன.

தேவாரத் திருநேரிசை யாப்பும், திவ்யப்பிரபந்தத் திருக் குறுந்தாண்டக யாப்பும் ஒத்த அமைப்புடையன.

### திருவிருத்தம்

நான்காம் திருமுறையில் எண்பது முதல் நூற்றுப் பதின்மூன்று வரையுள்ள முப்பத்து நான்கு பதிகங்களும் திருவிருத்தங்கள்; கட்டளைக் கலித்துறை என்ற யாப்பில் அமைந்தவை. தொல்காப்பியச் செய்யுளியல் கூறும் 'ஐஞ்சீரடி நான்கால் வந்த தரவு கொச்சகம்' என்னும் வகையில், இதனைப் பொருத்திக் காணலாம். நம்மாழ்வார் பாடிய திருவிருத்தமும் இவ்வகையைச் சேர்ந்தது.

### திருக்குறுந்தொகை

ஐந்தாம் திருமுறையில் உள்ள நூறு பதிகங்களும் குறுந்தொகை என்னும் யாப்பில் அமைந்துள்ளன. பத்து முதல் பதினான்கு எழுத்தளவும் வரும் நாற்சீரடியுள் பதினொன்றும் பன்னிரண்டு மாகிய குறைந்த எழுத்துக்களைப் பெற்று வருவன இப்பாடல் களாதலின், இவை குறுந்தொகை எனப் பெற்றன. சிலப்பதிகாரத்தில் உள்ள வேட்டுவவரிப் பாடல்களுடன் நாவுக்கரசரின் குறுந்தொகைப் பாடல்கள் ஒப்புநோக்கத் தக்கன.

### திருத்தாண்டகம்

ஆறாந் திருமுறையில் உள்ள தொண்ணூற்று ஒன்பது பதிகங் களும் தாண்டக வகையைச் சேர்ந்தவை. தொல்காப்பியச் செய்யுளியல் கூறும், 'எண்சீர் அமைந்த கொச்சக ஒருபோகு' இத்தாண்டக யாப்புக்கு ஒத்ததாக உள்ளது. கழிநெடிலடி எழுத்து வரையறை யாகிய இருபதின் மேற்பட்ட எழுத்தால் மிக்கு வருவதைத் தாண்டகம் என்பர். அப்பரின் தாண்டகப் பாடல்கள் இருபது எழுத்தின் மேல் இருபத்தேழு எழுத்தெல்லைக்குள் அமைந்துள்ளன. திருமங்கையாழ்வாரின்

திருநெடுந்தாண்டகமும் நாவுக்கரசரின் திருத்தாண்டகமும் ஒரே யாப்பினை உடையவை.

அப்பர் பாடல்களில் திருநேரிசை, திருவிருத்தம், திருக் குறுந்தொகை, திருத்தாண்டகம் ஆகிய யாப்பு அமைப்புகள் இலக்கிய அமைப்பு வகைகளாகவும் திகழ்கின்றன. இத்தகைய யாப்பு வகை நான்கில் திருவிருத்தமும், திருத்தாண்டகமும் முறையே குறுந் தாண்டகம், நெடுந்தாண்டகம் என்ற முறையில் ஒன்றாகவே சேர்த்து எண்ணப்பட்டுள்ளன. நாவுக்கரசர் பதிகங்களை இந்நான்கு வகை யாப்பில் முறைப்படுத்தும்போது கோயில் பதிகத்தை முன்னர் வைத்துப் பொதுப் பதிகத்தைப் பின்னர் வைத்திருப்பதால் இந்நான்கையுமே தனி நூல்களாகக் கருத இடமுண்டு.

அப்பரின் திருத்தாண்டகப் பதிகங்களே தாண்டகம் என்னும் யாப்பிற்கு மூல இலக்கியங்களாக விளங்குவன. இப்புதுமை பற்றித் தொல்காப்பியர் சுட்டும் விருந்து வனப்பிற்குத் தாண்டகத்தைச் சான்றாகக் கொள்வது பொருந்தும். அப்பர் பாடல்களில், அடிதோறும் எண்சீர்களைக் கொண்ட நெடிய யாப்புடையது தாண்டகம். அடிதோறும் நாற்சீர்களைப் பெற்றுச் சுருங்கிய யாப்புடையது திருக்குறுந்தொகை. நேரிசையும் விருத்தமும் இவற்றிற்கு இடைப் பட்ட சீரமைப்பு உடையவை. மேலும் சின்மென் மொழியால் சீருணைந்து இயற்றப்பட்ட இத்திருக்குறுந்தொகைப் பாக்களை 'அம்மை' வனப்பின என்றும், பரந்த மொழியால் அடிநிமிர்ந்து ஒழுகிய தாண்டக யாப்பினைத் 'தோல்' வனப்பின என்றும் வகுப்பது பொருந்தும்.

அப்பரின் மூவாயிரத்து அறுபத்து நான்கு பாடல்களில், 'சுண்ணவென் சந்தனச் சாந்தும்' (4:2) என்னும் அதிகைப் பதிகமும் 'மாதர்ப் பிறைக் கண்ணியானை' (4:3) என்னும் ஐயாற்றுப் பதிகமும் ஐந்தடிப் பாடல்கள்; 'தலையே நீ வணங்காய்' (4:9) என்னும் அங்க மாலைப் பதிகம் இரண்டடிப் பாடல் உடையது. ஏனையவை யாவும் நான்கடிப் பாடல்களே. மேற்காட்டிய ஐந்தடிப் பாடல்களில் குறிப்பிட்ட ஒரு தொடரே ஐந்தாவது அடியாக அவற்றில் இடம் பெற்றுள்ளமை அறிய முடிகிறது. இங்ஙனம், இறையுணர்வைப் புதிய பா வடிவங்களில் அப்பர் வெளிப்படுத்தியுள்ள திறம் உணரத்தக்கது.

### ஆ. பதிக விளக்கமும் அமைப்பும்

#### பதிகம் - விளக்கம்

ஒரு பொருள் பற்றிப் பத்துப் பாடல்கள் பாடும் வழக்கம் சங்க காலம் முதலாக இருந்து வந்துள்ளது. ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து

போன்ற சங்க இலக்கியங்களும், திருக்குறள் முதலான நீதி இலக்கியங்களும் இவ்வமைப்பு முறையைக் கொண்டுள்ளன. பல பொருள் உடைய 'பதிகம்' என்னும் சொல்லுக்குப் பத்துப் பாடல் களைக் கொண்ட தொகுப்பு என்பது ஒரு பொருள். இதற்கு ஒரு பொருளைப் பற்றிய பல பாடல்களின் தொகுப்பு என்ற பொருள் கொள்வது நேரிதாக உள்ளது. சிவஞானமுனிவரும்,

> 'பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத் தொகுதியாகச்
> சொல்லுதல் தானே'[24]

என்று குறிப்பிடுவது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

பன்னிரு திருமுறை, நாலாயிர திவ்வியப் பிரபந்தம் போன்ற சமயத் தொகுதிகளில் இப்பதிக அமைப்பே பெரிதும் போற்றப் பட்டுள்ளது. இப்பக்திப் பதிகங்களில் பத்து என்ற எண்ணிக்கைக்குக் கூடுதலாகவோ குறைவாகவோ உள்ளவற்றிற்கும் 'பதிகம்' என்னும் பெயரே வழங்கப் பெற்றுள்ளது.

முந்நூற்று எண்பத்து நான்கு பதிகங்களை உடைய சம்பந்தர் தேவாரத்தில், முந்நூற்றுப் பதினெட்டுப் பதிகங்கள் பதினொரு பாடல்களைக் கொண்டவை. பதிகந்தோறும் பயன் கூறும் வழக்கம் உள்ளவராதலால் சம்பந்தர் பதினொரு பாடல்களால் பதிகம் பாடுதலையே வழக்காகக் கொண்டுள்ளார்.

முந்நூற்றுப் பன்னிரண்டு பதிகங்களைக் கொண்ட அப்பர் தேவாரத்தில் இருநூற்று எட்டுப் பதிகங்கள் பத்துப் பாக்களை உடையவை.[25] பதிகம்தோறும் பயன்கூறும் வழக்கம் இல்லாமையால், அப்பர் பத்துப் பாடல்களால் பதிகம் அமைப்பதையே வழக்காகக் கொண்டுள்ளார்.

சுந்தரரின் நூறு பதிகங்களிலும் பத்துப் பாடல்கள் என்னும் முறையே பெருவழக்காக உள்ளது.

எழுநூற்றுத் தொண்ணூற்றாறு பதிகங்களைக் கொண்ட மூவர் தேவாரத்தில், நானூற்று நான்கு பதிகங்கள் பதினொரு பாடல்களைக் கொண்டவை. முந்நூற்றுப் பதினாறு பதிகங்கள் பத்துப் பாடல்களைக் கொண்டவை. பன்னிரு பாடல்களைக் கொண்ட பதிகங்கள் இருபது. பன்னிரு பாடல்களுக்கு மேற்பட்ட பதிகங்கள் இரண்டு. பத்துக்குக் குறைவான பாடல்களைக் கொண்ட பதிகங்கள் ஐம்பத்து நான்கு. இவற்றால் பதிகத்தில் பாடல் எண்ணிக்கை பத்தாகவோ, பதினொன்றாகவோ அமைவதே பெருவழக்கு என்பதை அறியமுடிகின்றது.

## பதிக அமைப்பு

ஞானசம்பந்தர் தேவாரத்தில் பதிகத்தோறும் எட்டாவது பாடலில் இராவணனைப் பற்றிய குறிப்பும், ஒன்பதாவது பாடலில் மாலும் அயனும் இறைவனின் அடி முடி தேட முயன்ற செயலும், பத்தாவது பாடலில் புறச்சமயிகளான சமண பௌத்தர் போன்றோரின் தீயநெறிகளும் இடம்பெற்றுள்ளன. இறுதிப் பாடலில் பதிகப் பயனை விளக்கியுள்ளார்.

அப்பர் தேவாரத்தில் இறையருட் பெருமைகளும், தன்னனுபவத் தன்மைகளுமே முதன்மை பெற்றுள்ளன. மால், அயனைப் பற்றியும், புறச்சமயத் தீநெறிகள் பற்றியும் சம்பந்தர் முறையாகக் கூறினாற் போல் கூறாமல் அப்பர் அவற்றை ஆங்காங்குப் பரவலாகக் கூறி யுள்ளார். ஆயினும் இராவணனைப் பற்றிய செய்தியைப் பதிகந் தோறும் இறுதிப் பாடலில் குறிப்பிடும் வழக்கம் அவருக்கு இருந்ததைக் காணமுடிகின்றது.

சில பதிகங்களில் இராவணனைப் பற்றிய குறிப்பு பல பாடல் களில் இடம்பெற்றுள்ளது. 'தேரையும் மேல் கடாவி' என்னும் திருமறைக்காட்டும் பதிகத்தில் பாடல்தோறும் இராவணன் பற்றிய குறிப்பு உள்ளமையும் ஈண்டு கருதத்தக்கது.

அப்பர் பதிகங்களில் இராவணனைப் பற்றிய குறிப்பு, பதிகந் தோறும் இடம்பெற்றிருத்தலுக்கான காரணம் பற்றிக் க. வெள்ளை வாரணனார்,

> "சிவபெருமானது பெருங்கருணைத் திறத்தினை உணர்த்தும் முறையில், 'பிழை செய்த இராவணனை உய்வித்த அருளாளன் என்னையும் கோது நீக்கி ஆட்கொண்டான்' என உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் முறையில் இராவணனைப் பற்றிய குறிப்பைப் பதிகந்தோறும் விடாது குறித்தருள்கின்றார்"[26]

என்று கூறியுள்ள கருத்தும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

அப்பரின் ஒரு சில பதிகங்களில்,

> "நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
> தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே" (4:11:10)
>
> "சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொல் மாலையடி சேர்த்தி
> எந்தைபெம்மான் என் எம்மான் என்பார் பாவநாசமே" (4:15:11)

எனப் பதிகப் பயன் கூறும் பகுதிகளும் இடம்பெற்றுள்ளன.

## பதிகப் பெயரமைப்பு

திருமுறைகளில், பதிகங்கட்குப் பெயரிடும் வழக்கம் காணப் படுகின்றது. பெரும்பாலான பதிகங்கட்கு, அவ்வத்தலங்களின் பெயரே, பதிகங்கட்கும் பெயராகச் சுட்டப்பட்டுள்ளது. அப்பரின் முப்பத்தேழு பொதுப் பதிகங்கட்கும், பதின்மூன்று தலப்பதிகங் கட்கும் ஆக மொத்தம் ஐம்பதுக்கும் சிறப்புப் பெயர்கள் வழங்கப் பெற்றுள்ளன. அவை பொருள் தன்மை பற்றியும், சொல் தன்மை பற்றியும், பொருளடைவுத்தன்மை பற்றியும், பொதுமைத் தன்மை பற்றியும் அமைந்துள்ளன.

## பொருள் தன்மை பற்றிய பதிகங்கள்

1. திரு அங்கமாலை (4:9)

   மானிடயாக்கையின் உறுப்புக்களை விளித்து இறைபணி செய்யப் பணிப்பது.

2. நமச்சிவாயப் பதிகம் (4:11)

   திருவைந்தெழுத்தின் பெருமையைக் கூறுவது.

3. தசபுராணம் (4:14)

   சைவபுராணம் முதலாகப் பிரமாண்ட புராணம் ஈறாக உள்ள பத்துப் புராணங்களின் கருத்துக்களைக் கூறாமல், இப்பதிகம், சைவ புராணத்தில் உள்ள மன்மதனை எரித்த வரலாறு, திருமால் சக்கரம் பெற்ற வரலாறு போன்றவற்றைக் கூறுவதாக உள்ளது.

4. விடந் தீர்த்த பதிகம் (4:18)

   நாகம் தீண்டிய நஞ்சினைப் போக்க, நாவுக்கரசர் பாடியது. ஒன்று முதல் பத்து வரை முறையே பாடல்தோறும் முதற்சீரில் எண்ணமைத்துப் பாடியிருப்பது.

5. திருவாதிரைத் திருப்பதிகம் (4:21)

   ஆரூர் ஆதிரை நாள் விழா வண்ணம் பற்றிக் கூறுவது.

6. குறை (நேர்)ந்த திரு நேரிசை (4:78; 4:79)

   பதிகப் பாடல்களின் தொகை குறைந்திருப்பதால் வந்த பெயர் குறைந்த திரு நேரிசை எனப்படும். ஆயினும் எழுபத்தெட்டாம் பதிகம் பத்துப்பாடல்களைக் கொண்டிருப்பதால் அவ்வாறு கொள்வது பொருந்தவில்லை. இவ்விரு பதிகங்களில் உள்ள

பதினாறு பாடல்களும் 'என் செய்வான் தோன்றினேனே' எனக் கழிபேரிரக்கத்துடன் முடிந்திருப்பதால், குறைநேர்ந்த நேரிசை களாகக் கொள்வதே நேரிது எனலாம்.

7. காலபாசத் திருக் குறுந்தொகை (5:92)

சிவனடியாரை அணுகாதீர் என்று, கூற்றுவனின் தூதுவருக்கு ஆணையிட்டுக் கூறியது.

8. இலிங்கபுராணத் திருக் குறுந் தொகை (5:95)

சரியை நெறியின் சிறப்பும், சிவலிங்கத் தத்துவமும் கூறுவது.

9. பாவநாசத் திருக் குறுந்தொகை (5:99)

பாவமும் பழியும் நீங்கும் வழியை முதற் பாடல் கூறுவதால் இப்பெயர் பெற்றது.

10. ஆதிபுராணத் திருக் குறுந்தொகை (5:100)

சிவபெருமானின் முழுமுதல் தன்மையை விரித்துக் கூறுவது.

11. பெரிய திருத் தாண்டகம் (6:1)

பெரும் பெற்றப் புலியூரானின் பெருமைகளைப் பேசுவது. பெரிய பெருமானை, பெருந்தகையை, பெருந்துணையை, பெரும்பொருளை, பெரும்பயனை, பேரொளியை என்று பெரிய பண்புகளாகவே கூறியிருப்பதால் பெரிய திருத்தாண்டகம் ஆயிற்று. அளவில் குறையாத அடிகளை உடையது என்பது பொருந்தாது.

12. அடையாளத் திருத் தாண்டகம் (6:4)

பாடல் தோறும், 'அவனாகில் அதிகை வீரட்டனாம்' என்று அடையாளம் கூறுவதாக அமைந்திருப்பது.

13. திருவினாத் திருத் தாண்டகம் (6:97)

வினாவிடைத் திருத்தாண்டகம் என்றும் இப்பதிகத்திற்குப் பெயருண்டு. முதற்கண் அமைந்த ஐந்து பதிகங்கள் வினா அமைப்பிலும், அடுத்துள்ள ஆறு பதிகங்கள் விடை அமைப் பிலும் உள்ளன.

14. மறுமாற்றத் திருத் தாண்டகம் (6:98)

அரசனின் அழைப்பை ஏற்க மறுத்து நாவுக்கரசர் மொழிந்தது.

**சொல் தன்மை பற்றிய பதிகங்கள்**

1. நினைந்த திரு நேரிசை (4:74)

   'நினைந்தவாறே' என்னும் சொல்லிறுதியைப் பாடல் தோறும் கொண்டது.

2. ஆருயிர்த் திருவிருத்தம் (4:84)

   'என்றன் ஆருயிரே' என்னும் சொல் முடிபினைப் பாடல் தோறும் உடையது.

3. சரக்கறைத் திருவிருத்தம் (4:111)

   பாடல் தோறும் ஈற்றடி இடையில் 'சரக்கறை' என்னும் சொல் பயின்றுள்ளது. சிவபிரானின் சின்னங்களை வைக்கும் சரக்கறை யாகத் தம்நெஞ்சத்தைக் குறிப்பிட்டு நாவுக்கரசர் பாடியிருப்பது.

4. பசுபதித் திருவிருத்தம் (4:110)

   'பசுபதியே' என்னும் முடிபினை உடையது.

5. நின்ற திருத் தாண்டகம் (6;94)

   'நின்றவாறே' என்னும் முடிபினைப் பாடல்தோறும் கொண்டதால் பெற்ற பெயர்.

6. 'மறக்கிற்பனே' என்னும் திருக்குறுந்தொகை (5:93)

   பாடல்தோறும் 'மறக்கிற்பனே' என்னும் சொல் முடிபினை உடையது.

7. 'தொழற்பாலதே' என்னும் திருக் குறுந் தொகை (5:94)

   பாடல்தோறும் 'தொழற் பாலதே' என்னும் முடிபினை உடையது.

8. கொப்பளித்த திரு நேரிசை (4.24)

   அடிதோறும் 'கொப்பளித்த' என்னும் சொல் இரண்டாம் சீராகப் பயின்று வருவது. இது மேலன போல் பொதுப் பதிகமாக அன்றித் திருவதிகைத் தலப்பதிகமாக உள்ளது. பின்வருவனவும் தலப்பதிகங்களுக்கு அமைந்த பெயர்கள் பற்றியனவே.

9. திருவடித் திருத் தாண்டகம் (6:6)

   அடிதோறும் அதிகை வீரட்டானத்துச் சிவபெருமானின் திருவடிப் பெருமை கூறுவது.

10. புக்க திருத்தாண்டகம் (6:2)

பாடல் தோறும் 'சிற்றம்பலமே புக்கார்தாமே' என முடிந்திருப்பது.

11. காப்புத் திருத் தாண்டகம் (6:7)

பாடல் தோறும் அதிகை வீரட்டானத் திறைவன் பல்வேறு தலங்களில் காப்பாக இருப்பது பற்றிக் கூறுவது.

12. ஏழைத் திருத் தாண்டகம் (6:3)

அதிகைப் பெருமானை 'ஏழையேன் நான் பண்டு இகழ்ந்த வாறே' எனப் பாடல்தோறும் எண்ணி இரங்கிக் கூறுவது.

13. போற்றித் திருத் தாண்டகம் (6:5, 6:32, 6:55, 6:56, 6:57)

அடிதோறும் 'போற்றி' என இறையருளைப் போற்றும் பாங்குடையது.

14. உள்ளத் திருக்குறுந்தொகை (5:98)

பாடல்தோறும் என் உள்ளமே என முடிவு கொண்டது

15. சிவனெனுமோசை (4:8)

'சிவனெனுமோசை' என்பது ஆத்தி சூடி, கொன்றை வேந்தன் போல பதிக முதற்பாட்டின் முதல் குறிப்பால் வந்த பெயர்.

16. பாவநாசத் திருப்பதிகம் (4:15)

'எந்தை பெம்மான் எம்மான் என்பார் பாவம் நாசமே'

என்னும் பதிக இறுதிக் குறிப்பால் வந்த பெயர்.

சொல் தன்மை பற்றி வந்த இப்பெயர்களில் பொருள் தன்மையும் உடனாயிருப்பது கருதத்தக்கது.

## பொருள் அடைவுத் தன்மை பற்றிய பதிகங்கள்

1. மனத் தொகைத் திருக்குறுந்தொகை (5:96)

'நின் உள்ளத்து அருள் கொண்டு இருள் நீங்குதல் என் உள்ளத்து உளது' என அப்பர்தம் மனச்சிந்தனைகளைக் கூறுவது.

2. சித்தத் தொகைத் திருக்குறுந்தொகை (5:97)

'சிந்திப்பார் மனத்தான் சிவன்' எனத் தொடங்கிச் சித்தத்துள் உறையும் சிவத் தன்மைகளையும், சிவனைச் சித்தத்தில் சேர்க்கும் திறங்களையும் கூறுவது. உயிர் பன்னிரண்டு; ஆய்தம் ஒன்று. உயிர்மெய் (வ.ற நீங்கலாக) பதினாறு, எனத் தமிழ் நெடுங்

கணக்கு எழுத்துக்களை முதலிற்கொண்டு அமைவதால் இப் பதிகம் முப்பது பாடல்களை உடையதாயிற்று.

3. சேத்திரக் கோவை (6:70)

தில்லைச் சிற்றம்பலம் தொடங்கிப் பாடல் தோறும் பல சிவத்தலங்களைத் தொகுத்துக் கூறியிருப்பதால் தலக் கோவை யாயிற்று.

4. அடைவுத் திருத் தாண்டகம் (6:7)

பள்ளி, குடி, கோயில், காடு, வாயில், குளம், துறை முதலான தலப்பெயர்களைத் தனித்தனியே பாடல்தோறும் அடைவு படுத்தியிருப்பதால் பெற்ற பெயர்.

## பொதுத்தன்மை பற்றிய பதிகங்கள்

1. தனித் திரு நேரிசை (4:75; 4:76; 4:77)
2. தனித் திருவிருத்தம் (4:112; 4:113)
3. தனித் திருக்குறுந்தொகை (5:89; 5:90; 5;91)
4. தனித் திருத்தாண்டகம் (6:95; 6:96)
5. பலவகைத் திருத்தாண்டகம் (6:93)

இவ்வைந்தும் பொதுப் பதிகங்களுக்கு அமைந்த சிறப்புப் பெயர்களாகும்.

அப்பர் தேவாரத்தில் எந்தவொரு தலத்தின் பெயரும் இட பெறாத பதிகங்கள் பத்து உள்ளன. இவற்றில் இறைவனின் இயல்பு களும், பெருமைகளுமே இடம்பெற்றிருப்பதால் இவை தனிப் பதிகங்கள் என வழங்கப்படுகின்றன.

> "ஒரு தலத்தையேனும், ஓர் ஈற்றடி முடிபையேனும்
> ஒரு கருத்து முடிபையேனும் பற்றாது பலவாறும் எழும்
> அரிய அனுபவ நிலைக் கருத்துக்களைப் பதிகமாக
> ஆக்கி அருளப்பட்டன"[27]

எனத் தனிப்பதிகப் பெயர்க் காரணம் பற்றிச் சிவக்கவிமணி கூறும் கருத்து ஈண்டு நினையத்தக்கது.

## இ. பதிகச் செய்திகள்

இறைநலனை நுவல் பொருளாக உடைய அப்பர் பாடல் களில் தலவிளக்கம், அடியவர் வரலாறு, புராணக்கதை மரபுகள்,

அகப்பொருள் நெறிகள், சிற்றிலக்கிய மரபு, நாட்டுப்புறச் செல்வாக்கு, தமிழ்மொழிப்பற்று, தமிழிசையெழுச்சி ஆகிய செய்திகள் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன. "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் குறிக்கோளுடைய நாவுக்கரசர் பாடல்களின் நுவல்பொருள் இறைபணியாயினும், அவர் வாழ்ந்த காலச் சமுதாய நிலை பற்றிய செய்திகளும் அவர் திருமுறைகளில் காண முடிகின்றன.

### தல விளக்கம்

இறைவன் கோயில் கொண்டருளிய இடங்களையும், கோயில் சூழ் நீர்நிலைகளையும் பதிகங்களில் கூறும் வழக்கு தேவார மூவரிடமும் உள்ளது. சான்றாக, அப்பர் பதிகங்களில்,

"மாமயில்களாலும் சோலை ஆவடு தண்துறை" (6:47:7)

"பொன்னித் தென்பால் ஏருடைக் கமலமோங்கும் இடை மருது" (4:35:3)

"ஈண்டு மாடங்கள் நீண்ட மாளிகைமேல் எழுகொடி
வானிளமதி தீண்டி வந்துலவும் திருவாரூர்" (6:20:1)

"திரைகள் முத்தால் வணங்கும் திரு விராமேச்சுரம்" (4:61:11)

என வருணனையும் கற்பனையும் மிடைந்திருத்தலை அறிய முடிகின்றது.

"குளித்துமூழ்கியுந் தூவியுங்குடைந் தாடுகோதையர்
குஞ்சியுட் புகத்
தெளிக்குந் தீர்த்த மறாத்
திருவாரூர்" (4:20:6)

என்று தீர்த்தச் சிறப்புக்களையும் அப்பர் குறித்துள்ளார்.

அதிகை வீரட்டனார், ஐயாறனார், ஏகம்பனார், ஆவடுதுறையனார் என்று ஊரொடு சார்த்திப் பேர்சொல்லும் வழக்கம் உள்ளது. சில பதிகங்களில் இறைவன், இறைவி பெயர்கள் குறிக்கப்பட்டிருப்பதும் அறியமுடிகின்றது.

"ஆரா அமுதன்" (4:90:1)

"மடமொழி மங்கை" (4:91:7)

என்று திருவேதிகுடித் தலத்து இறைவன் இறைவி பெயர்களை அப்பர் சுட்டியுள்ளார். திருச்சத்திமுற்றத்துப் பதிகத்தில் பாடல்தோறும் 'சிவக்கொழுந்து' (4:96) என்று இறைவன் பெயரும் திருப்பயற்றூர் பதிகத்தில் 'காவியங்கண்ணள்' (4:32:7) என்று இறைவியின்

பெயரும் கூறப்பெற்றுள்ளன. தேவாரப் பதிகங்களில் இறைவன் இறைவி ஆகியோரைச் சுட்டியுள்ள சிறப்பு அடைமொழிகள், காலப் போக்கில் இறைவனுக்கும் இறைவிக்கும் பெயர்களாக வழங்கப் பட்டிருத்தல் வேண்டும்.

திருஇராமேச்சுரத்தைக் கூறும்போது, 'மதியினால் மால் செய் கோயில்' (4:61:1), மால் வேட்கையால் செய்த கோயில் (4:61:4) என அக்கோயில் மாயோனால் வணங்கப்பட்ட பின்னணியை அப்பர் குறித்துள்ளார்.

"கல்வியைக் கரையிலாத காஞ்சிமாநகர்" (4:43:8)

"கற்றவர் பயிலும் நாகைக் காரோணம்" (4:71:8)

எனக் கல்விச் சிறப்பால் நகரங்களை அறிமுகப்படுத்தி இருப்பதும் அறியத் தக்கது.

தலப்பதிகங்களில் பாடல்தோறும் தலப்பெயர் இடம்பெறுதல் மரபு. கச்சிமேற்றளிப் பதிகத்தில் பாடல்தோறும் கச்சிமாநகர் இடம் பெற்றுள்ளது. மாறாக ஒன்பது பாடல்களை உடைய கச்சியேகம்பப் பதிகத்தில், ஒன்பதாம் பாட்டில்தான் 'கச்சி ஏகம்பம் மேயானை' (4:7:9) என அத் தலப்பெயர் சுட்டப்பட்டுள்ளது.

'திருவாரூர்த் தொன்னகரில் பூங்கோயில்' (4:10:5)

மீயச்சூர்க்கு 'ஏற்றம் கோயில் இளங்கோயிலே' (4:11:1)

எனக் கோயிற் சிறப்புப் பெயர்களும் ஆங்காங்கு சுட்டப்பட்டுள்ளன. கச்சி மேற்றளிப்பதிகத்தில் பாடல்தோறும் காஞ்சிமாநகர் இடம் பெற்றுள்ளது. (4:43)

ஒரு தலத்து இறைவனைப் பாடும்போது அவன் பிற தலங்களிலும் நீக்கமற நிறைந்து அருளாட்சி நடத்துவதைச் சுட்டும் விதத்தில், அத்தலத்துடன் பல தலங்களைக் குறிப்பிடும் வழக்கை அப்பர் போற்றியுள்ளார். நாகைக் காரோணத்துத் திருப்பதிகத்தில் பாடல் தோறும் பல தலங்களில் உள்ள இறைவனைக் குறிப்பிட்டு அத்தகையவனை "நாகைக் காரோணத்து என்றும் காணலாமே' என்று நாகையோடு சார்த்தி முடிக்கின்றார். (6:22) இப்போக்கு பெரும்பாலான தாண்டகப் பதிகங்களில் இருப்பதை அறியமுடிகின்றது.

### அடியவர் வரலாறு

அப்பர்தம் காலத்தும், முற்காலத்தும் வாழ்ந்த அடியவர்கள் பலரைக் குறிப்பிட்டுள்ளார். அப்பரும், சம்பந்தரும் அடியார் பலரை

ஒருங்கிணைக்கும் சேர்க்கை மையமாகத் திகழ்ந்தவர்கள், இவ்விரு வரும் அடியார் திருக்கூட்டத்தோடு இறைவனை ஒன்றியிருந்து நினைந்தவர்கள்.

அப்பர் பதிகங்களில் அவர் காலத்தும் அவருக்கு முற்காலத்தும் வாழ்ந்த அடியவர் பலரின் பெருமைகளை அறியமுடிகின்றது. சண்டேசுரர், கோச்செங்கணான், கண்ணப்பர், கணம்புல்லர் ஆகியோரின் திருத்தொண்டுகளை அப்பர் போற்றியுள்ளார். (4:49:3; 4:7:9)

திருநல்லூர்ப் பதிகத்தில்,

"............. மனைவியொடு மங்கோர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை அறியு மன்றோவிவ் வகலிடமே" (4:97:7)

என உலகமே அறிந்த அமர் நீதியாரின் தொண்டுத் திறத்தை அப்பர் வியந்துள்ளார்.

திருவாரூர்ப் பதிகத்தில்,

"........... தொண்டன் நம்பி நந்தி
நீரால் திருவிளக்கிட்டமை நீள்நாடு அறியுமன்றே" (4:102:2)

என்று நமிநந்தி செய்த நாடறிந்த திருச்செயலைப் போற்றி யுள்ளார்.

திருவாவடுதுறைப் பதிகத்தில்,

"காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல ஊரர்க்கு அம்பொன்
ஆயிரம் கொடுப்பர்போலும் ஆவடு துறையனாரே" (4:56:1)

என்று ஞானசம்பந்தர் பொன் பெற்ற பெற்றிமையைச் சுட்டுகின்றார்.

திருப்பழனப் பதிகத்தில்,

"கலி மெலிய அழலோம்பும் அப்பூதி" (4:12:10)

என்று அப்பர் தம்மை வணங்கிய அடியாரைத் தாம் வாழ்த்திப் பாடியுள்ளார்.

இவ்வாறு அடியவர் பெருமைகளைக் கூறுவதன் வாயிலாகச் செயற்கரிய செயல் செய்தோரை வாழ்த்தி வணங்குவதற்கும், அன்னோர் நெறிபோற்றி இறைநெறியை வளர்ப்பதற்கும் அப்பர் வழிவகுத்துக் கொடுத்துள்ளார்.

## புராண-இதிகாசச் செய்திகள்

சமயப் பாடல்களில் இறைவனின் ஆற்றல் நிலை, அருள் நிலை, தழுவிய பல கதைகளைக் கூறும் மரபுகள் உள்ளன. சிவன்,

திருமால், பிரமன், உமை, இராவணன், அருச்சுனன் முதலானோர் பற்றிய கதைகள் நாவுக்கரசர் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

புராணங்கள் கூறும் சிவபெருமானின் அட்டவீரட்டச் செயல் களை அப்பர் பாடல்களில் மிகுதியாகக் காணமுடிகின்றது.

சிவபெருமான் திரிபுரம் எரித்த செய்தியைச்,

"சுற்றமுன் னிமையோர்நின்று தொழுதுதூ மலர்கள்தூவி
மற்றெமை யுய்யக்கொளென்ன மன்னுவான் *புரங்கள்மூன்றும்*
உற்றொரு நொடியின் முன்ன *மொள்ளழல் வாயின்வீழச்*
சொற்றருள் செய்தார்" (4:73:7)

என்ற பாடல் சுட்டுகின்றது. இச்செயல் அப்பர் அருள் பெற்ற திருவதிகையில் நிகழ்ந்த செயல். அதனால் இது மிகுதியான பாடல்களில் இடம்பெற்றுள்ளமை அறியமுடிகின்றது.

சிவன் பயிரவவேடந்தாங்கி, யானைத்தோல் உரித்த செய்தி,

"விரித்தபல் கதிர்கொள் சூலம்வெடிபடு தமருகங்கை
தரித்ததோர் கோலகால பயிரவ னாகி *வேழம்*
*உரித்துமை* யஞ்சக்கண்டு வொண்டிரு மணிவாய்விள்ளச்
சிரித்தருள் செய்தார்" (4:73:6)

என்னும் பாடலில் விளக்கப்பட்டுள்ளது.

அடியவர்க்கு அருள் செய்யும் பொருட்டுச் சிவபெருமான் காலனை உதைத்த செய்தியை,

"..........அடியடைந்த மாணிக் காக
நணுகியதோர் பெருங்கூற்றைச் சேவடியினால்
செற்றவன் காண்" (6:85:6)

என்ற பாடற்பகுதி உணர்த்துகின்றது. இச்செயல் நிகழ்ந்ததாகக் கூறப்பெறும் திருக்கடவூர் வீரட்டப் பதிகப் பாடல் அனைத்திலும் இச்செய்தி இடம்பெற்றிருப்பது கருதத்தக்கது.

மலர்க்கணை கொண்டு தன் தவத்தைக் கலைக்க முற்பட்ட மன்மதனை நெற்றிக்கண்ணால் சிவன் எரித்த செய்தியை,

"சுறவாருங் கொடியானைப் பொடியாக் கண்ட
சுடர்நயனச் சோதி" (6:98:4)

என்னும் அப்பர் பாடற்பகுதி உணர்த்துகின்றது.

தம்மை மதியாது தக்கன் செய்த வேள்வியைச் சிவன் அழித்தமையை,

"உணர்விலாத் தக்கன்றன் வேள்வி யெல்லாம்
அச்சமெழ அழித்து" (6:96:9)

என்னும் பகுதி சுட்டுகின்றது.

பிரமன் தலையைக் கொய்த செய்தி

"அங்கமலத் தயன்சிரங்கள் ஐந்தி லொன்றை
அறுத்தவன்" (6:30:6)

என்ற பாடற்பகுதியில் அறியமுடிகின்றது.

சலந்தரனைச் சக்கரம் கொண்டு சிவபெருமான் தடிந்ததை,

"உரம்மதித்த சலந்தரன்தன் ஆகங்கீண்ட
வோராழி படைத்தவன்" (6:76:10)

என்று அப்பர் குறித்துள்ளார்.

அந்தகன் என்னும் அசுரனைக் கொன்ற செய்தி,

"அன்ற வந்தக னைஅயிற் சூலத்தால்
கொன்றவன்" (5:63:9)

என்னும் பகுதியில் சுட்டப்படுகின்றது.

இவ்வட்டவீரச் செயல்கள், சிவபெருமானின் பேராற்றலைப் புலப்படுத்துவனவாய் உள்ளன.

சிவபெருமான் தலையில் கங்கையையும், மேனியில் உமையையும் கொண்ட நிலையைப் பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

"சூடினார் கங்கையாளைச் சூடிய துழனி கேட்டங்
கூடினாள் நங்கையாளும் ஊடலை ஒழிக்க வேண்டிப்
பாடினார் சாமவேதம்" (4:27:2)

"கங்கை நீர் சடையுள் வைக்கக் காண்டலும் மங்கை ஊட"
(4:34:10)

எனக் கங்கையையும், மலைமங்கையையும் இப்பாடல்கள் சுட்டியுள்ளன.

"வில்தாங்கிய கரம் வேல்நெடுங் கண்ணி வியன் கரமே
நற்றாள் நெடுஞ்சிலை நாண் வலித்த கரம் நின்கரமே
சென்றார் புரம் செற்ற சேவகம் என்னை கொல் செப்புமினே"
(4:103:2)

என்னும் பாடலில், உமையொரு பாகன் தோற்றத்தைச் சிறப்பித்துக் கூறிய அப்பர், முப்புரம் எரித்த நிகழ்ச்சியில் அம்மைக்கு இருந்த பெரும் பங்கினையும் மனங்கொண்டு பாடியுள்ளார்.

சிவபெருமானின் பெருங்கருணைத் திறத்தை வெளிப்படுத்தும் நஞ்சுண்ட செயலை,

"வடங்கெழு மலைமத் தாக வானவர் அசுரரோடு
கடைந்திட எழுந்த நஞ்சங் கண்டு பஃறேவரஞ்சி
அடைந்துநுஞ் சரணமென்ன அருள் பெரிதுடைய ராகித்
தடங்கடல் நஞ்சம் உண்டார் சாய்க்காடு மேவினாரே" (4:65:2)

என்ற பாடலில் அப்பர் தெளிவுறக் கூறியுள்ளார். முப்புரம் எரித்த செயல் போலவே இச்செயலையும் அப்பர் பாடல்களில் மிகுதியாகக் காண முடிகின்றது.

ஆலின் கீழிருந்து நால்வர்க்கு இறைவன் அறமுரைத்த செயலை

"மடல் பெரிய ஆலின் கீழ் அறம் நால்வர்க்கு அன்றுரைத்தான்" (4:6:10)
'பணைத்தெழுந்த ஆலினிற் கீழிருந்து ஆரணம் ஓதி" (4:107:6)

"ஆலத்தார் நிழலில் அறம் நால்வர்க்குக்
கோலத்தால் உரை செய்தவன்" (5:59:2)

என்று குறிப்பிட்டு ஆலமர் செல்வனை அறங்கூறும் ஆசான் என்று போற்றியுள்ளார்.

சிவனின் அறுபத்து நான்கு திருவிளையாடல்களில் பின்வரும் நான்கு நிகழ்ச்சிகள் அப்பர் தேவாரத்தில் இடம்பெற்றுள்ளன.

தருமிக்குப் பொற்கிழி அளித்தது (6:76:3)
விருத்த குமார பாலரானது (4:22:9-10; 4:43:2)
நரிபரியாக்கியது (4:4:2; 5:12:8)
பிட்டுக்கு மண் சுமந்தது. (6:18:9)

சிவன் தொடர்பான வேறு பல கதைகளையும் அப்பர் குறிப்பிட்டுள்ளார்.

கருடன் செருக்கு அடக்கியதைப்,

"புள்ளரசைக் கொன்று உயிர்பின் கொடுத்தார்" (6:53:8)

என்றும், வெள்ளை யானை வழிபட்டதை,

"வித்தகத்தால் வெள்ளானை விள்ளா அன்பு
விரவியவா கண்டதற்கு வீடுகாட்டி" (6:83:6)

என்றும், விநாயகர் கயாசுரனைக் கொன்றதைக்,

"கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலும்
கயாசுரனை அவனால் கொல்வித்தார் போலும்" (6:53:4)

என்றும் வருவன அவற்றுக்குச் சான்றுகளாகும்.

இத்தகைய சிவத்தொடர்புடைய கதைகளோடு, திருமால் தொடர்பான கதைகளும் அப்பர் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. திருமாலின் அவதாரங்களில் பல அவர் பாடல்களில் உள்ளன.

"துங்கநகத் தாலன்றித் தொலையா வென்றித்
தொகுதிறல் அவ்விரணியனை ஆகங் கீண்ட
அங்கனகத் திருமால்" (6:84:2)

என்று நரசிம்ம அவதாரச் செயலையும்,

"மண்தனை இரந்து கொண்ட மாயன்" (4:71:4)

"மாவலிபால் காணிக் கிரந்தவன்" (4:108:1)

என்று வாமனாவதாரச் செயலையும், குருந்தொசித்தது, (4:39:9) மலையைக் குடையாக்கித் தாங்கியது, (6:35:10) குதிரை வாயைப் பிளந்தது (6:83:6) ஆகிய கண்ணன் அவதாரச் செயல் களையும் அப்பர் தேவாரத்தில் காணமுடிகின்றது.

திருமால் தேவியைச் சிவன் வண்ணத்தளாகவும், சிவன் தேவியைத் திருமால் வண்ணத்தளாகவும் குறிப்பிடும் போக்கு அப்பரிடம் உள்ளது.

இராமன் இலங்கை சென்று போரிட்டு இராவணனை அரிதில் வென்ற இதிகாசச் செய்தியைக் குறிப்பிடும்போது, சிவன் இராவணனைத் தன் கால் விரலால் எளிதில் வென்ற பேராற்றலை நினைவுகூர்ந்து மேம்படுத்திக் கூறியுள்ளார்.

"செங்கண்மால் சிலைபிடித்துச் சேனையோடுஞ்
சேதுபந் தனஞ்செய்து சென்று புக்கும்
பொங்குபோர் பலசெய்து புகலால் வென்ற
பேரரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ
அங்கொருதன் திருவிரலால் இறையே யூன்றி
யடர்த்தவற்கே அருள்புரிந்த அடிகள்" (6:58:10)

இவ்வாறே அருச்சுனன், சிவனை வணங்கிப் பாசுபதம் பெற்ற வரலாற்றையும்,

"............ அருச்சுனற்கு அம்பும் வில்லும்
துடியுடை வேடராகித் தூய மந்திரங்கள் சொல்லிக்
கொடி. நெடுந் தேர் கொடுத்தார்" (4:50:1)

என்னும் பாட்டில் விளக்கமுறக் கூறியுள்ளார்.

இவ்விரு இதிகாசச் செய்திகளும் சிவனின் தனிப்பெரும் பேராற்றலை உணர்த்துவனவாகவே அப்பரால் எடுத்தாளப் பெற்றுள்ளன.

இப்புராண இதிகாசச் செய்திகள் சைவ சமயத்தைப் பாமர மக்களிடையே எளிதில் பரப்புவதற்குரிய கருவிகளாக அப்பரால் கையாளப் பெற்றுள்ளன. மேலும் இவை அப்பர் காலத்துக் கதை வழக்காறுகளையும், அவர்தம் பல்வேறு நூல் பயில் திறத்தினையும் ஒருசேர உணர்த்துகின்றன.

### அகப்பொருள் மரபு

சங்கச் சான்றோர் செய்யுட்களில் முதன்மையாக அமைந்த அகப் பொருள், பக்தி இலக்கியப் பாவலர்களாலும் ஏற்றுரைக்கப்பட்டுள்ளது. 'மக்கட் காதலுக்கென வகுத்த அகத்திணைச் சுவடுகளைப் பின் பற்றியதால், தமிழகத்தின் இறைப்பாசுரங்கள் புதுமையும் தனிமையும் பெற்றுப் பொலிகின்றன[28] என்பர் ரா. பி. சேதுப்பிள்ளை. அகத்திணைப் பண்புகள் இல்லாதிருக்குமேல் பக்திப் பாக்களின் இலக்கியத்தரம் குறைந்துபட்டிருக்கும்[29] என்று விளக்கமளித்துள்ளார் வ.சுப. மாணிக்கம்.

இறைவனைத் தலைவனாகவும், உயிர்களைத் தலைவியராகவும் கருதி நாயகன் நாயகி பாவத்தில் சைவ வைணவப் பாவலர்கள் பல பாடல்களை இயற்றியுள்ளனர். இவ்வாறு பாடுதல் சமயங்கள் பல வற்றுக்கும் பொதுமுறை என்பதனை உலக இலக்கியங்கள் காட்டுகின்றன[30].

அப்பர் தேவாரத்தில் அகப்பொருட் பாடல்கள் நூற்றைம்பது உள்ளன[31].

நடையறாப் பெருந்துறவு போற்றியவராயினும் அப்பர் பாடல் களில் அகப்பொருள் உணர்ச்சி இழையோடி இருக்கும் சிறப்பினை உணரமுடிகின்றது.

> "அப்பர் சுவாமிகளின் உணர்ச்சி வேகம் அகத்துறைப்
> பாடல்களிலும் தெளிவாகத் தன் முத்திரையினைப்
> பதித்துச் செல்வதைக் காணமுடிகின்றது"[32]

என்னும் கருத்து ஈண்டு எண்ணத்தக்கது. இந்நூற்றைம்பது பாடல் களில் பதினொரு பதிகங்களைச் சேர்ந்த நூற்றுப் பன்னிரண்டு பாடல்கள் அடங்கியுள்ளன. இவற்றில் தலைவி கூற்றுப் பாடல்கள் எண்பத்தெட்டு. செவிலி கூற்றுப் பாடல்கள் ஐம்பத்திரண்டு.

திருப்பழனப் பாடல்கள் பத்தும், தலைவியின் 'காமம் மிக்க கழிபடர் கிளவி' என்னும் ஒரு துறை சார்ந்தவையாகவே உள்ளன.

அப்பர் பாடிய பல அகப்பாடல்களில் பிச்சாடனார் கோலம் மையமாகத் திகழ்கின்றது.

"நென்னலையோர் ஓடேந்திப் பிச்சைக் கென்று
வந்தார்க்கு வந்தேனென் றில்லே புக்கேன்
அந்நிலையே நிற்கின்றார் ஐயங் கொள்ளார்
அருகே வருவார் போல் நோக்கு நின்றார்
நுந்நிலைமை யேதோநும் மூர்தா னேதோ
என்றேனுக் கொன்றாகச் சொல்ல மாட்டார்
மென் முலையார் கூடிவிரும்பி ஆகும்
வெண்காடு மேவிய விகிர்தனாரே" (6:35:3)

இத்திருப்பாடலைப் பெருந்திணைப் பெண்பாற் கூற்று என்று உரைப்பார்[33]. இப்பாடலில் 'பிச்சைக்கென்று வந்தார்; ஐயங்கொள்ளார்; வருவார்போல் நோக்கு நின்றார்; நும்நிலைமை ஏதோ; ஊர்தான் ஏதோ என்று வினவினாளுக்கு ஒன்றானும் சொல்லமாட்டார்' என வரும் உணர்வுகள் இப்பாடலைக் கைக்கிளை எனக் கொள்வதற்கும் இடமளிக்கின்றது.

சிவன் அணியும் கொன்றை மாலையைத் தலைவி தனக்கு வேண்டுவதாக நான்கு பாடல்கள் உள்ளன. (4:12:6; 5:29:4; 39:2; 78:5) மயிலாடுதுறைத் தலைவன் கொன்றை மாலையைத் தந்தால் என் பைங்கொடியின் மனம் தெளிவடையும்; வளைகள் கழலா வண்ணம் உடல் நலமுறும், பசலை நீங்கும் என்று செவிலி கூற்றாக வரும் பாடலில் கொன்றை மாலை வேண்டும் வழக்கைக் காண்கின்றோம். (5:34:2) சங்க இலக்கியங்களில் வரைவு வேண்டுவது முதன்மை பெற்றிருக்கச் சமயப் பாக்களிலோ மாலை வேண்டுதலே முதன்மை பெற்றிருக்கின்றது.

"உள்ளுவார் வினை தீர்க்கும் என்று உரைப்பர் உலகெல்லாம்
கள்ளியேன் நான் இவர்க்கு என் கன வளையும் கடவேனோ" (4:12:9)

என்னும் பாடலில் தலைவி, தன் குறையைப் போக்காத தலைமகன் உலகவர் வினைகள் யாவும் தீர்ப்பான் என்று உலகம் புகழ்ந்துரைப் பதை எள்ளி நகைக்கின்றாள். உலகுக்கெல்லாம் அருள் செய்யும் தலைவன் தனக்கும் அருள் செய்ய வேண்டுமென்ற எதிர்நோக்கோடு அப்பர் பாடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

'முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்' (6:25:7)

என்னும் பாடல், பக்தி இலக்கிய அகப்பாடல்களில் மிகச் சிறந்த பாடலாகத் திகழ்வது. சிவதத்துவங்களின் பெட்டகமாக இப்பாடலைப் பலரும் அணுகியுள்ளனர்.

## சிற்றிலக்கியக் கூறுகள்

சிற்றிலக்கிய வகைகளின் பெருக்கத்திற்குப்பக்தி இலக்கியங்கள் பெரிதும் துணைபுரிந்தன. சிற்றிலக்கியங்கள் பலவற்றுக்குரிய அடித்தளங்கள் ஆழ்வார் பாடல்களிலும் நாயன்மார் பாடல்களிலும் பொதிந்துள்ளன.

அப்பரின் திருப்பழனப் பதிகத்தில், குயில், நாரை, தென்றல், பூவை ஆகியனவற்றை அத்தலத்து உறையும் இறைவனிடத்துத் தலைவி தூது விடும் தன்மையைக் காண முடிகின்றது.

திருமருகல் பதிகத்தில் சிவபெருமான் உலாப் போதலைக் காண்பதற்குத் தலைவி காத்திருந்து ஏங்கும் குறிப்பு காணக் கிடக்கின்றது.

திருக்குறுக்கை வீரட்டப் பதிகத்தில் சிவபெருமான் ஏழுநாள் வீதியுலாப் போகும் குறிப்பு உள்ளது.

இறைவனை வாழ்த்துவது 'பல்லாண்டு' என்னும் இலக்கியத் தனி வகையாகும்.

"பாடுவார் பணிவார் பல்லாண்டு இசைகூறு பத்தர்கள்" (4:20:10)

என்று ஆரூர்ப் பதிகத்தில் அப்பர் பல்லாண்டு பாடு வழக்குண்மையைச் சுட்டியுள்ளார்.

பக்திக்காலம் பல்வேறு இலக்கிய வகைகள் பெருகிய காலம். மாலை, கோவை, தொகை போன்ற பதிகங்களைப் பாடிய முறையில் இவ்வகை இலக்கியங்கள் பெருகிச் செழிப்பதற்கு அப்பர் பதிகங்கள் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளன எனலாம்.

## நாட்டுப்புறச் செல்வாக்கு

அப்பர் தேவாரத்தில், பழமொழிகள், பேச்சு வழக்குச் சொற்கள் ஆகியன இடம்பெற்றுள்ளன. பெரும்பாலான பழமொழிகள் உவமைகளாகவே அமைந்துள்ளன. திருவாரூர்ப் பதிகங்களில் ஒன்று பழமொழிப் பதிகம் என்றே பெயர் பெற்றுள்ளது. இதன் பாடல்கள் பத்திலும் பழமொழிகளே முடிவுகளாக உள்ளமை கருதத்தக்கது.

"கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டு வித்தென்ன" (4:99:2)

"அறுகயிறு ஊசல் போல" (4:26:6)

"ஓடும்நீரினை ஓட்டைக் குடத்தட்டி மூடிவைத்
திட்ட மூர்க்கன்" (5:99:9)

"இருதலைக் கொள்ளியினிடை அகப்பட்ட எறும்பு போல" (4:75:6)

என்பன போன்ற பழமொழிகளும் நாட்டுப்புற மக்களின் வழக்காறு களாக இருந்தமைக்கு அப்பர் தேவாரம் சான்றாகின்றது. மேலும்,

"பாம்பின் வாய்த் தேரை போல' (4:46:1)

"பாழுக்கு நீரிறைத்தது போல' (4:52:7)

என மக்கள் வழக்கில் அடிக்கடி பயின்று வரும் பழமொழிகளும் இடம் பெற்றுள்ளன.

'தட்டி முட்டித் தள்ளாடி' (5:21:2)

'தெத்தே என' (4:17:1)

எனவும் நிச்சல் (5:60:2) (நித்தல்), உய்ஞ்சு (5:31:5) (உய்ந்து), வைச்சு (5:60:2) (வைத்து) போன்ற பேச்சு வழக்குச் சொற்களும் அப்பர் தேவாரத்தில் இடம் பெற்றுள்ளன.

## தமிழ்மொழிப் பற்று

களப்பிரர், பல்லவர் காலத் தமிழகத்தில் மிகப்பெரிய, அரசியல் சமயமொழி மாறுதல்கள் தோன்றின. அவை தமிழரின் வாழ்வையும் நாகரிகத்தையும் பல புதிய திருப்பங்கட்கு உட்படுத்தின. பல்லவர்கள் ஆட்சிக்காலத்தில் பாகத மொழி ஆட்சி மொழியாயிற்று. அக்காலத்தில் வடமொழியும் பெரிதும் போற்றப்பட்டு வந்தது. தமிழ்ப் புலவர்கள் அரசவையில் இடம்பெற்ற நிலை மாறி, வடமொழிவாணர்கள் அரசவையில் முதலிடம் பெற்றனர். கல்வெட்டுக்களும் செப்பேடு களும் வடமொழியிலேயே இருந்தன. காஞ்சிபுரம் வடமொழிக் கல்வி மையமாகத் திகழ்ந்தது. இவற்றால் அக்காலத்தில் அரசியல் செல்வாக் கிழந்த தமிழ்மொழி தனக்குரிய வளர்ச்சியின்றி மங்கிக் கிடந்தது. மொழி மட்டுமின்றித் தமிழ் நாகரிகமும் பண்பாடும் வீழ்ச்சியடையத் தொடங்கின. இத்தகைய சூழலில் தான் நாயன்மார்களும், ஆழ்வார் களும் தமிழுணர்ச்சியோடு கூடிய பக்திப் பாடல்களை அருளிச் செய்தனர்.

தமிழும் கடவுளும் சமய எழுச்சிக் காலத்தில் ஒன்றாக இணைக்கப் பட்டுத் 'தெய்வத்தமிழ்' என்னும் புதிய தோற்றம் உருவாயிற்று. அத்தோற்றம் புறச்சமயங்களை வெல்வதற்குரிய சக்தியாகவும் ஆற்றல்

பெற்றுத் திகழ்ந்தது. அப்பர் முதலானோர் முழுமுதற் பொருளுக்கு இணையாகத் தமிழை எண்ணினர்.

நாயன்மார்கள் அருளிய பாடல்களில் ஊடுருவி நிற்கும் தமிழுணர்ச்சி பற்றிப்,

> "பல்லவர் கால இலக்கியங்களை நாம் படித்துப் பார்ப்போமாயின் தமிழ், தமிழ் என்னும் ஆவேசக் குரலைக் காதாரக் கேட்கின்றோம்... சமணத்திற்குப் பதில் சைவம் நிலை நிறுத்தப்படவே வடமொழிக்குப் பதிலாகத் தமிழ்மொழி, தெய்வ மொழியாக உயர்த்தப்பட்டது. நாயன்மார் மூட்டிய தமிழ்மொழி உணர்ச்சியானது இன்று வரை நின்று நிலவு கின்றது என்று எண்ணிப் பார்க்கும் போதும், சைவத்திலிருந்து தமிழைப் பிரிக்க முடியாது என்று பலர் கூறுவதைக் கேட்கும்போதும் பல்லவர் கால மொழி நிலையை எண்ணி வியக்காமல் இருக்க முடியாது"[34]

என்று க. கைலாசபதி கூறுவது உளங்கொள்ளத்தக்கது.

தமிழ் படித்தும் அதன் பயனை அறியாத சமணர்களை அப்பர்

> "வாயி ருந்தமி ழேபடித் தாளுறா
> ஆயி ரஞ்சம ணுமழி வாக்கினான்" (5:58:9)

என்று குறிப்பிடுகின்றார். அப்பர், தமிழ், முத்தமிழ், செந்தமிழ், தென்றமிழ் என்னும் முறையில் பல இடங்களில் தம் திருமுறைகளில் தமிழைக் குறிப்பிட்டுள்ளார்.

'தமிழன்' என்ற சொல்லாட்சியை அப்பர் பயன்படுத்துவதும் ஈண்டு குறிப்பிடத்தக்கது. திருமறைக்காட்டுப் பதிகத்தில் இறைவனை,

> "ஆரியன் கண்டாய் தமிழன் - கண்டாய்" (6:23:5)

என்று கூறுவதால் ஆரியரும், தமிழரும் தனித்தனிப் பிரிவினர் என்றும், அவர்கள் இருவரும் சமய அடிப்படையில் ஒன்றுபடத் தக்கவர் என்றும் உணர முடிகின்றது.

> "செந்தமிழோடு ஆரியனை" (6:46:10)

எனக் கூறும்போதும் இறைவனைச் 'செந்தமிழன்' என்றும் 'ஆரியன்' என்றும் குறிப்பிடுவதைக் காணலாம். ஞானசம்பந்தர் 'செந்தமிழர்' என்ற சொல்லை இரு இடங்களில் (3:80:4; 1:6:8) குறிப்பிட்டுள்ளார். சிவனை வழிபட்டு வணங்குவோரையே 'செந்தமிழர்' என்ற பொருளில் அவர் பயன்படுத்தியுள்ளார். தமிழ் நாட்டார் என்ற பொருளில் 'தமிழர்' என்று பொதுவாகச் சொல்வதைவிடத் தமிழின் என்ற உணர்வோடு இறைவனை அப்பர் சுட்டியிருப்பது அவர்தம் தம்மின ஈடுபாட்டுணர்வை மேம்படுத்திக் காட்டுகின்றது. இவ்வகையில் 'தமிழன்' என்ற ஆட்சியை முதன்முதல் சுட்டி, அதனை இறைவனுக்கும் ஏற்றிக் காட்டி யிருப்பது அப்பரின் தனித்தன்மையைக் காட்டுகின்றது.

தமிழ்நாடு, மொழி, இனம், நாகரிகம், பண்பாடு ஆகியவற்றில் அப்பருக்கு ஏற்பட்ட பற்றே அவருடைய மனமாற்றத்திற்குக் காரண மென்றும், அவருடைய மதமாற்றம் என்பது, தமிழின மாற்றமே யென்றும் ந.ரா. முருகவேள் கருதுவர்.[35] அயல்நாட்டவர் தாக்கமும், அயல் பண்புகளின் செல்வாக்குமே இன உணர்வையும், மொழி உணர்வையும் ஏற்படுத்துவன. எனவே சமணரின் ஆதிக்கப்போக்கு, தமிழின உணர்வுடையவராக அப்பரை மாற்றியது என்று கருதுவது பொருத்தமிக்கதாக உள்ளது.

வடவாரியர், தென்தமிழர் என இளங்கோவடிகள் பகுத்துக் காட்டுகின்றார். ஆரியன், தமிழன் என்று அப்பர் பிரித்துக் காட்டு கின்றார். இவற்றால் ஆரியர், தமிழர் என்ற இனச்சிந்தனைகள் பழமையானவை என்பதனை உணர முடிகின்றது.

> "20-ஆம் நூற்றாண்டில் ஆரியர் திராவிடர் (தமிழர்) என இன நோக்கில் எழுந்த சிந்தனை இந்த நூற்றாண்டுக்குரியது அன்று; அது பழமை பெற்றதே என்பதைச் சிலப்பதிகாரமும் அப்பர் தேவாரமும் காட்டி நிற்கின்றன."[36]

என்று கூறும் கருத்தும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

அப்பர், சம்பந்தர் முதலானோர் வெளிப்படுத்திய தமிழுணர்ச்சி, அகச்சமய வெற்றிக்கு மட்டும் காரணமாக அமையாமல் தமிழ்மொழி யின் வளர்ச்சி, அதன் பெருமை, தனித்தன்மை ஆகியவற்றை நிலை நிறுத்துவதற்கும், காரணமாகியது. மேலும் ஒவ்வொருவரும் தமிழ்மொழி வாயிலாக இறைவழிபாட்டில் ஈடுபட வாய்ப்பளித்தது. இச்சீரிய பணியில் அப்பருக்குள்ள பெரும்பங்கைக் கருதியே சேக்கிழார், 'தமிழ்மொழித் தலைவர்' (பெ.பு. திருஞா.பா. 598) என்று அவரைப் போற்றிக் கூறியிருப்பது நோக்குதற்குரியது.

## தமிழிசையெழுச்சி

தமிழ்மொழியில் பழங்காலந்தொட்டே இயல், இசை, நாடகம் என்ற முப்பிரிவுகள் இருந்திருப்பினும் சமய எழுச்சிக் காலத்தில் தான், தமிழிசை முறையாக வளரத் தொடங்கியது. அதனால் தமிழில் இசைப்பண்பு மிகுதிப்பட்டுப் புதுப்புதுச் சந்தங்கள் உருவாயின. சமய குரவர்கள் இறைவனை இசைவிக்க இசையையே ஏற்ற கருவியாகக் கொண்டனர். 'இசை மலி தமிழ்' (1:22:11) 'இன்னிசைச் செந்தமிழ்' (7:67:11) எனவாறு தமிழுக்கு இசைத்தன்மையைப் புலப்படுத்தும் அடைமொழிகளைத் தந்து தமிழிசைக்குப் பெருமை சேர்த்தனர்.

தாண்டக வேந்தராகிய அப்பர் இயற்றமிழிலும், இசைத்தமிழிலும் புலமை பெற்றவர். 'தமிழோடு இசையானவன்' (5:18:3) என்று,

இறைவனை இசையுருவாகக் கருதியவர். அதனால் "தமிழோ டிசை பாடல் மறந்தறியேன்" (4:1:6) என்று உறுதியளித்தார் பண்ணும், திறமும், செயலும் பாணியும் ஒரு நெறியின்றி மயங்கிப் பல்வேறு மாறுதல்களைப் பெற்றுத் தெய்வம் சுட்டியும், மக்களைப் பழிச்சியும் வரும் வரிப்பாடலிலும், (4:25:6) எடுத்த இயலும் இசையும் தம்மில் முரித்துப் பாடும் முரிவரிப்பாடலிலும், அப்பர் வல்லவராய் விளங்கினார்.

"பாலை யாழொடு செவ்வழிப் பண்கொள" (5:12:10)

எனவரும் பாடலடி கொண்டு அவர்தம் இசைத்திறனை இசைவாணர்கள் விரித்துக் கூறுவர்.

"பஞ்சமம் பாடியாடும் தெள்ளியர்" (4:29:3)

"காமரங் கற்று மில்லேன்" (4:78:9; 4:79:5)

"காந்தாரம் தாம் முரலாப் போகா நிற்க" (6:9:2)

எனப் பண்களில் தமக்குள்ள ஈடுபாட்டினை அப்பர் புலப்படுத்தக் காணலாம்.

பக்தி இலக்கிய காலத்தில் இசை மக்களைக் கவரும் ஆற்றல் மிக்க கருவியாக இருந்ததோடன்றி, அவர்கள் வாழ்க்கையோடும் பின்னிப் பிணைந்திருந்தது. சங்க காலந்தொட்டு இசை மக்கள் வழக்கில் இருப்பினும், அது, சமய காலத்தில்தான் பெரிதும் இறையியலோடு இணைந்து ஏற்றமுற்றது.

'பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனை' (5:18:4)

'பண்ணிற் பாடல்கள் பக்தி செய்வித்தற்கு
அண்ணித் தாகும் அமுது" (5:44:8)

என அப்பரும் இசையை இறைவனோடு இணைத்துப் பாடினர்.

அப்பர் தலப்பயணம் செய்து, தமிழோடு இசை பாடியபோது, மக்கள் வாழ்வில் இசை புதிய மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தது. சமணர்களால் வெறுக்கப்பட்ட இசை, மீண்டும் புத்தொளி பெற்று மக்கள் வாழ்வோடு பின்னிப் பிணைந்தது.

அப்பர், சமணராயிருந்து சைவம் புகுந்து பாடிய முதற் பதிகத் திலேயே, தமிழுக்கும் இசைக்கும் உள்ள இணக்கத்தை உணர்ந்து பாடியுள்ளார். இசைத்தமிழ் இன்றி வாழ்ந்த பழைய சமண வாழ்வை வெறுத்துத் தமிழையும் இசையையும் கொண்டே சைவ வாழ்வை நடத்த வேண்டுமென்று முற்பட்டார். அவ்வகையில் சைவ எழுச்சிக்குத் தமிழும் இசையும் உந்தாற்றல்களாக விளங்கின என்று அறிய முடிகின்றது.

## முடிபுகள்

சைவத் திருமுறைகளில் நம்பியாண்டார் நம்பி ஏழு திருமுறை களையே தொகுத்துள்ளார்.

சேக்கிழார் காலத்திற்குப் பின்னரே சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோர் பாடிய திருமுறைகளுக்குத் 'தேவாரம்' என்னும் பெயர் பொதுவாக வழங்கப்பட்டுள்ளது.

நேரிசை, விருத்தம், குறுந்தொகை, தாண்டகம் ஆகிய பதிகப் பா வடிவங்கள் அப்பரின் புதிய முயற்சியில் உருவாகிய இலக்கிய அமைப்புகளாக உள்ளன.

அப்பர் பதிகங்கள் பெரிதும் பத்துப்பாக்கள் அடங்கியவை. பதிகந் தோறும் இராவணனைப் பற்றிய குறிப்பு இருப்பது அப்பரின் தன்னிரக்க உணர்வை வெளிப்படுத்துவதாக உள்ளது.

அப்பர் பாடியனவாகக் கிடைக்கும் 312 பதிகங்களில் பொருள், சொல், பொருளடைவு ஆகிய தன்மைகள் பற்றி ஐம்பது பதிகங்கள் சிறப்புப் பெயர்களைப் பெற்றுள்ளன.

திருமுறைப் பாடல்களில் அமைந்துள்ள சிறப்புத் தொடர்கள் காலப்போக்கில் இறைவன் - இறைவி பெயர்களாகவும் மக்கட் பெயர்களாகவும் வழக்கில் பயின்று வந்துள்ளன.

அப்பர் சுட்டியுள்ள அடியவர் வரலாறுகள், சமயவெழுச்சிக்கும் சமய நம்பிக்கைக்கும் தூண்டுதல்களாக உள்ளன.

புராண இதிகாசச் செய்திகள் சிவபெருமானின் தனிப்பெருந் திறத்தைச் சுட்டுவதோடு பொதுமக்களை ஈர்க்கும் கருவிகளாகவும் உள்ளன.

அப்பர் பாடிய அகப்பொருட் பாக்கள் சங்க கால அகப்பொருள் மரபு நெறிகளைப் போற்றி மேலும் வெளிப்படுத்தியுள்ளன.

அப்பர் பதிகங்கள், இலக்கிய வகைகள் பெருக முன்னோடி யாகத் திகழும் தகுதி வாய்ந்தவை.

அப்பர் வெளிப்படுத்திய தமிழுணர்ச்சி, தமிழ்மொழியின் வளர்ச்சிக்கும் அதன் தனித்தன்மைக்கும் காரணமாகியதோடு மக்களிடையே இறைவழிபாட்டு ஈடுபாட்டையும் பெருக்கியுள்ளது.

சமணத்திலிருந்து மீண்ட அப்பர் தலம்தோறும் சென்று தமிழிசை பாடியதால் தமிழகத்தில் புதிய மறுமலர்ச்சி தோன்றியது.

## அடிக்குறிப்புகள்

1. பிங்கலந்தை நிகண்டு, நூ. 3983.
2. கந்தபுராணம், அவையடக்கம், பா.1.
3. திருமந்திரம், பா.1067.
4. திருமுறை கண்ட புராணம், பாக். 24-29.
5. வெள்ளைவாரணனார், க., பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பகுதி, ப.31.
6. மேலது, ப.6.
7. அறிவுடைநம்பி, ம.சா., திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள், ப.25.
8. மேலது, ப.25.
9. செந்தமிழ் - தொகுதி - 45., பக். 121-123.
10. தொல்.செய்.நூ. 149., நச். உரை.
11. ஏகாம்பரநாதர் உலா, கண்ணி.78.
12. திருவருணைக் கலம்பகம், காப்புச் செய்யுள்
13. வெள்ளைவாரணனார், க., பன்னிருதிருமுறை வரலாறு, முதற்பகுதி, ப.36.
14. திருமுறைப் பெருமை, ப.92.
15. மேலது, ப.92.
16. சிலப்.அரங்கேற்றுக் காதை, வரி.67 அரும்பத உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் உரை.
17. வெள்ளைவாரணனார், க., பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பகுதி, ப.43.
18. மேலது, ப.47.
19. மேலது, ப.47.
20. திருமுறை கண்ட புராணம், பா.25.
21. திருநாவுக்கரசர் தேவாரம், நாலாந் திருமுறை, தருமபுர ஆதீனப் பதிப்பு, ப.685.

    திருநாவுக்கரசர் தேவாரம், கழகப் பதிப்பு, ப.142.

    தேவாரம் பண்முறை, பிரெஞ்சு இந்தியக் கல்வி நிறுவனப் பதிப்பு, ப.98.

    மூவர் தேவாரம், தலமுறை, ஸ்ரீ காமகோடி, ஆய்வு மையப் பதிப்பு, ப.377.
22. மூவர் தேவாரம், கழகம், ப.160; பிரெஞ்சு நிறுவனப் பதிப்பு, ப.109 ஸ்ரீ காமகோடிப் பதிப்பு, ப. 1483.
23. பின்னிணைப்பு - எண்.2
24. நன்னூல், நூ.1, சிவஞான முனிவர் விருத்தியுரை,
25. பின்னிணைப்பு - எண். 3.
26. வெள்ளைவாரணனார், க., பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பகுதி, ப. 701.
27. திருத்தொண்டர் புராணம், 3-1, ப. 711,12.

28. சேதுப்பிள்ளை, ரா.பி., திருவள்ளுவர் நூல் நயம், ப.86.

29. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், ப.116.

30. அருணாசலம், ப., பக்தி இலக்கியம், ப.91.

31. பின்னிணைப்பு - எண். 4.

32. அருணாசலம், ப., பக்தி இலக்கியம், ப.240.

33. திருநாவுக்கரசர் தேவாரம், தருமபுர ஆதீனப் பதிப்பு, ஆறாந் திருமுறை, ப.257.

34. கைலாசபதி, க., பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப. 126,27.

35. அப்பரடிகள், தமிழ்நாடு தெய்வீகப் பேரவை மலர், ப. 41.

36. கிருஷ்ணன், ப., தமிழ் நூல்களில் தமிழ்மொழி தமிழ் இனம் தமிழ்நாடு, ப. 145,46.

# 3. வாழ்வியல்

"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும்" (பொருளியல். 27)

என்பது தொல்காப்பியம். இன்பமாக வாழ நினைப்பது உயிரியற்கை. இன்பத்தை அடைதற்குரிய வழிமுறைகள் பலவாகும். அவற்றுட் சமயமும் ஒன்று. எனவே மனித வாழ்க்கை சமயத்தோடு மிகவும் தொடர்புடையது.

திருத்தொண்டின் நெறி இவ்வுலகில் வாழ்வதற்காக வந்து தோன்றியவர் அப்பர் பெருந்தகை. இறையியலோடு கூடிய வாழ்வே ஏற்றம் பெறும் என்பதைத் தம் வாழ்வாலும் வாக்காலும் உணர்த்தியவர். மனித வாழ்வுக்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர்.

அப்பர் பெருமான் தம்முடைய தேவாரத் திருப்பதிகங்கள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ள மனித வாழ்வு பற்றிய மெய்ம்மைகள், சிறப்பாக அவருடைய தனி வாழ்வியல் பற்றிய நெறிமுறைகள் ஆகியன அப்பர் தேவாரம் காட்டும் வாழ்வியலைப் புலப்படுத்த வல்லன. மனித வாழ்வு, சமய வாழ்வு, சமுதாய வாழ்வு என்ற மூவகைப் பிரிவினதாக இவ்வியல் அமைந்துள்ளது.

## அ. மனித வாழ்வு

மனித வாழ்வு விழுமிய சிறப்பினைக் கொண்டது. அவ்வாழ்வு சிறப்பதற்கு ஒழுக்கம் தேவை. 'குறிக்கோள்' இல்லாத வாழ்வு விலங்கு வாழ்க்கைக்குச் சமம். மனித வாழ்க்கைக்குச் சில பொறுப்புக்களும் குறிக்கோள்களும் உள்ளன. அவற்றை அவன் அடைவதற்குப் போராட வேண்டியுள்ளது. உயர்ந்த குறிக்கோளை நாடி மனிதன் நடத்தும் போராட்டத்தில் அவன் வெற்றி பெறுவதைப் பொறுத்தே அவனுடைய வாழ்வின் வெற்றியும் அமைந்திருக்கும்.

வாழ்க்கைக்கு அடிப்படை அன்பு ஒன்றுதான். 'அன்பின் வழியது உயிர்நிலை' என்பது வள்ளுவரின் முடிபு. அன்பின் வளர்ச்சியில் மனித வாழ்வு அமைய வேண்டும்.

"அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு" (குறள்-80)

என்ற குறள் மனித சமுதாயத்தின் வளர்நிலைக்கு அடிநிலையாக அமைந்துள்ளமை கருதத்தக்கது. இந்நெறியில் ஒழுகும் மனிதன், தான்பெற்ற இன்பத்தை இவ்வுலகமும் பெற வேண்டும் என்ற உயரிய கொள்கையனாக வாழ்வான். நன்மையை நாடி, நன்மையை அடையும் குறிக்கோளை உடைய மனிதன் தன்னலம் மறந்து பொதுநலங் கருதும் பண்புடையவனாகவே திகழ்வான்.

"மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை" (குறள்-244)

என வள்ளுவர் மனித வாழ்வின் அடிப்படை உண்மையை எடுத்துக் கூறுவர்.

மனிதனைப் பற்றிய விளக்கமாகத் திரு.வி. கலியாண சுந்தரனார் கூறுவது ஈண்டு உளங்கொளத்தக்கது.

"ஆறாவது அறிவு விளங்கப்பெற்று அதன்வழி நிற்கும் மனிதன், தன்னுயிரைப் போலவே மன்னுயிரையும் பார்ப்பன். இரக்கமே அவன் உள்ளத்தில் குடிகொண்டு நிலவும், அவன் தனக்கென்று உலகத்தில் வாழான், தன் வாழ்க்கை 'மற்றவர்க்கே' என்று அவன் கருதுவன். அவன் கொலை, களவு, கள், காமம், பொய் என்னும் ஐம்பெரும் பாவங்களுக்கு அஞ்சுவன். அவன் கரணங்களெல்லாம் அன்பு வண்ணமாகப் பொலியும், விலங்கியல்பு அவனிடத்தில் தோன்றுதல் அருமை. அவன்றான் பிற உயிர்களின் துன்பத்தைத் தன் துன்பமாகக் கொள்வன். இன்னோரன்ன இயல்புகள் வாய்ந்த ஒருவனையே மனிதன் என்று கூறலாம் இம்மனித நெறியைப் பின்பற்றி வாழும் மனிதன் உள்ளத்தில் அருளொளி துலங்கும்; கடவுள் வந்து குடிகொள்வான். மனித வாழ்வு இம்முறையில் அமையும்போதுதான் அது மாண்புடைய வாழ்வாகத் திகழும். அவன் பிறவி பெற்றதன் நோக்கமும் நிறைவேறும்.[1]

## மனிதப் பிறவி

மனிதன் இறையுணர்வுடன் கூடிய அருள் வாழ்க்கை நடத்தும் போதுதான் அவனுடைய பிறவிக்குப் பொருள் உண்டு. அப்பர் பிறவியைப் பலவகையில் இகழ்ந்து பாடியுள்ளார். எனினும் இறைவனை வணங்குவதற்கும், அவனுக்குப் பணி செய்வதற்கும், அவன் புகழைப் போற்றவதற்கும் இப்பிறவி உரியதாக அமைந்து விட்டால், அத்தகைய பிறவியும் வேண்டப்படுவதே என்று தெளிவு படுத்துவது சிந்தித்தற்குரியது.

ஆடல் வல்லானின் அழகிய கோலமும், அவனுடைய பொற்பாதமும் காணப்பெறும் வாய்ப்பு இருக்குமானால்,

"மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே" (4:81:4)

என்று வேண்டுகின்றார்.

உலகத்துப் பொருள்களின் ஆசையில் பட்டு மெய்ப்பொருளாகிய இறைவனை மறந்து, பொய்யான வாழ்வில் சிக்கித் தவிக்கும் மனிதப் பிறவியை அப்பர் இகழ்ந்துரைக்கின்றார்.

"வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்" (4:81:5)

என்று கூறி, பிறவியெடுத்ததன் பயன் இறைவனுக்கு ஆட்பட்டிருப் பதே என்றும் தெளிவுறுத்துகின்றார்.

நன்னெறியில் ஒழுகி, இறைவழியில் நிற்பதே மனித வாழ்வு செம்மைப் படுவதற்கும், மனிதப்பிறவி ஈடேற்றம் பெறுவதற்கும் உரிய செயல் என்பது அப்பரின் துணிபு.

## ஆ. சமயவாழ்வு (சைவம்)

நம்பிக்கையின் அடிப்படையில் வழிபாடாற்றுவதும், கடமை உணர்ந்து செயலாற்றுவதும், கடவுள் உணர்வு பெற்று வாழ்வதும் சமய வாழ்வாகும். சமயம், பண்பாட்டுக்கு அடித்தளமாகவும், சமுதாய வாழ்வுக்கு வழிகாட்டவல்லதாகவும், வாழ்வுக்குரிய ஒழுக்கத்தை அறிவுறுத்தக் கூடியதாகவும் இருக்கக்கூடிய ஆற்றலைப் பெற்றுள்ளது. வாழ்வில் திறம்பட ஒழுகுவோர் 'மனிதர்' எனத் தக்க மாண்பினைப் பெறுவர். சைவசமய வளர்ச்சிக்குக் குறிப்பிடத்தக்க தொண்டாற்றிய பெருமை அப்பருக்கு உண்டு. அவருடைய வாழ்விலிருந்தும், அவர் அருளிச் செய்த பாடல்களிலிருந்தும் வெளிப்பட்டுள்ள சைவ சமய வாழ்வுக் கூறுகள், தயாமூலதன்மம், மனத்திட்பம், புலனடக்கம், நடை யறாப்பெருந் துறவு, நிலையாமை, அறிவுறுத்தல் என்ற பகுதி களில் ஆராயப் பெற்றுள்ளன.

### 1. தயாமூலதன்மம்

அப்பர் சைவசமயத்திற்குக் கொடுத்த சொற்கொடை 'தயாமூல தன்மம்'. 'தயாமூலதன்மம்' என்பதற்கு 'அருளை அடிப்படையாகக் கொண்ட அறம்' என்பது பொருள். அருளும் அறமும் பிணைந்த வாழ்க்கையே பண்பட்டுச் சிறக்கும் என்பது அப்பரின் அறிவுரை.

'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற உயரிய கொள்கையைப் போற்றி வளர்ப்பதற்கு அருளும் அறமும் அடிப்படையாக

அமைய வேண்டும். அப்பர் போன்ற அருளாளர்கள் இவ்வுலகம் வளம்பெற்று வாழ இக்கொள்கையை வாழ்வியற் கொள்கையாக அறிவுறுத்தினர். அவர்கள் பொன்னையும் பொருளையும் பெரிதாகப் போற்றவில்லை. கடுவன் இளவெயினனார் என்னும் புலவர், முருகப் பெருமானிடம்,

"...... யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல; நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்" (பரி. 5)

என வேண்டுவது ஈண்டு நினையத்தக்கது. அப்பர் கூறிய 'தயாமூல தன்மம்' உலக மக்களின் வாழ்விற்கு அடிப்படையாக அமைந்து விட்டால் போரும், பிணக்கும் நீங்கி உலகம் அமைதிப் பூங்காவாகப் பொலியும் என்பது திண்ணம்.

அப்பர் 'தயாமூலம்' என்ற வாழ்வியற் கொள்கையை இறையியலோடு இணைத்து, அதற்குத் தெய்வத் தன்மையை ஊட்டுகின்றார். இறைவனே முதலில் தயாமூல தன்மவழியில் நின்று வழிகாட்டு கின்றான் என்பதை,

"சலங்கொடுத்துத் தயாமூல தன்ம மென்னுந்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பி" (6:20:6)

என்ற பாடற்பகுதியில் உணர்த்துகின்றார். மக்கள் அனைவரும் இவ் வழியைப் பின்பற்ற வேண்டும் என்பதே இதன் உட்கருத்து. உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வேறுபாடின்றி அருளும் அறமும் அனைவர்க்கும் உரித்தாதல் வேண்டும்; குறிப்பாக வாழ்க்கையில் துன்புற்றவர்கட்கு இந்நெறி துணைபுரிய வேண்டும் என்பது அப்பரது விழைவு.

"அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள்செய்வானை" (214:2)

என்று கூறி இறைவனே இத்தயாமூல தத்துவத்தின் வழிநின்று செயற்படுவதைப் புலப்படுத்துகின்றார். மக்கள் இப்படிச் செயற் படவேண்டும் என்பது இதன்பொருள்.

அப்பர், 'தயாமூலதன்ம' வழியை இறைவனே தமக்கு நல்கித் தம் மனத்தைத் திருத்தியதாகவும் குறிப்பிடுகின்றார்.

"தயாமூல தன்மவழி எனக்கு நல்கி
மனந் திருத்தும் மழபாடி வயிரத் தூணே" (6:40:6)

என்பது அப்பரின் பாடற்பகுதி. எனவே 'தயாமூலதன்மம்' என்னும் தத்துவம் சிவபெருமானால் தமக்கு அருளப்பட்டது என்பதை ஈண்டு உறுதி செய்கின்றார்.

உயிர்களிடத்துக் கருணை காட்டவேண்டும்; கருணையின் அடிப்படையில் அறம் வளர வேண்டும்; அவ்வறம் எல்லோரையும் சென்றடைய வேண்டும் என்ற கருத்துக்களை அப்பர் தயாமூல தத்துவத்தின் வழியாக மக்களுக்கு எடுத்துக்கூறி அறிவுறுத்துகின்றார்.

## 2. மனத்திட்பம்

உறுதியற்ற எண்ணங்களும், மனத்தடுமாற்றங்களும் அன்பும் அறமும் கூடிய வாழ்க்கைக்கு உறுதுணையாக அமையா. கொண்ட குறிக்கோளை அடைய முடியும் என்ற அசையாத நம்பிக்கையும் அதன் அடிப்படையில் எழுகின்ற மனவுறுதியுமே வாழ்க்கையின் வெற்றிக்கு அடிப்படைகளாக அமைகின்றன.

அப்பர் தம் வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் ஏற்பட்ட துயரங்களையும், சோதனைகளையும் தம்முடைய மனவுறுதியைக் கொண்டே வெற்றிபெற்றார். அவர் எண்ணிய எண்ணங்கள் நிறைவேறு வதற்கு அவருடைய மனத்திட்பமே காரணமாக அமைந்தது.

''வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்பம்
மற்றைய வெல்லாம் பிற'' (குறள். 661)

என்ற குறள்நெறி செயலுறுதிக்கு மனவுறுதியே அடிப்படை என்பதை வலியுறுத்துவது காணலாம்.

வாழ்க்கையின் வெற்றிக்கு மனவுறுதி வேண்டும் என்பதையும் சற்றுக் கலங்கினாலும் ஐம்புலயானையால் அலைக்கழிக்கப்பட்டு அல்லலுற நேரிடும் என்பதையும் அப்பர்,

''மலையே வந்து வீழினும் மனிதர்காள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவனாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே'' (5:91:5)

என்ற இப்பாடலின் வழி மக்களுக்குத் தெளிவுறுத்துகின்றார்.

சமணர் செய்த வஞ்சனைகளில் இருந்து அப்பர் மீண்டமைக்கு அவரிடத்திருந்த மனவுறுதியே காரணம். திருப்பெண்ணாகடத்து இறைவனிடம்,

''என்னாவி காப்பதற்கு இச்சையுண்டேல் இருங்
கூற்றகல மின்னாரும் மூவிலைச் சூலம் என்மேற் பொறி'' (4:109:1)

என மனவுறுதியுடன் வேண்டுகின்றார். 'நீ பொறிக்கவில்லை யாயின் என் ஆவிகழிந்துவிடும்' என்று இறைவனிடம் கூறிய மனவுறுதி யால் அவர் வேண்டிய வேண்டியாங்குப் பெற முடிந்தது.

மறைக்காட்டுக்கதவந் திறக்க இறைவன் காலம் தாழ்த்திய போதும் அப்பர் மனந்தளரவில்லை.

"கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
*திண்ண மாகத்* திறந்தருள் செய்ம்மினே" (5:10:10)

என மனவுறுதியுடன் வேண்டி வெற்றிபெற்றார்.

பழையாறை வடதளியில், சமணர்களால் மறைக்கப்பட்டிருந்த சிவபெருமானைக் காணவேண்டும் என்னுங்கருத்தினரோடு

"நானும்மை வணங்கி யன்றிப் போகேன்"

என்று உண்ணா நோன்பிருந்து தம் எண்ணத்தை நிறைவேற்றிக் கொண்டார்.

மேலும் கயிலைக் காட்சி காண்பதில் அவருக்கிருந்த மனவுறுதி பற்றிச் சேக்கிழார் கூறியிருப்பதும் நினையத்தக்கது. திருப்புகலூரில் இறைவன் தமக்கு ஏற்படுத்திய சோதனைகளைத் தம்முடைய மனத்திட்பங்கொண்டே அவர் கடந்து நின்றார்.

மனித வாழ்க்கையில் மனத்திட்பத்துக்குரிய மாட்சியை, அப்பர் தம் வாழ்க்கையைக் கொண்டே மக்களுக்கு விளக்கியுள்ளார். உறுதியான எண்ணத்திற்கு எப்போதும் நிலைத்த ஆற்றலுண்டு. காந்தியடிகள், ஆபிரகாம் லிங்கன், நெப்போலியன் போன்றோரின் வாழ்க்கையில் இம்மனத்திட்பம் இருந்தமையால் வரலாற்றில் அவர்கள் நிலைத்த புகழைப் பெற்றனரென்பதும் ஈண்டு உணர்தற்குரியது. சமய வாழ்க்கையின் அடிப்படையில் அப்பருடைய மனத்திட்பம் இவண் விளக்கப்பெறினும், சமுதாய வாழ்க்கைக்கும் பொது என்பதே உண்மை. அப்பரின் வாழ்வியலுக்கும் இறையியலுக்கும் இம்மனவுறுதியே அடித்தளமாகத் திகழ்ந்துள்ளது.

"எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்" (குறள். 666)

என்னும் இக்குறள்நெறியின் அடிப்படையில் அப்பருடைய வாழ்வும், அதன்வழி அவர் நமக்குணர்த்தும் வாழ்வியல் கருத்தும் அமைந்துள்ளன.

### 3. புலனடக்கம்

மனிதன் மனிதனாக வாழ்வதற்குப் புலனடக்கம் அடித்தளமாக அமைகின்றது. ஐம்புலன்களையும் அடக்கி வாழ்தல் என்பது துறவிகட்கு மட்டும் உரியநெறியன்று. மனிதராகப் பிறந்தோர் அனைவருக்கும் உரியநெறி. உலகில் நடைபெறும் தீயசெயல்கள்

அனைத்திற்கும் புலனடக்கமின்மையே காரணமாகும். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளை ஒரு நெறிப்படுத்தி வாழாமையினால் உலகில் பலர் சிறுமையுற்றுத் தவிக்க நேரிடுகின்றது. பொறியடக்கமே புலனடக்கத்திற்கு வழியாகும். அடக்கமில்லையேல் ஒழுக்கம் என்பதும் இல்லாமற்போய்விடும். திருக்குறளில் அடக்கமுடைமையின் பின் ஒழுக்கமுடைமை வைக்கப் பட்டிருப்பதும் இது கருதியே எனலாம். அதிகார வைப்புமுறை கூறிய பரிமேலழகர், "இது மெய்ம்முதலிய அடங்கினார்க்கல்லது முடியாதாகலின் அடக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது"[2] எனக் கூறியிருப்பதும் கருதத்தக்கது.

மனிதநலம் பேணிய சான்றோர்கள் புலனடக்கத்தை மிகுதியும் வற்புறுத்தியுள்ளனர். ஐம்பொறிகளுக்குத் தருகின்ற உரிமை, மனிதரை அடிமைப்படுத்திவிடுகின்றது. அருளாளர்கள் மனஉறுதியோடு ஐம் பொறிகளின் மீது தங்கள் ஆணையைச் செலுத்தி, அப்பொறிகள் தத்தம் புலன்கள் மேற்செல்லாமல் காத்தனர்.

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற் கோர்வித்து" (குறள். 24)

என்னும் குறள் 'மனத்திண்மை' ஒன்றே ஐம்பொறிகளை அடக்கியாள் வதற்குரிய வழியெனக் குறிப்பிட்டுள்ளமை காணலாம்.

அப்பர் மனித வாழ்க்கைக்கு வழிகாட்டிய செம்மையாளராகவும், நடையறாப் பெருந்துறவு போற்றிய சான்றோராகவும் திகழ்ந்தமையால் அவர் ஐம்புலன்களை வென்று வாழ்ந்தமை புலனாகின்றது. தம்முடைய மனத்திண்மையைக் கொண்டு தம்மை எதிர் நோக்கிய தீயசக்தி களை அவர் வென்று சிறந்தார்; எனினும் அவர் தம்முடைய பாடல் களில் ஐம்பொறிகளின் ஆற்றல் பற்றியும், அவை தம்மைத் தொடர்ந்து வந்து தாக்கியமை பற்றியும், தாம் அலைக்கப்பட்டமை பற்றியும் மிகுதியாகக் குறிப்பிட்டுள்ளார். அவர், புலன்களின் வழித் தம் வாழ்வைச் செலவிட்டவர் என்று இதற்குப் பொருள் கொள்வது பொருத்த முடையதன்று. குறைகளைத் தம் மேலிட்டுக் கொண்டு பிறருக்கு அறிவுறுத்தும் நோக்கங்கருதியே இங்ஙனம் கூறியுள்ளார் எனலாம்.

"சமுதாயச் சிந்தனைகளைத் தன்மேலிட்டுத் தொண்டு பாடுவதன் மூலம், அதனைப் படிப்போர் ஒவ்வொருவரும் அவ்வுணர்வுபெற்று, உலகியல் வட்டத்திலிருந்து இறைவட்டத்திற் சென்றுய்வர் என்று கருதியே இவ்வாறு பாடினார் எனல் வேண்டும்"[3]

என்று ப. அருணாசலம் கூறும் கருத்தினை ஈண்டு ஒப்பிட்டுக் காண்பது பொருத்தமாக அமையும். அப்பர் அவற்றை ஐம்பொறி

களின் ஆற்றலை வெளிப்படுத்தும் நோக்கில் பல்வேறு பெயர்களில் உருவகப்படுத்தி மொழிந்துள்ளார். 1. அப்பர்போல் ஐவர் (4:54:3) 2. ஐவர் கள்வர் (4:77:5) 3. கொடுந்தொழிற் குணத்தர் (4:67:4) 4. குணமிலா ஐவர் (4:36:2) 5. கூற்றம்போல் ஐவர் (4:32:6) 6. வாணிகர் ஐவர் (4:67:7) 7. நாணிலார் ஐவர் (4:67:8) 8. புள்ளுவர் ஐவர் (4:77:5) 9. ஐவர் மூர்க்கர் (4:52:1) 10. பொல்லாப்புலன்கள் (4:8:6) 11. அரட்டர் ஐவர் (5:7:5) 12. மதகளிறு ஐந்து (5:46:8) என அவர் குறிப்பிடுவதிலிருந்து மனித மனத்தை ஐம்பொறிகள் எவ்வகையில் ஆட்டிப்படைக்கவல்லன என்பது தெளிவாகும்.

ஐம்பொறிகளின் வழி மனத்தைச் செலுத்தியவர், அவை ஆட்ட ஆடி நிலை தடுமாறி எங்ஙனம் துன்பமுறுவர் என்பதனை அப்பர் தம் மேலிட்டுக் கொண்டு பலவாறாக எடுத்துக் கூறுகின்றார்.

"அப்பர்போ லைவர்வந்து அதுதரு கிதுவிடென்று
ஒப்பவே நலியலுற்றா லுய்யுமாறறிய மாட்டேன்" (4:54:3)

"முற்றினா லைவர்வந்து முறைமுறை துயரஞ் செய்ய
அற்றுநா னலந்து போனேன்" (4:31:6)

"அழிவுடைத் தாயவாழ்க்கை யைவரா லலைக்கப்பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன்" (4:31:6)

"வாழ்வதே லரிதுபோதும் வைகலு மைவர்வந்து
ஆழ்குழிப் படுக்க வாற்றேன்" (4:52:5)

"நிலையிலா நெஞ்சந்தன்னு ணித்தலு மைவர்வேண்டும்
விலைகொடுத் தறுக்கமாட்டேன் வேண்டிற்றே வேண்டி யெய்த்தேன் (4:69:2)

"புள்ளுவ ரைவர்கள்வர் புனத்திடைப் புகுந்துநின்று
துள்ளுவர் சூறைசொள்வர் தூநெறி விளைய வொட்டார்" (4:77:5)

"மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்
தாக்கு மைவர்த மாப்பை யவிழ்த்தருள்" (5:47:7)

"அஞ்சப் புலனிவற்றா லாட்ட வாட்டுண்
டருநோய்க் கிடமாய வுடலின் தன்மை
தஞ்ச மெனக் கருதித் தாழேல் நெஞ்சே" (6:42:8)

மேற்சுட்டிய பகுதிகளிலிருந்து, ஐம்பொறிகளின் வழி மனத்தைச் செலுத்தினால், மனம் ஒரு நிலையில் நில்லாது தடுமாற்றமுறும்; அவற்றால் வரும் துன்பத்தைப் பொறுக்க முடியாது; தப்பிப் பிழைக்க வழியறியாது திகைக்கச் செய்து சிறைப்படுத்திவிடும்; அருநோய்க்கு இடங்கொடுக்கும்; நல்ல நெறியை வளர வொட்டாது என்ற உண்மைகள் புலனாகின்றன.

வாழ்வியல் நிலையில் ஐம்பொறிகளின் ஆற்றலைச் சுட்டிய அப்பர், அவற்றை வெற்றி பெறுவதற்கு இறைநெறியை நாட வேண்டுமென அறிவுறுத்துகின்றார்.

1. தீமை புரிவதில் மிகுந்த ஆற்றலுடைய ஐம்புலவேடரை, அவர்கள் காணாதவாறு, முக்கண்ணனாகிய சிவபெருமானின் திருவடி நிழலில் மறைந்து நின்று சிவஞானம் என்னும் அம்பு எய்து வெல்லலாம் (4:77:5).

2. தம்மை வருத்திய ஐம்புலக் களிற்றைத் தாமும் வருத்த வேண்டும் என்ற மனத்திண்மை உடையவர்கள் மனத்தில் சிவபெருமான் துணையாக இருப்பான். எனவே ஐம்புலனை வருத்தும் தன்மை சிவனடியார்களிடம் உள்ளது (4:31:3).

3. ஐம்பொறிகளால் தாக்குண்டவர்களின் கட்டினை (பந்தம்) நீக்கித் தமது அருட்பார்வையால் அவர்களின் நோய் முதலியவற்றையும் சிவபெருமான் போக்கி அருளுவான் (5:47:7).

ஸ்பன அப்பரின் அறிவுரைகள். ஒன்றியிருந்து இறைவனை நினைப்பவர்கள் ஐம்புல ஆற்றல்களினால் அல்லலுற மாட்டார்கள்; அவர்தம் வாழ்வு சிறக்கும் என்பது அப்பரின் முடிபு.

## 4. நடையறாப் பெருந்துறவு

அப்பர் மனித வாழ்க்கையை வெறுக்கவில்லை. நிலையாமையைக் கூறுவதும், வாழ்க்கையை வெறுப்பதும் வேறு வேறாகும். அப்பர் நிலையாமையைக் கூறினாரேயன்றி வாழ்க்கையை வெறுத்துக் கூறவில்லை. துறவு என்பதும் ஒருவித வாழ்க்கையே. பிறரால் பழிக்கப் படாமல் இருக்கும்வரை துறவற வாழ்வுக்கும் சிறப்புண்டு. அப்பர் துறவுநெறியைப் போற்றி ஒழுகிய பண்பாளர். அவரது துறவு மற்றவர் கட்கு ஓர் எடுத்துக்காட்டு. 'யான்', 'எனது' என்னும் செருக்கறுத்து வாழ்தலே துறவுக்கு முதல்நிலை. அப்பர் இவ்விருவகைப் பற்றினையும் நீக்கிய துறவாளர். 'காமம்', 'வெகுளி', 'மயக்கம்' என்னும் மூன்று குற்றங்களும் அவரிடத்துச் சேரவில்லை.

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவர்" (குறள்.348)

என்பது வள்ளுவம் துறவுக்கு வகுத்த நெறி. இதன்படி 'தீரத் துறத்தல்' ஒன்றினால்தான் இறைவன் தாளைத் தலைப்பட்டு வீடுபேறு அடைய முடியும் என்பது தெளிவாகின்றது. அப்பர் 'திருநின்ற செம்மையே செம்மை'யாகக் கொண்டு வாழ்ந்தவர் என்பது மட்டுமின்றி இறைவனால் 'திருவடி தீக்கை' செய்யப் பெற்றவர் என்பதும் ஈண்டு கருதத்

தக்கது. வள்ளுவர் கூறிய 'தீரத்துறத்தல்' என்பதை அப்பரிடத்து முற்றாகக் காணமுடிகின்றது.

மண், பொன், பெண் ஆகியவற்றால் விளையும் பற்றினை அறவே நீக்கித் துறவுக்கு இலக்கணம் வகுத்த பெருமை அப்பருக்கு உண்டு. பயனை எதிர்நோக்காமல் துறவு கொள்வது எளிய செயலன்று. தம்முடைய துறவுக்கும் ஒரு பயனை நாடுதலே துறவியர்தம் பொதுப்பண்பு. அப்பர் பயன் கருதாத் துறவை, அதிலும் தீரத்துறத்தலாகிய துறவை மேற்கொண்டு வாழ்ந்தார்.

"கேடு மாக்கமுங் கெட்ட திருவினார்
ஓடுஞ் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" (பா. 8)

என்று திருக்கூட்டச் சிறப்பில் சேக்கிழார் கூறிய இப்பாடல் முற்றிலும் அப்பருக்குப் பொருந்துவதாகவே அமைந்துள்ளமை காணலாம். திருப்புகலூரில் பொன்னையும் பெண்ணையும் காட்டி இறைவன் நாவுக்கரசரை மயக்கிச் சோதனை செய்தபோது அதிலிருந்து அவர் வென்றமை, அப்பரின் நடையறாப் பெருந்துறவுக்குத் தக்க சான்றாகும். தத்துவ ஞானம் தலைப்பட அப்பருக்குத் துறவு நெறியே அடிப்படையாக அமைந்திருந்தது.

அப்பர் பாடியுள்ள பாடல்களில் அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சி களைப் போன்று பல செய்திகள் இடம் பெற்றுள்ளன.

"மையரி மதர்த்தவொண்கண் மாதரார் வலையிற்பட்டுக்
கையெரி சூலமேந்துங் கடவுளை நினையமாட்டேன்" (4:54:2)

"கற்றதே லொன்றுமில்லை காரிகையாரோடாடிப்
பெற்றதேற் பெரிதுந் துன்பம்" (4:52:8)

"மக்களே மணந்ததார மவ்வயிற் றவரையோம்பும்
சிக்குளே யழுந்தியீசன் றிறம்படேன்" (4:79:2)

என்ற பாடற்பகுதிகள் அவருடைய சொந்த வாழ்க்கையின் அனுபவங் களாகக் கொள்ளத் தக்கனவல்ல. சமய குரவர்கள் பிறர் குறைகளைத் தம்மேலிட்டுக்கொண்டு கூறுவது மரபு என்பதும் முன்னர்க் கூறப்பட்டது. அவர் பெண்களை விழைந்ததாகக் கூறுவதும், உலக வாழ்க்கையை நயந்ததாகச் சொல்வதும், உண்மையை உணராது மாயையில் சிக்கியதாக உரைப்பதும் அவர் சமய குரவராக நின்று குறைகளைத் தம்மேலேற்றி எதிர்மறை முகத்தால் மக்களை அறிவுறுத்தித் திருத்தும் நோக்கங்கருதியே எனலாம்.

துறவு வாழ்க்கைக்கு மனநிறைவு முக்கியம். துறவிக்கு மனநிறைவு எப்போது ஏற்படவில்லையோ அப்போது துறவு ஒழுக்கத்திற்குப் பொருளின்றிப் போய்விடும். அப்பரிடத்து இந்த மனநிறைவு மிகுதி யாக இருந்தது.

"மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்" (குறள். 280)

என்ற குறட்கருத்தும் ஈண்டு நினையத்தக்கது. அப்பரும் புறச்சடங்கு களுக்கு முதன்மைதராத துறவியாகவே திகழ்கின்றார். ஒழுக்கம், வாய்மை, பற்றின்மை, மனநிறைவுடைமை, அடக்கமுடைமை, துன்பத்தை யும் இன்பத்தையும் ஒருசேரக் கருதும் மனப்பான்மை ஆகியவற்றால் அப்பர் நடையறாப் பெருந்துறவு போற்றியவர் என்பது புலனாகின்றது.

### 5. நிலையாமை

இந்தியச் சமயங்கள் அனைத்திற்கும் இந்நிலையாமைக் கொள்கை பொதுவாக உள்ளது. பழந்தமிழ் நூல்களில் நிலையாமைக் கொள்கை ஓர் அறநெறிக் கொள்கையாகப் போற்றப்பட்டது. தொல்காப்பியப் புறத்திணையியல்

"பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற்றானும்
*நில்லாவுலகம்* புல்லிய நெறித்தே" (நூ. 18)

என்று நிலையாமையை எடுத்துமொழியும்.

நில்லாதனவற்றைக் கொண்டு நிலைத்தவற்றை அடையும் முயற்சியைக் 'காஞ்சித் திணை' என்று தொல்காப்பியர் கூறுவர். புறநானூற்றில் பாடாண்திணையில் 'செவியறிவுறூஉ' துறையில் இடம் பெற்றுள்ள பாடல்களும், 'பொருண்மொழிக் காஞ்சி', 'பெருங்காஞ்சி', 'முதுமொழிக்காஞ்சி' ஆகிய துறைகளில் அமைந்துள்ள பாடல்களும் இந்நிலையாமைக் கருத்தை எடுத்துக் கூறுகின்றன.

அறநெறிக் கருத்துக்களைக் கூறும் இலக்கியங்கள் தனித்து வளர்ந்தபோது நிலையாமைக் கருத்து முதலிடம் பெற்றது. சமண சமயத்தினர் பெரிதுந் துறவறத்தைப் போற்றியதால், அவர்கள் நிலை யாமைக் கருத்தினை வாழ்க்கையின் முக்கிய நோக்காக எடுத்துக் கூறினர். சைவ, வைணவ சமயங்களைச் சார்ந்த நாயன்மார்களும் ஆழ்வார்களும் இந்நிலையாமைக் கருத்தைத் தங்கள் பாடல்களில் பெரிதும் வலியுறுத்தினர்.

இளமைக் காலத்திலேயே நிலையாமை அனுபவத்தை அப்பர் நன்கு உணர்ந்திருந்தார். அதனால் "நில்லாத உலகியல்பு கண்டு,

நிலையாவாழ்க்கை அல்லேன்" என்று முழுமையாகத் துறவு நெறியைத் தழுவினார். அவர் சார்ந்த சமண சமயமும் நிலையாமைத் தத்துவத்தை முதன்மைப்படுத்திப் பேசியதால் அப்பரின் மனத்தில் நிலையாமை உணர்வு ஆழப்பதிந்துவிட்டது எனலாம். சைவம் திரும்பிய பின்னரும் அவர் 'நிலையாமை' உணர்வில் இருந்து மீளவில்லை. எனவேதான் அவருடைய பாடல்களில் நிலையாமைக் கருத்துக்கள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. அவை உலக மக்கட்குக் கூறும் அறிவுரை களாகவும் அமைந்துள்ளன.

அப்பர் இவ்வுலக வாழ்வின் நிலையாமையைப் பலகோணங் களில் காண்கின்றார். பிறவியினால்தான் துன்பங்கள் வருகின்றன; அதனால் வரும் வாழ்க்கை நிலையானதன்று என்பதை உணர்ந்து மற்றவர்களுக்கும் அதனை உணர்த்துகின்றார்.

### பிறவி

"படி மலிந்தபல் பிறவி" (6:81:6)

"பேசப் பொருளல லாப்பிறவி" (6:42:4)

"மாயப் பிறப்பு" (6:62:5)

என்றும்,

"..... நாயேன் பேர்த் தினிப் பிறவா வண்ணம்
அன்பனே யாலவாயி லப்பனே யருள் செயாயே" (4:62:2)

என்றும் கூறி இவ்வுலகிற் பிறந்தமைக்கு வருந்தி மேலும் இனிப் பிறவா வகையிற் காத்தருள வேண்டுமென இறைவனிடம் வேண்டுகின்றார்.

"உடறனைக் கழிக்கலுற்ற வுலகத்து ளுயிர்கட்கெல்லாம்
இடர்தனைக் கழியவேண்டி லிறைவனை யேத்துமின்னோ" (4:42:5)

என்று மற்றவர்களுக்கும் பிறவி நீக்கத்துக்குரிய வழிகாட்டு கின்றார். பிறவியை நீக்கிவிட்டால் நில்லாதவுலகில் நிலையாத வாழ்க்கைப்பட்டுத் துன்புறவேண்டாம் என்பது அப்பரின் துணிபு.

### வாழ்க்கை

வாழ்க்கையை வெறுத்துரைக்கவேண்டும் என்பது அப்பரின் நோக்கமன்று. வாழ்கின்ற சில நாட்களுக்குள் இவ்வாழ்க்கையை நிலைத்ததெனக் கருதி, உலகமே தங்களுடையது என்ற ஆணவத்தில் மக்கள் மதி மயங்கிச் செய்யும் செயல்களைக் கடிகின்ற நோக்கத்தில், 'வாழ்க்கை நிலையுடையதன்று' என அப்பர் எடுத்துக்காட்டுகின்றார்.

"அழிவுடைத்தாய வாழ்க்கை" (4:31:6)

"வசிப் பெனும் வாழ்க்கை வேண்டா" (4:45:2)

"நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலிர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே" (5:90:4)

"மாயமனை வாழ்க்கை மகிழ்ந்து வாழ்வீர்" (6:93:5)

என்று வாழ்க்கையின் நிலையாமையைச் சுட்டியவர், தம்முடைய வாழ்க்கையின் தன்மை பற்றியும் மற்றவர்களுக்கு எடுத்து மொழி கின்றார். 'நமச்சிவாய மந்திரம் சொல்லித் தவநெறியைச் சார்ந்து நின்று ஒப்பற்ற வாழ்க்கையை யான் அமைத்துக் கொண்டாலும் இந்த வாழ்க்கை இமைத்து நிற்கும் அளவிற்குக் கூட நிற்பது அரிது' என்று தெளிவுறுத்துகின்றார். உலகிற்குப் பெருமை கூறிய வள்ளுவர்,

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு" (குறள். 336)

என்று நிலையாமையை அதன் பெருமையாகக் கூறுகிறார் அப்பர். இப்பெருமைக்குரிய நிலையாமையினை எடுத்துக்கூறி, நிலையில்லாத இந்த வாழ்க்கைக்கும் ஒரு பொருள் வேண்டும் என்ற நோக்கில்.

"இன்றுளே னாளையில்லே னென்செய்வான் றோன்றினேனே" (4:78:1)

"இன்று ளார்நாளை யில்லை யெனும் பொருள்
ஒன்றும் ஓரா துழிதரு மூமர்காள்" (5:84:9)

எனக் கூறியிருப்பது சிந்தித்தற்குரியது.

## செல்வம்

செல்வம் ஓரிடத்தில் எப்போதும் நிலைத்திருக்கும் பண்புடைய தன்று, இறையன்பைவிடுத்துச் செல்வத்தையே ஒரு பொருளாகக் கொண்டு வாழும் வாழ்வு மாண்புடைய வாழ்வாகாது என்பதனை அப்பர்,

1. செல்வம் நிறைந்த மாடமாளிகைகளில், இறையுணர்வின்றி மகிழ்ந்திருப்பவர்கள் யாவரும், தாம் இருப்பது கேடு தரும் இடம் என்பதை உணர்ந்து, இறைவனடி சேர்வதற்கு முயல வேண்டும் (5:84:4).
2. செல்வத்தையே பெரிதென்றெண்ணி மகிழ்ந்து உலகத்துப் பொய்யெல்லாம் பேசித் திரியும் வெட்கமிலாதவர்கள், உடலை விட்டு உயிர்போகும் முன் இறைவன்கழலை நினையவேண்டும் (5:84:2) என்ற கருத்துக்களின் வாயிலாகப் புலப்படுத்துகின்றார்.

## இளமை

இளமைக்காலம் ஆற்றலை அளிக்கும் வல்லமை உடையது. அந்த ஆற்றலை அடக்கிக் காக்கவேண்டும். இளமைக் காலத்தின் ஆற்றலை நிலையெனக் கருதிச் செருக்குறுதல் தக்கதன்று என்பதை அப்பர்

"இளமை கைவிட் டகறலு மூப்பினார்
வளமை போய்ப் பிணி யோடுவருதலால்" (5:97:28)

என்ற பாடற்பகுதி வாயிலாக உணர்த்துகின்றார். இளமை கழிந்து முதுமையில் தண்டூன்றி நடப்பதற்கு முன்னர் இறைவனை வணங்கிப்பயன் பெறலாம் எனவும் அறிவுறுத்துகின்றார்.

## யாக்கை

நிலையாமையைக் கூறும்போது யாக்கையை இழித்துரைக்கும் மரபு காணப்படுகின்றது.

பழியுடையாக்கை (4:31:6), பிணமுடையாக்கை (4:45:7), புலால்கமழ் கண்டம் (4:67:8), அழுக்குப்பாயும் பொத்தை (4:69:1), பொத்தல் மண்சுவர் (5:76:5), பிணியுடையாக்கை (5:97:24), மண்ணாயமாயக்குரம்பை (6:12:6) எனப் பல நிலைகளில் அப்பர் மனித யாக்கையை இகழ்ந்துரைக்கின்றார். மேலும்,

1. இது எங்கும் ஓட்டைகளைக் கொண்டு ஒன்பது மாடங்களை உடையது (5:31:7).
2. ஊறலும், உவர்ப்பும் நாறி உதிரமும் ஒழுகும் வாசல் (4:77:7)
3. இரு கால் கொடுத்து, இருபக்கமும் இருகையேற்றி, என்புகளாகிய கழிகளை நிரைத்து, இறைச்சியாகிய கூரை மேய்ந்து, உதிரமாகிய நீர் கொண்டு, தோலினால் சுவர் எடுத்து, பொருத்தம் உடைய இரண்டு வாசலை அமைத்து, ஏழு பலகணிகளை வைத்துக் கட்டப் பட்ட இவ்வீட்டில், ஆவியை வாழவைத்து அதற்கு வேண்டிய செல்வமாக மயக்கம், வேட்கை முதலியவற்றை இறைவன் அளித்துள்ளார் (4:33:4).

என்று விரிவுற யாக்கையின் நிலையாமைக் கூறுகளை அழகுற வருணித்துச் செல்லும் போக்கையும் அப்பரிடம் காணமுடிகின்றது. உடலின் நிலையாமையைப் பல வகையில் இழித்துக் கூறிய சித்தர்களுக்கு அடியெடுத்துக் கொடுத்தது போல அப்பரின் பாடற் பகுதிகள் அமைந்துள்ளன. அழியும் இவ்வுடம்பைக் கொண்டு, இருக்கும் போதே நல்லன செய்ய வேண்டும்; இறைவனை வணங்க வேண்டும், பிறவியை நீக்க வேண்டும் என்பதே யாக்கையை இகழ்ந்து கூறுவதன் பொருளாகக் கொள்ளத்தக்கது.

**சுற்றம்**

இறைவனைத் தாயாகவும் தந்தையாகவும் உறவுமுறை சொல்லிப் போற்றிய அருளாளர்கள், நிலையாமையைக் கூறும் போது சுற்றங்களையெல்லாம் புறக்கணித்துப் பாடியுள்ளமை கருதத் தக்கது. அப்பர் இறைவனை,

"அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமி யும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ" (6:95:1)

என்று உறவுமுறை சொல்லி வாயாரப் போற்றுகின்றார். ஆனால் இவ்வுலகில் எச்சுற்றமும் நிலையில்லை என உணர்ந்து பாடும்போது முற்றிலுமாக அனைத்துச் சுற்றங்களையும் வெறுத்துரைக்கின்றார்.

"சுற்ற முந்துணை நன்மட வாரொடு
பெற்ற மக்களும் பேண லொழிந் தனர்" (5:70:2)

"வைத்த மாடும் மனைவியும் மக்கள்நீர்
செத்த போது செறியார் பிரிவதே" (5:72:1)

"இழவொன்று தாமொருவர்க் கிட்டொன் றீயார்
ஈன்றெடுத்த தாய்தந்தை பெண்டிர் மக்கள்
கழனங்கோ வையாதல் கண்டுந் தேறார்" (6:93:4)

"எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்
செத்தால்வந் துதவுவார் ஒருவரில்லை" (6:62:1)

"தந்தையார் தாயா ருடன்பிறந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தா மாரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ" (6:93:10)

என்றிவ்வாறு சுற்றத்தவரின் சூழல் நிலையற்றது என்பதை அப்பர் உணர்த்துகின்றார்.

இறைவனைச் சுற்றமாகக் கொள்ளும்போது 'அப்பன் நீ', 'அம்மை நீ' என்று பாடியவர் வாழ்க்கையில் மனித சுற்றத்தைக் கூறும்போது, 'எத்தாயர்', 'எத்தந்தை' என்றும், தந்தை யார்? தாயார் யார்? என்றும் பாடுவதைக் காணமுடிகின்றது.

பரம்பொருளைச் சுற்றமாகக் காணும்போது அது நிலைத்த சுற்றமாக அவருக்குத் தெரிகின்றது. மனித சுற்றத்தைக் காணும்போது, 'இன்றுளார் நாளையில்லை' என்ற நிலையாமையுணர்வும், அச்சுற்றத் தினால் எவ்விதப் பயனுமில்லை என்ற வெறுமையுணர்வும் அவருக்கு

ஏற்படுகின்றன. எனவேதான் சுற்றமும் நிலையில்லை என்ற முடிவுக்கு அவர் வர நேரிடுகின்றது.

நிலைத்த வாழ்வாகிய பேரின்ப வாழ்வினை மனிதகுலம் எய்த வேண்டும் என்ற பெருநோக்கங்கொண்டே உலகம் நிலையற்றது; பிறவி கூடாது; பிறவியால் வரும் வாழ்க்கை, செல்வம், இளமை, யாக்கை, சுற்றம் ஆகியன நிலையற்றன என்று நிலையாமைத் தன்மையை அப்பர் எடுத்துரைக்கின்றார் எனக் கருதலாம்.

அப்பருடைய வாழ்க்கை இளமையிலேயே நிலையாமை உணர்த்தப்பட்ட வாழ்க்கை என்பதால் அவர் பாடல்களில் அவ் வாழ்க்கையின் எதிரொலிகளை நன்கு காணலாம். நிலையாமையைப் பெரிதும் பேசிய சமணத்தில் அப்பர் இருந்தமையால், அவர் வாழ்க்கை பற்றிய நோக்கு அவர் மதம் மாறிய பின்பும் சமண சமயத்ததாகவே தெரிகின்றது என்றும், சமண சமயத்தின் வாழ்க்கை நோக்கும் சைவத்தின் பக்திநெறியும் பிணையும் அழகு அவர் பாடல்களில் தெரிகின்றது என்றும் ஆ. வேலுப்பிள்ளை கருதுவர்.[4] அப்பரின் இளமைக்கால வாழ்க்கை அனுபவமும், அவர்தம் சமணச் சூழலும் அவர் மனத்தில் நிலையாமை உணர்வுகள் நிலையாகப் பதிவதற்குக் காரணமாக அமைந்தன.

### 6. அறிவுறுத்தல்

வாழ்வாங்கு வாழ்ந்த பெருந்தகையாளர் அப்பர். அவர் தம்முடைய வாழ்க்கையில் பெற்ற அனுபவங்கள் மிகப்பல. அவ்வகையில் உலக மக்களுக்கு அவர் பல செய்திகளை அறிவுறுத்துகின்றார். இறை யுணர்வோடு கூடிய வாழ்வியலை அவர் தம்முடைய அறிவுரை களில் வலியுறுத்துவதைக் காணமுடிகின்றது.

"இருந்து சொல்லுவன் கேண்மின்கள்" (5:60:4), "சாற்றிச் சொல்லுவன் கேண்மின்கள்" (5:60:3), 'துக்கம் தீர்வகை சொல்லுவன் கேண்மின்' (5:43:2) என்று உலகினரை நோக்கி அறிவுரை பகர்கின்றார். உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் அவருடைய அறிவுரைகள் அமைந்துள்ளன.

1. பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப்புகழ் புரியவேண்டும் (4:4:41).
2. மறத்தை விலக்கி அறத்தைப் பேணுதல் வேண்டும் (4:4:44).
3. ஆர்வம், செற்றம், குரோதம் ஆகியவற்றை நீக்கி வாழ்ந்தால் இறைவன் சீலமும் நோன்புமாக இருந்து அருள் செய்வான் (4:26:1).

4. நித்தலும் தூய்மையான நிலையில் நீதியுடன் வாழ வேண்டும் (4:29:6).

5. பொலிவில்லாத அழுக்கு நிறைந்த இவ்வுடலைப் பேணிப் பொய்யினை மெய்யென்றெண்ணி நெறியல்லா நெறிகளில் செல்லுதல் கூடாது (4:25:3).

6. வாய்மையினால் தூய்மையைக் காக்க வேண்டும் (4:57:7).

7. குறிக்கோள் இல்லாத வாழ்க்கை கெட்டுப்போகும் (4:67:9).

8. பிறரைப் புறம் பேசுவதற்குக் கூச்சப்படவேண்டும் (4:78:6).

9. ஒன்றியிருந்து நினைமின்கள்; உங்களுக்கு ஊனம் என்பதொன் றில்லை (4:81:1).

10. அஞ்சியாகிலும் அன்பு கொண்டாகிலும் நெஞ்சத்தில் இறைவனை நினைக்க வேண்டும்.

11. விரதம் மேற்கொண்டும், தவம் பல முயன்றும் வாழாத நெஞ்சே! இவ்வுடலின் தன்மை உனக்கு உரித்தன்று: இறைவனை நினைக்குமாறு நினைத்தால் வாழலாம் (6:42:1).

12. இறைவனை அன்போடு நினைபவர் நாசமான குலநலம், சுற்றங்கள் பாசம் அனைத்தும் நீங்கி உயர்ந்த பரமானந்தத்தைப் பெறுவர் (5:31:9).

13. பசித்து வந்தவர் யாவர்க்கும் இல்லையென்னாமல், நெஞ்சம் வருந்தாமல் யாவர்க்கும் பிச்சையிட்டு, நல்ல நெறியில் நின்று, நல்லறிவும், மெய்யன்பும் கொண்டு, பொய்யை நீக்கி வாழ்தல் வேண்டும் (6:61:4).

14. நன்மக்களோடு கூடாதவர் வாழ்க்கை சிறப்புடையதன்று (6:25:4).

15. மனத்தில் இரக்கமின்றிக் கொடியவராய் வாழ்ந்து இறப்பதில் என்ன பயன் (5:98:6).

அப்பர் கூறிய இவ்வறிவுரைகளில் இருந்து வாய்மை, அறம், பற்றுநீக்கம், குறிக்கோள் வாழ்வு, இறைப்பற்று, நல்லவரிணக்கம் முதலிய நற்பண்புகளை மக்கள் பெற்று வாழ்ந்து சிறக்க வேண்டும் என்ற உண்மை புலனாகின்றது.

அப்பரின் அறிவுரைகளை, 1. மனிதனுக்கு வேண்டி உரைத்தது, 2. மனிதனை வெறுத்து உரைத்தது, 3. மனிதனை அச்சுறுத்தி உரைத்தது 4. மனிதனைக் கடிந்து உரைத்தது என நான்கு வகைப் படுத்திக் கூறுவர் வெ.தெ. மாணிக்கம்.[5]

**வேண்டி உரைத்தது**

"அள்ளலைக் கடக்க வேண்டில் அரனையே நினைமின்" (4:42:6)

"இடர்தனைக் கடக்க வேண்டில் இறைவனை ஏத்துமின்" (4:42:5)

"கனிதந் தால்கனி யுண்ணவும் வல்லிரே" (5:91:5)

**வெறுத்து உரைத்தது**

".......... பொருளே தேடிக்
கையாருக் கரணமுடையோ மென்று
களித்த மனத்தராய்க் கருதி வாழ்வீர்" (6:93:3)

"படுவன பலவுங் குற்றம் பாங்கிலா மனிதர் வாழ்க்கை
கெடுவதிப் பிறவி சீசீ" (4:76:10)

**அச்சுறுத்தி உரைத்தது**

"பின்னுவார் சடையான்தன்னைப் பிதற்றிலாப் பேதைமார்கள்
துன்னுவார் நரகர் தன்னுள்" (4:45:8)

"தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே" (5:21:8)

"நடலை வாழ்வு கொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே" (5:90:4)

**கடிந்து உரைத்தது**

"சாத்திரம்பல பேசும் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்" (5:60:3)

"செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ" (5:100:2)

இவ்வாறு மக்கள் மனங்களின் நாடியறிந்து அவரவர்க்கேற்ற வகையில் அறிவுறுத்தும் திறத்தினை அப்பரிடத்துக் காணமுடிகின்றது.

## இ. சமணர் வாழ்க்கை முறை

சைவ சமய வாழ்வு நெறிகளேயன்றிச் சமணர்களைப் பற்றிய பல கருத்துக்களும் அப்பர் பாடல்களில் வெளிப்பட்டுள்ளன. சமண சமய வரலாற்றுடனும் அச்சமயத்திற்குரிய ஒழுக்கங்களுடனும், நெறி முறைகளுடனும் அக்கருத்துக்கள் ஒப்பிட்டுக் காண்பதற்குரியன.

சமணம் என்ற சொல்லிற்குச் (ச்ரமண) சிரமத்தைத் தாங்குதல்; எல்லா உயிர்களையும் சமமாகப் பாவித்தல்; துறவு எனப் பல பொருள்கள் உள்ளன.

சமண சமயத்திற்கு ஜைன மதம், ஆருகத மகம், நிகண்ட மதம், அநேகாந்தவாத மதம் என்னும் வேறு பெயர்களும் உள்ளன.

சமணர் (ஸ்ரமணர்) என்றால் துறவிகள் என்பது பொருள். ஜினரைக் கடவுளாக உடைமையால் 'ஜைனர்' என்றும், அருகனை வணங்குவதால் 'ஆருகதர்' என்றும், பற்றற்றவர் (நிர்க்கந்தர்) என்பதால் நிகண்டர் என்றும், அசோக மரத்தைப் (பிண்டி) போற்றுவதால் பிண்டியர் என்றும் சமணர்கள் அழைக்கப்பெற்றனர்.

சமண சமயத்தில் இல்லற ஒழுக்கம் 'சாவக' தர்மம் என்றும், துறவற ஒழுக்கம் 'யதி' தர்மம் என்றும் கூறப்பெறும். துறவற நெறியினருக்கு மாவிரதங்கள் ஐந்து, சமிதி ஐந்து, ஐம்பொறி அடக்கம் ஐந்து, ஆவஸ்யகம் ஆறு, லோசம் முதலிய ஒழுக்கங்கள் ஏழு என இருபத்தெட்டு ஒழுக்கங்கள் உரியன. இல்லறத்தாருக்குப் பதினேழு வகை விரதங்கள் உரியன. இல்லறத்தார், சமணத்துறவிகளைப் போற்றி ஒழுகுதலைப் புண்ணியமாகக் கருதுவர்.[6]

சமண சமயம், சுவேதம்பரம், திகம்பரம், ஸ்தானகவாசி என்ற மூன்று பிரிவுகளைக் கொண்டது. சுவேதம்பர சமணத் துறவிகள் வெண்ணிற ஆடை அணிவர். சுவேதம்பரம் எனில் வெண்ணிற ஆடை என்று பொருள். திகம்பரர் ஆடை அணியாதவர்கள். திக்கையே ஆடையாக உடுத்தவர்கள் என்று பொருள். சுவேதம்பரரும், திகம்பரரும் உருவ வழிபாட்டினை உடையவர். ஸ்தானகவாசிப் பிரிவினர் உருவ வழிபாட்டினை ஏற்றுக்கொள்வதில்லை. அவர்கள் சமண ஆகம நூல்களையே அருகக் கடவுளாக நினைத்து வழிபடும் இயல்பினர்.[7]

தமிழ்நாட்டில் பழங்காலந்தொட்டுத் திகம்பர சமணத்தைச் சேர்ந்தவர்களே பெருமளவில் இருந்தனர். அப்பர் காலத்திலும் இத்திகம்பரச் சமணர்களே வாழ்ந்து வந்தனர். சமண முனிவர் களின் கூட்டம் நந்திகணம், சேனகணம், சிம்மகணம், தேவகணம் என நான்கு பிரிவுகளைக் கொண்டிருந்தது.8 அப்பர் சமண சமயத்தில் இருந்தபோது இந்தச் சேனகணத்தைச் சார்ந்திருந்தார் என்பதைத் 'தருமசேனர்' என்னும் பெயர் கொண்டு அறிய முடிகின்றது.

அப்பர் சமண சமயத்தில் இருந்த கால அளவினை வரை யறுத்துக் கூறுவதற்குரிய சான்றுகள் இல்லை. ஆயினும் அவர்

தம்முடைய வாழ்நாளில் பெரும்பகுதியைச் சமண சமயத்தில் கழித்திருக்கின்றார் என்பதைப்

"பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம்

சொல்லிய செலவு செய்தேன் சோர்வனா வினைந்தபோது (4:39:7)

"போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே" (6:54:10)

எனவரும் அவருடைய உரைகள் புலப்படுத்துகின்றன. புறச் சமயத்தைச் சார்ந்து அப்பர் தம்முடைய வாழ்க்கையைக் கழித்த போது, சமணர் களின் நெறி பிறழ்ந்த தன்மைகளை அவரால் சகித்துக்கொள்ள முடியவில்லை. அவற்றையெல்லாம் அவர் தம்முடைய பாடல்களில் பரவலாக வெளிப்படுத்தியுள்ளார். சமணர்களின் சில வாழ்வியல் முறைகளும் அவர் பாடல்களில் வெளிப்பட்டுள்ளன. அவையாவும் ஈண்டு அறியத்தக்கன.

## ஏழுவகை ஒழுக்கம்

"பிறப்பறுக்கலுற்றார்க்கு உடம்பும் மிகை"

என்பதனால் சமணத் துறவிகள் தங்கள் உடலை ஒருபொருட்டாகக் கருதுவதில்லை. தங்கள் உடலின்மேல் பற்றின்மையைக் குறிக்கும் வகையில் 1. லோசம் 2. திகம்பரம் 3. நீராடாமை 4. தரையிற் படுத்தல் 5. பல்தேய்க்காமை 6. நின்றுண்ணல் 7. ஏக புக்தம் என ஏழுவகை ஒழுக்கங்களை மேற்கொள்வர்[9]. அப்பர் தம்முடைய பதிகங்களில் சமண முனிவர்கள் மேற்கொண்டொழுகிய இவ்வொழுக்கங் களில் பெரும்பாலானவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

### 1. லோசம்

'லோசம்' என்பது மயிர்களைதல் எனப் பொருள்படும். சமணத் துறவிகள் தலைமயிரைக் கத்தியால் மழிக்காமல் கையினால் பிடுங்கிக் களைவர். அப்போது உடம்பில் உண்டாகும் வலியையும் அவர்கள் உறுதியுடன் பொறுத்துக்கொள்வர். சமணரின் இச்செயல்களை

"கண்ணழலத் தலை பறித்து" (4:5:7)

"தலைபறிக்கச் சுகமென்னுங்குண்டர்" (4:10 1:8)

"தலையெலாம் பறிக்கும் சமண்கையர்" (5:58:1)

"தலைமுண்டிக்கும் மொட்டர்" (5:58:4)

"தலைமயிர் பறிக்கும் சமணர்" (6:84:7)

எனவரும் அப்பர் தேவாரச் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. சமணப் பெண் துறவிகட்கும் இவ்விதிமுறைகள் உள்ளன. அவர்களும்

தங்கள் தலை மயிரினைக் கையினால் பிடுங்கிக் கொள்ளவேண்டும். அத்துடனின்றி அப்பெண் துறவிகள் ஆடவர்களாகிய சமணத் துறவிகட்குப் பணிவிடைகள் செய்வதை உயர்வாக நினைப்பர். அவர்கள் ஒவ்வொருவராய் வந்து ஆண் துறவிகளைத் தம்தெய்வம் என்றெண்ணிக் கையினால் தீண்டி அவர்கள் தலைமயிரைப் பறிப்பர். இச்செயலையே தங்கட்குரிய 'தவம்' என்னும் நினைத்துக்கொள்வர் (6:3:11).

## 2. திகம்பரம்

'திகம்பரம்' என்பது நிர்வாணமாக இருத்தல். இவ்வகைத் துறவிகள் திகம்பரர் எனப்படுவர். திக்கையே ஆடையாகக் கொண்டவர்கள். ஞாயிற்றின் வெம்மையையும் குளிரின் தண்மையையும் தாங்கிக் கொள்ளும் பக்குவத்தினை அவர்கள் உடல் பெறவேண்டும் என்பது இத்திகம்பரத்தின் நோக்கம்.[10] இவ்வொழுக்கத்தினை மேற்கொண்டு ஒழுகிய சமணத்துறவிகளை,

"வெற்றரைச் சமணர்" (4:68:9)

"கூறையில் மிண்டர்" (5:58:3)

"உரிந்த உடையார்" (6:85:8)

"அமணே நின்றார்" (6:3:7)

என்று அப்பர் குறிப்பிடுவர். மேலும் அமண் கோலத்தினராக நின்ற சமணர்கள் நீதி நெறிகளைக் கொன்றவர்கள் என்றும் கடிந்துரைக் கின்றார். பெண் துறவிகளுக்குத் திகம்பரம் உரியதன்று. அவர்கள் உடையினால் தங்கள் உடலை மறைத்துக் கொள்வர்.

## 3. நீராடாமை

புறத்தூய்மையைவிட அகத்தூய்மையே வேண்டும் என்ற கொள்கையைக் கொண்டவர்கள் சமணர்கள். உடம்பில் தோன்றும் அழுக்கு, வியர்வை முதலியவற்றில் உள்ள நுண்ணுயிர்கள் இறந்து படும் என்ற அச்சத்தினால், நீராடாமையை ஓர் ஒழுக்கமாகவே கடைப் பிடித்தனர். இந்திரிய ஜயார்த்தமாக அஸ்நான (நீராடாமை) விரதங் கொண்டதல்லது யாங்கள் சரீரத்து மலமாக்க வேண்டுமென்று சொல்லியதூஉம் செய்ததூஉம் இல்லை" என்ற சமணத் துறவிகளின் நீராடா ஒழுக்கம் பற்றி நீலகேசி உரை தெரிவிக்கும் கருத்தும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

நீராடாமையால், மேனியெங்கும் மாசுபடிந்து காணும் சமணர்களை,

"மாசு மெய்யர்" (4:39:4)

"மாசினை ஏறிய மேனியர்" (4:101:4)

"மெய்யின் மாசுடையார்" (5:84:7)

"இருள் மெய்யர்" (6:40:3)

என்றும், நீராடாத சமணரின் மேனி முடைநாற்றம் வீசி நிற்பதால் அவர்களை "முடையர்" என்றும் அப்பர் குறிப்பிடுகின்றார். சமணப் பெண் துறவிகளும் நீராடா ஒழுக்கம் மேற்கொண்டனர் என்பதை

"முலைமறைக்கப்பட்டு நீராடாப் பெண்கள்" (6:3:11)

என்ற பாடற்பகுதி உணர்த்துகின்றது.

### 4. பல் தேய்க்காமை

சமணத்துறவிகள் தங்கள் பற்களைச் சுத்தம் செய்வதுகூட உடற்பற்றினைக் குறிப்பதாக அமையும் என்றெண்ணிப் பல் துலக்காமல் இருப்பார்கள். அதனால் அவர்களைப்,

"பாசிப்பல் சமணர்" (4:39:4)

"ஊத்தைவாய்ச் சமணர்" (6:3:8) (6:40:340)

என்று அப்பர் குறிப்பிடுவர்.

### 5. நின்றுண்ணல்

இருக்கையில் வசதியாக அமர்ந்து, இலையிலோ, கலத்திலோ உண்ணும் வழக்கினைச் சமணத் துறவிகள் கடிந்தனர். உணவைக் கையில் வாங்கி அமண கோலத்துடன் நின்றவாறு உண்ணுதலே அவர்களுக்குரிய ஒழுக்கம். அத்தகு ஒழுக்கத்தினைக் கொண்டொழுகிய சமணத்துறவிகளை அப்பர் பின்வருமாறு குறிப்பிடுவர்.

"கையிலிடு சோறு நின்றுண்ணும் காதல் அமணர்" (4:101:9)

"எள்ளரிக்கணார் முன்னமண நின்றுணும் கள்ளர்" (5:58:5)

"நீதியைக்கெட நின்றமணே உணும் சாதி" (5:58:6)

"ஏழைமாரிடம் நின்றிருகைக் கொண்டு உண்கோழைமார்" (5:64:8)

"நின்றுண்ணும் கையர்" (6:11:9)

"கையில் உண டுழல்வார்" (6:86:10)

சமணர்கள் இவ்வாறு நின்றுண்ணல் இடப்பற்று உண்டாகாமைப் பொருட்டென்றும், கையிலுண்ணல் பொருட்பற்று உண்டாகாமைப் பொருட்டென்றும் அறிஞர் கூறுவர்.

எழுவகை ஒழுக்கங்களில் 'தரையிற் படுத்தல்' 'ஏகபுக்தம்' ஆகிய இரண்டனுக்கும் அப்பர் பாடல்களில் சான்றுகள் காணப்பெற

வில்லை. சமண முனிவர்கள் தரையில் படுத்து உறங்குவர். கல் முதலியன உறுத்துதலைப் பொறுத்துக் கொள்ளவேண்டும் என்பதை இவ்வொழுக்கம் உணர்த்தும். ஏகபுக்தம் என்பது ஒரு நாளைக்கு ஒரு வேளையே உண்ணுவதாகும்.

## ஐவகைச் சமிதிகள்

சமணத்துறவிகள் 1. இரியை 2. பாஷை 3. ஏஷணை 4. ஆதனா நிஷேபணை 5. உத்சர்க்கம் என ஐவகைச் சமிதிகளைப் போற்றி ஒழுகும் பண்பினர்.[12] இவற்றுள் சில சமிதிகளுக்குரிய நடைமுறைகள் அப்பர் தேவாரத்தில் வெளிப்பட்டுள்ளன.

### 1. இரியா சமிதி

சமணத் துறவிகள் நடக்கும்போது தரையை மூன்று முடி தூரம் பார்த்துச் சிற்றுயிர்கள் எவையேனும் இருப்பின் அவற்றை மிதிக்காமல் நடத்தல் வேண்டும். வழியில் உள்ள சிற்றுயிர்களைக் காலில் மிதிபடாதபடி விலக்குவதற்காகத் துறவிகள் தங்கள் கையில் மயிற்பீலிக்குஞ்சத்தை வைத்திருப்பர். இதனை 'இரியா சமிதி' என்பர்[13]. இவ்வாறு மயிற்பீலியைச் சமணர்கள் இடுக்கித் திரியும் செயலினை அப்பர்

"பீலிகை யிடுக்கி நாளும் பெரியதோர் தவமென்றெண்ணி
வாலிய தறிகள் போல மதியிலார் பட்டதென்னே" (4:39:2)

"......... பீலிகள் கொள்ளுங் குணமிலா
மிண்டர்" (5:44:9)

என்று பழித்துக் கூறுகின்றார்.

அப்பர் காலத்து இருந்த சமணத் துறவிகள் தங்கள் சமயக் கொள்கைக்கு மாறாக ஒழுகினர் எனத் தெரிகின்றது. அத்தகைய சமணத் துறவிகளை அப்பர் இனங்கண்டு காட்டுகின்றார்.

### 2. பாஷா சமிதி

சமணத் துறவியர் உண்மை பேசி, நாவடக்கம் உள்ளவராகத் திகழ வேண்டும். பிறரைப் பழித்துப் பேசுதல், சினந்து பேசுதல், புறங்கூறுதல், கடுஞ்சொல் கூறல் இவற்றை நீக்கிய கொள்கையராய் வாழ்தல் வேண்டும். இனியவை பேசித் தரும ஒழுக்கம், சமயக் கொள்கை இவற்றை மற்றவருக்கு அறிவுறுத்த வேண்டும். துறவிகள் இவ்விதம் ஒழுகும் சமண சமய ஒழுக்கத்திற்குப் பாஷா சமிதி என்று பெயர்.[14] பாஷா சமிதியை மீறி வாழ்ந்த துறவிகளைப் பற்றி அப்பர் குறிப்பிடுகின்றார்.

உண்மையைப் பேசும் ஒழுக்கத்தினை மேற்கொள்ள வேண்டிய வர்கள் பொய்பேசித் திரிந்தனர் என்பதை அப்பர்,

"எல்லாப் பொய்களையும் கூறும் சிறுமை உடைய சமணர்" (5:80:9)

என்றும்,

"சமணர் சொன்ன பொய்யெல்லாம் மெய்யென்று கருதி
அச்சமயத்திற் புகுந்தேன்" (6:11:9)

என்றும்,

"உண்மையை உள்ளவாறு நோக்கி ஓர்த்துணராக் குண்டர்களின்
வார்த்தையை மெய்யென்று எண்ணி அவர்கள்மயக்கில் வீழ்ந்தேன்"
(4:73:2)

என்றும் தெறிவுறுத்துகின்றார்.

### 3. ஏஷணாசமிதி

சமணத் துறவிகள் குற்றமற்ற, எளிய உணவினை இரந்து பெற்று, மிகுதியாக உண்ணாமல் அளவாக உண்ணுதல் ஏஷணா சமிதி எனப்படும்.[15]

அப்பர் காலத்து வாழ்ந்த சமணத் துறவிகளில் சிலர் இவ்வொழுக்க முறைக்கு மாறாக உணவைக் கொண்டனர் எனத் தெரிகின்றது.

"திரட்டி ரைக்க வளந்தணிக் குஞ்சமன் பிரட்டர்" (5:58:7)

"கறிவிரவு நெய்சோறு கையில்உண்டு (6:3:8)

"கையெல்லாம் நெய்பாயக் கழுத்தேகிட்டக்
கால் நிமிர்த்து நின்றுண்ணுங் கையர்" (6:11:9)

என்று நெய்யுங்களியும் விரவிய சோற்றை மிகுதியாக உண்டு வாழ்ந்த சமணத் துறவிகளைப் பற்றி அப்பர் சுட்டியுள்ளார்.

துறவிகளுக்குரிய மயிற்பீலி, கமண்டலம் முதலியவற்றை விழிப் புடன் மெல்ல எடுத்தலும் வைத்தலும் 'ஆதான நிஷேபணை' எனப்படும். சமணத் துறவிகள் காலைக் கடன் கழிக்க ஆள் நடமாட்டம் இல்லாத ஊரின் ஒதுக்குப் புறத்துக்குச் செல்லுதல் 'உத்சர்க்க சமிதி' எனப்படும்.[16] இவ்விருவகைச் சமிதைகளைப் பற்றிய குறிப்பு அப்பர் தேவாரத்தில் இடம்பெறவில்லை.

### பிறநடைமுறைச் செயல்கள்

சமணத் துறவியரின் நடைமுறைச் செயல்களாக அப்பர் பாடல்களிலிருந்து மேலும் தெரியலாகும் செய்திகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்.

1. கடுக்காய்ப் பொடியை உடல் முழுதும் பூசிக்கொள்ளுதல் (4:39:5)
2. கடுக்காய் (துவரக்காய்) உண்ணுதல் (5:62:9)
3. உடல் இளைத்துப்போகுமளவிற்கு விரதங்களை மேற்கொள்ளுதல் (4:39:4)
4. கஞ்சியை உடைய கரகத்தை உறியில் வைத்துத் தூக்கித் திரிதல் (6:3:8)
5. மூக்கினால் ஒலிக்குமாறு மந்திரங்களைக் கூறுதல் (5:58:2)
6. அசோக மரத்தை உயர்வாகப் போற்றுதல் (6:40:6)
7. பனை ஒலைத்தடுக்கு வைத்திருத்தல் (4:39:3)
8. அருந்தும்போது ஊமைகளைப்போல் உரையாடாதிருத்தல் (4:101:5)
9. இரவில் உண்ணாதிருத்தல் (4:103:6)
10. உறையுள் என ஒன்றின்றி வீட்டைத் துறந்து வாழ்தல் (4:101:2)

'அகிம்சாபரமோதர்ம' என்பது சமண சமயத்தின் அடிப்படைக் கொள்கை. பல்லவ அரசனிடத்தில் பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்த சமணர்கள் அப்பருக்குச் செய்த கொடுமைகள் யாவும் அகிம்சை நெறியை மீறியனவாகவே இருந்தன என்பதும் இவண் குறிப்பிடத் தக்கது.

## சமணரின் பிறகுறைகள்

சமணச் சூழலில் அப்பர் இருந்தபோது அவருக்கு ஏற்பட்ட அனுபவங்கள், அவரைச் சுற்றி இருந்த சமண முனிவர்களின் வாழ்க்கை முறைகள் ஆகியவற்றின் அடிப்படையிலேயே சமணர்களைப் பற்றிய பல செய்திகள் அவர்தம் பாடல்களில் வெளிப்பட்டுள்ளன.

அப்பர் தாம் சமணத்தில் இருந்த சூழலை எண்ணிப்பார்க்கும் போதெல்லாம் அவருடைய எண்ண உணர்வுகள் மேலோங்கிச் சமணர்களைக் கடிந்துரைக்கின்றார். பழையாறை, வடதளி, ஐயாறு, ஆரூர் ஆகிய மூன்று தலங்களுக்குரிய பதிகங்களில் சமணரைக் கடிந்துரைக்கும் பாடல்கள் மிகுதியாக அமைந்துள்ளன. காலம் செல்லச் செல்ல சமணர்களைப் பற்றியும் சமணச் சூழலில் தாம் இருந்தமை பற்றியும் அப்பர் தம்முடைய பதிகங்களில் நினைவு கொள்ளவில்லை. குறிப்பாகத் திருப்புகலூர்ப் பதிகங்களில் சமணசமயச் செய்திகள் முற்றிலும் இடம்பெறவில்லை என்பது எண்ணத்தக்கது.

இத்தகைய பின்னணியில், சமண சமயத்தவரின் வாழ்வில் அப்பர் கண்ட குறைபாடுகள் ஈண்டு தொகுத்து நோக்குதற்குரியன.

1. எதையும் ஆராயாது கண்ணாற் கண்டதையே கருதும் தன்மையர் (4:42:9).
2. பழியையே தங்கள் வழியெனக் கொள்ளும் பாவிகள் (4:103:4).
3. உடல் பெருத்துக் குறிக்கோளில்லாமல் வாழ்கின்றவர்கள் (5:43:6).
4. இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் இழந்தவர்கள் (6:3:5).
5. தமக்குத் தெய்வம் இல்லாமையை மறைத்துப் பொய்கூறும் பண்பினர் (6:84:9).
6. அறத்தின் இயல்பை உணராதவர்; அறிவில்லாத சிந்தை உடையவர்; வாதம் செய்யும் இயல்பினர் (6:91:8).
7. அவச் செயலைத் தவச் செயலாகக் கருதித் தக்கதை நினையாதவர் (6:3:11).
8. மெய்ந்நூல்களைக் கல்லாதவர் (6:86:9).
9. அநேகாந்தவாதம் செய்யும் இயல்பினர் (4:39:7).

இங்ஙனம் அப்பர் தம் பாடல்களில் ஆங்காங்கே கூறிச் செல்லும் செய்திகளின் வாயிலாகச் சமணர்களது வாழ்க்கை முறை, நடை முறைச் செயல்கள் அவற்றில் காணப்பட்ட குறைகள் முதலியவை பற்றி அறிந்து கொள்ள முடிகின்றது.

### ஈ. சமுதாய வாழ்வு

மனித வாழ்வின் செம்மையைப் பொறுத்தே சமுதாய வாழ்வு செம்மையுறும். சமய நெறியில் தம்மை ஈடுபடுத்திக்கொண்டு, முழுதும் இறைவழிபாட்டிலேயே வாழ்நாளைக் கழிக்கும் அருளாளர்களும் சமுதாயத்தைப் புறக்கணித்துவிட்டு வாழ்தல் அரிது. சமுதாயநோக்கு அவர்கள் சிந்தனையில் சுடர்விட்டுத் திகழும். அப்பர் சமுதாயத் தோடு ஒருங்கிணைந்து வாழ்ந்த அருளாளர். எனவே அவர் பாடல் களில் சமுதாய வாழ்வுக் கூறுகள் இடம் பெற்றிருத்தல் இயல்பு. தொண்டு நெறி பற்றியும் அத்தொண்டிற்கு இன்றியமையாது வேண்டப் படும் அஞ்சாமை பற்றியும், சமுதாயத்தில் இடம்பெறும் கலைகளும் விழாக்களும் பற்றியும் இப்பகுதியில் விளக்கப் பெற்றுள்ளன.

### 1. உழைப்பும் தொண்டும்

'உழைப்பே உயர்வு தரும்' என்பது வாழ்வியல் உண்மை. தனி மனித முன்னேற்றத்திற்கும், சமுதாய முன்னேற்றத்திற்கும்

ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கும் உழைப்பு ஒன்றுதான் அடிப்படை. மனித ஆற்றல் மேம்படுவதற்கு உழைப்பு உறுதுணையாகும்.

உடல் தொண்டின் இன்றியமையாமையைப் பலரும் வற்புறுத்தி யுள்ளனர். சமய குரவர்களுள் அப்பர் மேற்கொண்டொழுகிய உடல் தொண்டு குறிப்பிடத்தக்கது. அயரா உழைப்பு என்பதற்கு அவர் உருவமாய்த் திகழ்ந்தார்.

"வினையே ஆடவர்க்கு உயிரே" (குறு:135)

என்பது பழந்தமிழ் இலக்கியம் கூறும் வாழ்வுநெறி. ஆடவர்களுக்கு உழைப்பு ஒன்றையே இலக்கணமாகக் கருதி அதனை வற்புறுத்தினர். உயிரின்றி இருத்தல் எப்படி இயலாதோ அவ்வாறு உழைப்பின்றி இருத்தலும் இயலாது. அப்பர் வயது முதிர்ந்து நிலை தடுமாறும் வரையிலும் கைத்திருத்தொண்டு செய்து இறைவன் திருவடி நீழலை அடைந்தமை இவண் குறிப்பிடத்தக்கது.

சுப. அண்ணாமலை அவர்கள் உழைப்பிற்கும் தொண்டிற்கும் உள்ள வேறுபாட்டினை விளக்கியுள்ளமை இவண் குறிப்பிடத்தக்கது.

"உழைப்பு தனக்கும் குடும்பத்திற்கும் செல்வம், உணவு, உடை, உறையுள் ஆகியனவற்றைச் சேர்க்க மேற்கொள்ளப் பெறும்பொழுது 'வினை' என்றும், 'தொழில்' என்றும், பொதுநலங் கருதிச் செய்யப் பெறும்பொழுது 'தொண்டு' என்றும் அழைக்கப்படும். பொதுநலங் கருதும் பொழுதும் தான் செய்வதாகக் கருதும் தன்முனைப்பு இன்றி, இறைவனின் கருவியாக இருந்து அவனது திருவருள் காட்டிய நெறியில் செல் கின்றோம் என்னும் உணர்வுடன் நெஞ்சம் அவன்மீது அன்பால் உறைத்து நிற்க அவ்வன்பு வெளிப்படத்தக்க பணிகளைச் செய்வது திருத்தொண்டு ஆகும். பிற தொண்டர்க்குப் புகழ்மீது பற்று இருக்க இடம் உண்டு. ஆனால் திருத் தொண்டர்க்கு அதன்மீதும் ஆசை இல்லை"[17]

இக்கருத்தினை அப்பரின் வாழ்வோடு அப்படியே பொருத்திக் காண்பது அவர்தம் திருத்தொண்டு நெறிக்கு விளக்கம் காண்பதாக அமையும். அப்பர் ஆற்றிய திருத்தொண்டின் ஆற்றலைப் பற்றி வை. இரத்தினசபாபதி குறிப்பிடுவது ஈண்டு அறிதற்குரியது.

"திருத்தொண்டு அத்தொண்டினைச் செய்தவனைத் தூய்மையாக்கு வதோடன்றி, அவனைச் சார்ந்த தீயவர்களின் தீமையை மாற்றி, அவர்களை நன்மை செய்பவர்களாக மாற்றும் ஆற்றல் வாய்ந்தது என்பதை அப்பரடிகள் தம்முடைய வாழ்வில் அமைத்துக் காட்டி யிருக்கின்றார். இக்கருத்தைப் பிற்காலத்தே தோன்றிய கார்ல்மார்க்ஸ் என்பார் 'உழைப்பு' என்ற தத்துவத்தை விளக்கும் கொள்கைகளோடு இணைத்துக் காணுதல் வேண்டும்"[18]

அப்பரடிகளின் திருத்தொண்டிற்கு இவ்விளக்கம் சாலப்பொருந்துவதாக அமைந்துள்ளது.

## 2. தொண்டு நெறி

'தொண்டு' என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்பவர் அப்பரடிகள்,

"திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர்" (பெ.பு. திருநாவு. 1)

என்பது சேக்கிழார் வாக்கு. தொண்டு என்பது 1. மக்கள் தொண்டு 2. இறைத்தொண்டு என இருவகைப்படும். மக்களுக்குச் செய்யும் தொண்டே இறைவனுக்குச் செய்யும் தொண்டாகவும் கருதப்படு கின்றது. அத்தகைய மக்கள் தொண்டை இறைவனின் தூண்டுதல் சக்தியால் உந்தப்பெற்றுச் செய்த தொண்டாக ஒருவர் எண்ண வேண்டுமேயன்றித் தம்முடைய முயற்சியால் தாமே செய்த தொண்டாக எண்ணுதல் கூடாது. இத்தகைய தொண்டே திருத்தொண்டு எனப்படும்.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன் நெடுங்காலமே" (5:90:7)

என்னும் இப்பாடலில் அப்பர் இறைவனுக்குச் செய்யும் தொண்டினை வலியுறுத்துகின்றார்.

அப்பர் 'தொண்டு' ஒன்றையே தம் வாழ்வுத் துணையாகக் கொண்டு வாழ்ந்தவராதலால்,

"தானலா துலகமில்லை சகமலா தடிமையில்லை" (4:40:1)

என்ற பாடலடியில் சிவபெருமானே உலகம் என்றும், அவ்வுலகம் இல்லாமல் அடிமையாகிய தாம் இல்லை என்றும் விளக்குகின்றார். அடிமைப்படக் கூடிய உள்ளம் இருக்கும்போதுதான் தொண்டுநெறி சிறக்கும்.

"தொண்டலாற் றுணையுமில்லை தோலலாதுடையு மில்லை" (4:40:4)

என்ற பாடலடியில், அப்பர் தொண்டு நெறியைப் போற்றிய திறம் புலப்படுகின்றது.

அப்பரது பற்றற்ற தொண்டுள்ளமும், அத்தொண்டே அவரது வாழ்க்கை நெறியாதலும், அத்தொண்டு நெறிக்கு இறைப்பற்றே ஊன்றுகோலாக அமைதலும் அவரது பாடல்களில் பலஇடங்களில் வெளிப்படுகின்றன.

"தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே" (5:19:9)

என்று அமையும் புகழ்பெற்ற அடிகள் இத்தொண்டுள்ளத்தின் சீர்சால் வெளிப்பாடாக அமைகின்றன.

அப்பர் தொண்டர்களைப் போற்றி ஒரு தொண்டராகவே வாழ்ந்தவர். அவருடைய வாழ்வில் தாம் ஒரு தொண்டர் என்ற எண்ணத்தைத் தவிர வேறு தன்முனைப்பான எண்ணம் அவருக்கு எழுந்ததில்லை. சம்பந்தரைச் சந்தித்தபோது, தாமே முன்வந்து வணங்கிய பண்பு அப்பரின் தொண்டுள்ளத்தைப் புலப்படுத்துகின்றது.

தொண்டருக்குரிய இலக்கணங்களை அப்பர் மறுமாற்றத் திருத்தாண்டகத்தில் கீழ்க்கண்டவாறு தெளிவுறுத்துகின்றார்.

1. இறைவன் ஒருவனுக்கே தம்மையளித்தல்
2. எவர் பொருட்டும், எதன் பொருட்டும் அச்சப்படுவதில்லை; சோர்வடைவதில்லை.
3. இவ்வுலகில் எவ்வளவு பெரியவராயினும் அவர்க்குக் குடி யாவதில்லை.
4. இறைவனுக்கே 'மீளாஆளாய்' அவன்பணி ஒன்றையே செய்தல்.
5. அருள்நெறி பரவ உழைத்தல்.

இந்நெறிகளை அப்பர் போற்றியமையால்தான் திருத்தொண்டின் உறைப்புடையவராக அவரால் திகழ முடிந்தது.

கையில் உழவாரத்துடன், ஊர் ஊராய்ச் சென்று கோயில்களைச் சுற்றி அடர்ந்துள்ள கல்லும் முள்ளும், புல்லும் புதரும் நீக்கித் தொண்டு செய்து மற்றவர்கட்கும் அத்தொண்டு நெறியின் சிறப்பை வலியுறுத்தினார்.

"...................... தொண்டீர்
ஆம்பலம் பூம்பொய்கை யாரூரமர்ந்தா னடிநிழற்கீழ்ச்
சாம்பலைப் பூசிச் *சலமின்றித் தொண்டுபட்டுய்ம்மின்களே*"
(4:102:1)

என்று தொண்டர்களை வஞ்சனையின்றித் தொண்டுபடுமாறு வேண்டுகின்றார்.

"என்பலாற் கலனுமில்லை யெருதலலா லூர்வதில்லை
புன்புலா னாறுகாட்டிற் பொடியலாற் சாந்துமில்லை
தன்பிலாத் தொண்டர்கூடித் தொழுதழு தாடிப்பாடும்
*அன்பலாற் பொருளுமில்லை* யையனை யாறனார்க்கே (4:40:6)

என்ற பாடலில் தொண்டு நெறி அன்பு ஒன்றையே சார்ந்து நிற்பது; வேறு ஒருபயனையும் எதிர்நோக்கியதில்லை என்று தெளிவுறுத்து கின்றார்.

> "கூடும்அன்பினிற் கும்பிடலே யன்றி
> வீடும்வேண்டா விறலின் விளங்கினார்" (பா.8)

என்று சேக்கிழார் திருக்கூட்டச் சிறப்பில் கூறியவாறு, தொண்டர்கள் கூடித் தொழுது ஆடிப்பாடித் தொண்டு செய்வது அன்பு ஒன்றைக் கருதியே என்பதை அப்பர் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

தொண்டர் வழிபாட்டைத் தொடங்கிவைத்த பெருமை அப்பருக்கு உண்டு. தொண்டருக்குத் தொண்டராகும் புண்ணியப்பேறு என்று கிடைக்குமோ என்று ஏங்கிப்பாடிய திருவாரூர்ப் பதிகத்திலும், சிவனடியாரைச் சார்தல் கூடாது எனக் காலதூதருக்கு ஆணையிடும் கால பாசத்திருக் குறுந்தொகைப் பதிகத்திலும் அடியவரின் தொண்டு நெறிக்கு அப்பர் அளித்த சிறப்பு வெளிப்படுகின்றது.

தொண்டிற்சிறந்த அப்பருக்கு திருவீழிமிழலையில் இறைவன் வாசியில்லாக் காசுகொடுத்த செயலானது, திருத்தொண்டின் பெருமையை இவ்வுலகிற்குக் காட்டவேண்டும் என்ற நோக்கங் கருதியே எனலாம். தொண்டு ஒன்றினாலேயே அவர் மயக்கம் நீங்கி ஞானம் பெற்றார் என்றும் கருத இடமுண்டு.

சமயநெறி பரப்பவும், மக்களிடையே உள்ள அறியாமை, அச்சம், பிணி ஆகியவற்றை நீக்கவும், மாறுபட்ட உணர்வுகளை அகற்றி மக்களை இறைவன் திருமுன் ஒன்றுசேர்க்கவும் அப்பர் திருத் தொண்டுநெறியை மேற் கொண்டார். அத்தகைய தொண்டுநெறி அக்காலத்தின் தேவையாகவும் இருந்தது.

அப்பர் சமயநெறியில் நின்று இறைத்தொண்டு செய்தமை இறையியலில் மேலும் விளக்கம் பெறும்.

### 3. அஞ்சாமை

மனித வாழ்வில் 'அச்சம்' என்பது மிகுந்த துயரத்தையும் இழிவையும் தருவது. உயர்ந்தோர்கள் அச்சத்தைத் தவிர்த்து வாழ்வர். தொண்டு செய்பவர்கட்கு முதன்மையாக வேண்டப்படும் பண்பு அஞ்சாமையாகும். இத்தகைய தொண்டர்களின் சிறப்பைக் குறித்துத் திருக்கூட்டச் சிறப்பில்

> "ஈர வன்பினர் யாதுங் குறைவிலார்
> வீர மென்னால் விளம்புந் தகையதோ" (பா. 9)

என்று சேக்கிழார் வியந்து கூறுவர். இவ்வகையில் அப்பர் பெருந்தகை அஞ்சாமைக்கு உறைவிடமாய் வாழ்ந்தவர்.

அஞ்சாமைக்குரிய பற்றுக்கோடு சிவபெருமான் ஒருவனே என்பது அப்பரின் கருத்து. சிவபெருமானின் அருள் தம்வயப்பட்டிருக்கும் போது பூமியில் எவருக்கும் அஞ்சவேண்டியதில்லை என்ற துணிவு அவர் மனத்தில் நிலைபெற்று விடுகின்றது.

"ஈண்டுகெடிலப் புனலுமுடையாரொருவர்தமர் நாம்
அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதும் இல்லை" (4:2:2)

"மண்பாத லம்புக்கு மால்கடன் மூடிமற் றேழுலகும்
விண்பா றிசைகெட் டிருசுடர் வீழினு மஞ்சனெஞ்சே" (4:94:9)

என்ற பெருமித நினைவு மேலெழுகின்றது.

இறைவனருளால் பெற்ற இப்பெருமித உணர்வே,

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை" (6:98:1)

என்று பல்லவப் பேரரசனையே எதிர்த்து நிற்கும் துணிவை அவர்க்கு நல்கியது.

சமணர்களால் இழைக்கப்பட்ட பல துன்பங்களினின்றும், தம் வாழ்வில் ஏற்பட்ட இன்னல்களிலிருந்தும் துவளா நெஞ்சுடையராய்ச் சோதனைகளை உறுதியுடன் வென்றார்.

### 4. கலைகளும் விழாக்களும்

சமுதாயத்தின் பண்பாட்டை வெளிப்படுத்தும் வாயில்களாகக் கலைகளும் விழாக்களும் அமைகின்றன. தமிழர் வாழ்வில் விழாக்கள் அன்று தொட்டு இன்றுவரை சமயத்தொடர்பும் இறைத்தொடர்பும் உடையனவாகவே விளங்குகின்றன.

அப்பர் காலத் தமிழகத்தில் இசைக்கலை பெரிதும் போற்றப் பட்டது. பலவகை இசைக்கருவிகளைப் பற்றி அப்பர் பல பாடல் களில் குறிப்பிட்டுள்ளார். சிறப்பாக, உடுக்கை, (4:9:10), கின்னரம் (5:20:7), குடமுழவம் (6:4:5), குழல் (4:51:7), கொக்கரை (4:66:9), சங்கு (4:21:5), தகுணிச்சம் (6:64:8). மொந்தை (4:92:9), யாழ் (4:2:9), வீணை (4:2:4) போன்ற இசைக் கருவிகள் கோயில்களிலும் விழாக்களிலும் பயன்படுத்தப் பெற்ற குறிப்புக்கள் அப்பாடல்களில்

மிகுதியாக உள்ளன. சிவபெருமானோடு இத்தகைய இசைக் கருவி களைத் தொடர்புபடுத்தியும், அவனே இக்கருவிகளை இயக்கம் செய்கின்றவனாகவும் அப்பர் சுட்டியுள்ளார். ஆடற்கலைகளைப் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. அவையும் சிவபெருமானோடும் உமையோடும் இணைத்தே சொல்லப்பட்டுள்ளன.

அப்பர் தம் காலத்தில் கோயில்களில் நடைபெற்ற விழாக் களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

குறுக்கை வீரட்டத்தில் ஏழுநாள் அட்டமிவிழா நடைபெற்றது. அவ்விழாவில் ஏழுநாளும் சிவபெருமான் வீதியுலாப் போந்தார் (4:50:2). திருவிடைமருதூரில் பூசநீராட்டு விழா சிவபெருமானுக்கு நடைபெற்றது (5:14:1). திருவாரூரில் பங்குனி உத்திரப்பெருவிழா சிறப்பாக நடைபெற்றது. இவ்விழாவை முதன்முதலில் நமிநந்தி அடிகள் தொடங்கி வைத்தார் (4:102:2).

திருவாரூரில் திருவாதிரை விழா ஒரு சிறப்புடைய விழாவாக இருந்தது. அண்மையிலுள்ள ஊரார்கள் கூடி வந்து இறைவனைப் போற்றி வணங்கினர் (4:21).

திருவொற்றியூரில் பங்குனி உத்திரநாள் தீர்த்தத் திருவிழாவாக நடைபெற்றது (6:45:5).

இத்தகைய கோவில் விழாக்கள் அப்பர் பாடல்களில் எடுத்துக் கூறப்பெற்றுள்ளன.

விழாவில் கூடும் அடியவர்களைப் 'பக்தர்' (4:21:10), "பொடிகள் பூசிப்பாடும் தொண்டர்" (4:21:3), "வித்தகக்கோல் வெண்டலை மாலை விரதிகள்" (4:21:1) என்று பலவகையினராகக் கூறிக்கின்றார் அப்பர்.

இறைவனைப் போற்றிப் புகழும் நாட்களெல்லாம் தங்கட்கு இன்ப நாட்கள் என்றும், இறைவனைத் தொழாத நாட்கள் துன்பநாட்கள் என்றும் கூறுவோரும், குணங்கள் பேசிக் கூடிப்பாடிப் பித்தரைப்போல் இறைவனைப் போற்றுவோரும், சிவபெருமான் திருவடியையே சிந்திப் போரும் என்று அடியவர்களின் செயல்களைப் பற்றியும் கூறுகின்றார் (4:21).

விழாக்களில் வீதிதோறும் செய்யப்பட்ட அழகுக்கோலங்களையும் அப்பர் வருணிக்கின்றார். வீதிகள்தோறும் வெண்கொடிகள் ஏற்றப் பட்டன (4:51:2). விதானங்களில் கட்டப்பட்ட மணிகள் சுடர்விட்டு

ஒளிபெருக்கின; முத்து மாலைகளும், பவள மாலைகளும் தோரணங் களாகத் தொங்கவிடப்பட்டன (4:21:3).

ஆரூர் (4:102), ஒற்றியூர் (4:6), கச்சி (5:32), குறுக்கை (4.50), கோடிகா (4:51), கோளிலி (5:57), திருப்புத்தூர் (6:76), பைஞ்ஞீலி (5:41) ஆகிய ஊர்களில் நிகழ்ந்த விழாக்கள் அப்பர் பாடல்கள் பெரிதும் சிறப்பித்துப் பாடப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## முடிபுகள்

மனிதப் பிறவியின் பயன் இறைவனைத் தொழுவது.

அருளும் அறமும் பிணைந்த வாழ்க்கையே பண்பட்டுச் சிறக்கும்.

மனித வாழ்க்கையின் வெற்றிக்கு அசையாத நம்பிக்கையும் மனத்திட்பமும் இன்றியமையாதவை.

ஐம்பொறிகளின் ஆற்றலை வெற்றி கொள்ளுதல் இறையருளின் துணையின்றி இயலாது.

பிறவியினால்தான் துன்பங்கள் வருகின்றன. அதனால் வரும் வாழ்க்கை நிலையானதன்று.

மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்குத் தக்க வகையில் 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே' என்றும், 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்றும் மனிதநலக் கோட்பாடுகளை வழங்கிய அப்பரின் பக்திப்பாக்கள் இறையியலோடு கூடிய வாழ்வியலே ஏற்றமளிக்கும் என்பதனை எடுத்துரைக்கின்றன.

தொண்டு நெறியும் அதற்கு அடிப்படையான அஞ்சாமையும் வலியுறுத்தப்படுகின்றன.

சமணர் வாழ்க்கை முறைகளும், அப்பர் காலச் சமணர்கள் தங்கள் ஒழுக்க நெறிகளை மீறி வாழ்ந்தமையும் அப்பர் பாடல்களின் வழி புலனாகின்றன.

தமிழில் 'அறங்கூறு சமயம்' என்று கருதப்படும் சமண சமயத்தில் நெடுங்காலம் வாழ்ந்த அப்பர் சைவம் மீண்டு மனித நலத்திற்காகப் பாடிய பாடல்களில் நீதிக் கருத்துக்கள் நிரம்பியுள்ளன.

அஞ்சாமை, அடக்கம், பணிவு, மனவுறுதி ஆகிய மானிடப் பண்புகள் உருக்கொண்டவராகத் திகழ்ந்த அப்பர் தம் பாடல்கள்

வாயிலாக அப்பண்புகளையே மனித இனத்தின் மேம்பாட்டிற் காகப் பெருங்கொடையாக்கியுள்ளார்.

இசைக்கலையும் விழாக்களும் சமயத்தோடு தொடர்பு கொண்ட நிலையில் சிறப்பிடம் பெறுகின்றன.

**அடிக்குறிப்புக்கள்**

1. கலியாணசுந்தரனார், திரு.வி., மனித வாழ்க்கையும் காந்தியடிகளும், ப. 13.
2. குறள், ஒழுக்கமுடைமை, பரிமேலழகர் உரை
3. அருணாசலம், ப., பக்தி இலக்கியம், ப. 101.
4. வேலுப்பிள்ளை, ஆ., தமிழர் சமய வரலாறு, பக். 100-104.
5. வெ.தெ. மாணிக்கம், அப்பர் காட்டிய வாழ்வியலும் இறையியலும்
6. வேங்கடசாமி, மயிலை. சீனி., சமணமும் தமிழும், ப. 1.
7. மேலது, ப. 7.
8. மேலது, ப. 47.
9. மேலது, ப. 24-26.
10. மேலது, ப. 24.
11. மேலது, ப. 25.
12. மேலது, ப. 20.
13. மேலது, ப.20-21.
14. மேலது, ப. 21.
15. மேலது, ப. 21.
16. மேலது, ப. 21.
17. சுப. அண்ணாமலை, அப்பரடிகள், தொண்டுநெறி, ப. 63.
18. இரத்தினசபாபதி, வை., திருமுறைத்தெளிவே சிவஞானபோதம், பக். 121-122.

# 4. இறையியல்

இறையியல் என்னும் இத்தலைப்பில் இறையியலைப் பற்றிய விளக்கம், இறைவனது இயல்புகள், அவனை வழிபடும் நிலைகள், வழிபாட்டு முறைகள், வழிபாட்டுப் பயன்கள், சைவக் கொள்கைகள் ஆகியவை விளக்கம் பெற்றுள்ளன.

## அ. இறையியல் விளக்கம்

இறைவனைப் பற்றிய செய்திகள் இறையியல் எனப்பெறும். 'இறு' என்னும் அடிச்சொல்லிலிருந்து தோன்றிய 'இறை' என்னும் சொல்லோடு 'அன்' ஈறு இணைந்து இறைவன் என்றாகியுள்ளது.

'இறை' என்பதற்கு மதுரைத் தமிழ்ப் பேரகராதியில் 'தங்கல்', 'கடமை', 'அரசிறை' போன்ற பொருள்கள் உள்ளன. இறைவன் என்னும் சொல்லுக்குத் 'தலைவன்', 'அரசன்', 'கடவுள்' போன்ற பொருள்களைத் தமிழ்ப் பேரகராதி தந்துள்ளது. எனவே ஈண்டு இறையியல் என்பது கடவுளைப் பற்றிய இயல்; அஃதாவது, ஒரு குறிப்பிட்ட சமயத்தின் கடவுள் தன்மைகள், அச்சமயத்தின் கொள்கைகள், அச்சமய மாந்தரின் ஒழுகலாறுகள் ஆகியன அடங்கிய விதிமுறைகளும் விளக்கங்களுமாகும்.

ஒரு சமயத்தின் பொருளை ஒழுங்கான முறையில் வெளிப் படுத்தும் குறிக்கோளைக் கொண்டது இறையியல் என்பர்.[1]

சமயம் தன்னைத்தானே புரிந்து கொள்ளவும் அதன் அடிப்படை களைப் புரிந்து கொள்ளவும் இறையியல் உதவுகின்றது.[2]

இறையியல், இறைவனைப் பற்றியது மட்டுமன்று; மனிதனைப் பற்றியதுமாகும். எத்துணையளவு இறைவனைச் சார்ந்திருக்கின்றதோ அத்துணையளவு மனிதனையும் சார்ந்திருக்கின்றது.[3]

இறையியல் ஆய்வின் பயனாகத் தத்துவக் கொள்கைகளும் இறைக்கொள்கைகளும் உருவாகின்றன.[4]

இறையியலைப் பற்றிய இத்தகைய விளக்கங்கள் பரந்து பட்ட சிந்தனைப் போக்குகளைக் காட்டுகின்றன. எந்தவொரு சமயமும்

கடவுளை மையமாகக் கொண்டிருந்தாலும் அதன் கொள்கைகள், வழிமுறைகள், சிறப்புக்கள் ஆகியவை கடவுள் அளவிலேயே முடிந்து விடுவன அல்ல. அவையாவும் மனிதனோடுதான் இணைக்கப் பெறுகின்றன.

கடவுளுக்கும் உலகத்துக்கும், கடவுளுக்கும் மனிதனுக்கும், மனிதனுக்கும் கடவுளுக்கும், மனிதனுக்கும் மனிதனுக்கும் உள்ள பல்வேறு தொடர்புகளைக் குறிப்பது இறையியல்[5] என்னும் கருத்தும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

கவிஞர்கட்கும், ஆசிரியர்கட்கும் பாடுபொருளாக உள்ள புராணிக இறையியல், தத்துவ ஞானிகட்குரிய இயற்கை இறையியல், கோயில் சடங்குகளும் விழாக்களும் பற்றிய மக்கள் இறையியல் என்று மூன்றாக 'வாரோ' என்பார் பிரித்துரைப்பார்.[6] இதனை ஆறுவகையாகப் பகுக்கும் போக்கும் மேனாட்டரிடம் உள்ளது.[7]

தேசிய அணுகு முறை, அருள் வெளிப்பாட்டு அணுகு முறை, மனிதாபிமான அணுகு முறை என்று இறையியலை அணுகும் முறையிலும் வேறுபாடுகள் உள்ளன.[8] அணுகு முறைகளுக்கு ஏற்றாற் போல சமய உண்மைகள் வெளிப்படுமாதலால் இதற்குச் சிறப்பான பங்கும் உண்டு.

இவ்வாறு பல்வேறு இறையியல் பாகுபாடுகளும், அணுகுமுறை களும் மேல்நாட்டுச் சமயத் திறனாய்வாளர்களிடம் இருந்தாலும் இக்கூறுகள் பலவும் உள்ளடக்கிய ஆய்வே பெரிதும் தமிழில் மேற் கொள்ளப்படுகின்றது. இப்பொதுமுறைப் போக்கையே இந்த ஆய்வு பின்பற்றுகின்றது.

## ஆ. இறையியல்பு

இந்தியப் பெருநாட்டில் வாழும் தமிழ் மக்கள் பலரின் வாழ்க்கை நெறியாக உள்ளது சைவம். இலங்கை, பர்மா, மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா, மொரீசியஸ் தீவு போன்ற நாடுகளில் வாழும் தமிழர்களிற் பெரும்பான்மையோர் சைவநெறியையே போற்றுகின்றனர். சிவனை முழுமுதற் கடவுளாகக் கொள்ளும் நெறி சைவ நெறி.

அறுவகைச் சமயம், நாலாறு சமயம் என விரிவுபடும் பல்வேறு சமயங்கட்கும் பரம்பொருளாகத் திகழ்வது சிவபரம் பொருளே என்று சுட்டுவது சைவ மரபு.

"வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்கு பரம்பொருளே நின் விளையாட்டல்லால்
மாறுபடும் கருத்தில்லை முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள் போல் வயங்கிற்றம்மா. (பா. 26)

என்பர் தாயுமானவர். சமயங்கள் பலவாக விரிவடைவதையும் இறைவனின் திருவிளையாட்டாகவே தாயுமானவர் கருதியிருப்பதை இதனால் அறியமுடிகின்றது. ஆங்காங்கு தோன்றிப் பரவி வரும் பல்வேறு நதிகளும் முடிவில் கடலிற் சென்று கலந்து ஒன்று படுமாறு போலசமயங்களும் முடிவில் ஒன்றேயாய்த் திகழ்கின்றன என்பதையும் தாயுமானவர் தெளிவுபடுத்தியுள்ளார்.

அப்பர் தாம் வணங்கும் கடவுளை, 'அறுவகைச் சமய அண்ணல்' என்னும் முறையில்,

"அறுவகைச் சமயம் வைத்தார்" (4:33:6)

"சமயம் மேல் ஆறுமாகித் தான் ஒரு சயம்புவாகி
இனிதின் அங்கிருந்த ஈசன்" (4:45:5)

"சமயம் அவை ஆறினுக்கும் தலைவன் தான் காண்" (6:65:7)

"விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்து
எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்", (4:60:9)

"தொண்டர்க்கு அங்கங்கே அறுசமயம் ஆகிநின்ற
திக்கினை" (6:68:5)

"ஆறு கூர்மையர்க்கு அச்சமயப் பொருள்
ஆறுபோல் எம் அகத்துறை ஆதியே" (5:89:6)

எனப் போற்றியிருப்பதை உணரமுடிகின்றது.

தெய்வங்கள் பலவாயினும் அடிப்படையான ஒரே தன்மையதாய்ச் சிவமாய்த் திகழ்கின்றது என்பது அப்பர் துணிபு.

"பசுக்களினது நிறம் பலவானாலும் பால் ஒன்றானாற் போல், சமயங்கள் பலவானாலும், சமயத்திற்குக் கொண்ட தெய்வங்கள் பலவானாலும் அதிலே நின்று பலத்தைக் கொடுக்கும் சிவன் ஒருவனே" என்று சிவபரத்துவத்தின் மேன்மையை உவமை வாயிலாக விளக்குவர்[9]. இத்தகைய பரம்பொருளின் இயல்புகள் முழுமுதல் தன்மை, எண்குணத் தன்மை, சிவமாதல் நிலை, பெருங்கருணைத் திறம், திருவடிப் பெருமை, ஆகிய நிலைகளில் விளங்குமாற்றை அப்பர் வாக்கின் வழிநின்று காண்போம்.

## 1. முழுமுதல் தன்மை

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களைப் புரிந்து உலகைத் தொழிற்படுத்தும் தெய்வங்களை மேல்நின்று ஆட்சிப்படுத்தும் தலைமைத் தன்மை, 'முழுமுதல் தன்மை' எனக் கருதப்படும். இதுவே 'பரத்துவம்' ஆகும்.

'அஞ்சு மோராடி" (5:89:5)

"அஞ்சு கொலாம் அவர் ஆடின தாமே" (4:18:5)

"அரிய நான்மறை ஆறங்கமாய் ஐந்துபுரியன்" (5:18:7)

என்னும் திருமொழிகளால் சிவன் ஐந்தொழில்களையும் புரிந்து முழுமுதலாம் தன்மை பெறுதலை அப்பர் எடுத்துரைத்துள்ளார்.

படைத்தல் முதலான ஐந்தொழில்களில் முதல் மூன்றுமே முதன்மையானவாகக் கருதப்படும்.

"மூன்று மூர்த்தியுள் நின்றியலும் தொழில் மூன்றுமாயின
மூவிலைச் சூலத்தன்" (5:89:3)

என்றும்,

"மூவாதியாவர்க்கும் மூத்தான் தன்னை" (6:74:3)

என்றும், முத்தொழிலையே முதன்மையாக்கி நாவுக்கரசர் கூறியுள்ளமையும் நினையத்தக்கது.

காத்தலில் மறைத்தலும், அழித்தலில் அருளலும் இணைத்து உரைக்கப்படும். மறைத்தல் என்பது முத்தொழிலுக்கு அடிநிலையாகி, உயிர்களுக்குப் பிறவியைச் செலுத்தி நிற்பதால் பந்தமாகும். அருளல் என்பது உயிர்களைப் பந்தத்தினின்று நீக்குவதால் வீடாகும்.

"பந்தமாய் வீடுமாகிப் பரம்பரமாகி நின்று" (4:41:5)

என்று, 'முத்தொழில்களின் அடிப்படையில் ஐந்தொழில்களைப் புரியும் சிவனின் பரத்துவத்தை அப்பர் போற்றியுள்ளார்.

சிவம், சத்தி, நாதம், விந்து, மகேசன், உருத்திரன், மால், அயன், சதாசிவம் ஆகிய ஒன்பது நிலைகளில் ஏகநாதனாகிய சிவபெருமானே உலகை இயக்குகின்றான். உருத்திரன், திருமால், அயன் ஆகிய மூவரும் செய்யும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களை, அரு, உரு, அருவுரு ஆகிய முத்திறங்களில் சிவனே செய்வன் என்று சிவஞான சித்தியார் (நூ:2, செ. 24) எடுத்துரைக்கும்.

பிரமன் படைத்தலையும், திருமால் காத்தலையும், உருத்திரன் அழித்தலையும் தனித்தனியாக நின்று தொழில் புரிந்தாலும் இம்மும்.

மூர்த்திகளாகத் தோன்றியிருப்பவன் 'சிவனே' என்றும், அவன் இம்மூவர்க்கும் மேலானவன் என்றும் கூறுவது சைவ மரபு. இதனை அப்பர் பாடல்கள்,

"உலகமெல்லாம் வைப்பானைக் களைவானை வருவிப்பானை"
(6:26:4)

"உலகனைத்தும் ஒளித்து அளித்திட்டு உய்யச் செய்யும்
வித்தகன்" (6:52:8)

"மூவன்காண் மூவர்க்கும் முதலானான் காண்" (6:85:4)

"மூவுருவின் முதலுருவாய் ஆணமூர்த்தி" (6:98:6)

"சிவனாகித் திசை முகனாய்த் திருமாலாகி நின்றபவன்" (6:79:4)

"அங்கமலத் தயனொடு மாலாகி மற்றும்
அதற்கப்பால் ஒன்றாகி அரிய வொண்ணாச்
செங்கனகத் தனிக்குன்றைச் சிவனை" (6:27:6)

எனச் சுட்டி, முத்தொழில் புரியும் மூவர்க்கும் மேலான சிவனின் முழுமுதல் தன்மையை விளக்குகின்றன.

சிவஞான சித்தியார் மேற்கூறிய கருத்தினைத்

"தோற்றுவித்து அளித்துப் பின்னும் துடைத்தருள் தொழில்கள் மூன்றும்
போற்றவே உடையன் ஈசன்" (நூ. 1; செ. 33)

என்று போற்றிக் கூறியுள்ளது.

சிவஞான முனிவரும்,

"அயன் மால் இருவரும் புண்ணிய விசேடத்தான் முதல்வனுடைய அதிகார சத்தி அவனது ஏவலால் பெற்று உடையரன்றி அத்தொழிற்குச் சுதந்திரர் அல்லர்; ஆகலான் முத்தொழிலும் செய்தற்குரிய சுதந்திரம் ஈறுமாகி ஒருவனுக்கே உண்டு"[10]

என விளக்கியுள்ளார்.

சிவனின் ஒப்பிலாத் தன்மைகளை

"நின்னாவார் பிறரின்றி நீயே யானாய்" (6:95:7)

"மற்றாருந் தன்னொப்பார் இல்லாதானை" (6:1:2)

என்று அப்பர் கூறியதோடமையாது, 'தேவர்க்கும் தேவர்' என்ற முறைமையில் சிவபெருமானின் முழுமுதல் தன்மையை,

"வாதுசெய்து மயங்கும் மனத்தராய்
ஏதுசொல்லுவீ ராகிலு மேழைகாள்

யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வன்னலால் தேவர்மற் றில்லையே" (5:100:4)

என்று அப்பர் உறுதிபடக் கூறியுள்ளார்.

"*ஆதித்தன் அங்கி சோமன் அயனொடு மால் புதனும்*
போதித்து நின்று உலகில் போற்றிசைத்தார்" (4:36:7)

"ஆத்தமாம் அயனும் மாலும் அன்றி மற்றொழிந்த தேவர்
சோத்தம் எம்பெருமான் என்று தொழுது தோத்திரங்கள் சொல்ல"
(4:50:2)

"அரிஅயன் இந்திரன் சந்திராதித்தர் அமரரெலாம்
உரிய நின்கொற்றக் கடைத்தலையார் உணங்காக் கிடந்தார்" (4:99:7)

"நாரணனொடு நான்முகன் *இந்திரன்*
*வாரணன் குமரன்* வணங்கும் கழல்
பூரணன்" (5:65:10)

"கோவாய இந்திரன் உள்ளிட்டாராகக்
குமரனும் விக்கின விநாயகனும்
பூவாய பீடத்து மேலயனும்
பூமி அளந்தானும் போற்றிசைப்ப" (6:13:10)

இவ்வாறு திருமால் முதலான தெய்வங்களும், இந்திரன் முதலாய தேவர்களும் வணங்கும் முழுமுதல் கடவுள் சிவபெருமான் என்னும் கருத்தை அப்பர் பல பாடல்களில் வலியுறுத்தியுள்ளார்.

உமையம்மை சிவபரம்பொருளைத் தொழுது, சிவபெருமானின் ஒரு கூறாகத் திகழும் பேறு பெற்றதைப் பல பாடல்களில் அப்பர் குறிப்பிட்டுள்ளார்.

"பெருந்திரு *இமவான் பெற்ற பெண் கொடி* பிரிந்த பின்னை
வருந்துவான் தவங்கள் செய்ய மாமணம் புணர்ந்து மன்னும்
அருந்திரு *மேனி தன்பால் அங்கொரு பாகமாகத்*
திருந்திட *வைத்தார்*" (4:72:1)

இங்ஙனமே, விண்ணவரும், மால் அயனும் தத்தம் தேவியரோடு வழிபட்டு வரம்பெற்றதை,

"மருதங்க ளாமொழிவர் மங்கை யோடு
வானவரும் மாலயனுங் கூடித் தங்கள்
கருதங்க ளாற்றுதித்துத் தூநீராட்டித்
தோத்திரங்கள் பலசொல்லித் தூபங்காட்டிக்
*கருதுங்கொல் எம்பெருமான் செய்குற் றேவல்*
என்பார்க்கு வேண்டும் வரங் கொடுத்து" (6:35:8)

என்று அப்பர் நயம்படக் கூறியுள்ளார்.

## 2. எண்குணத் தன்மை

சிவபெருமானின் முழுமுதல் தன்மைக்கு அவனிடம் திகழும் எண்குணத் தன்மைகளே காரணம் என்பதனை அப்பர் பல பாடல்களில் சுட்டியுள்ளார்.

'எட்டுக்கொலாம் அவர் ஈறில் பெருங்குணம்' (4:18:8)

'எட்டு வான் குணத்தீசன்' (5:89:8)

'எண் குணத்துளோமே' (6:98:10)

எனச் சிவனின் எண் குணங்களைத் தொகையாகச் சுட்டி அவனுடைய ஈரமும் வீரமும் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

வைணவ நெறியினராகக் கருதப்பெறும் பரிமேலழகர், 'எண்குணத்தான்' என்னும் திருக்குறட் பகுதிக்கு விளக்கமளிக்கும் போது,

> "எண் குணங்களாவன: தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங் களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில் ஆற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை - இவ்வாறு சைவ ஆகமத்துக் கூறப்பட்டது."[11]

என்று சைவ ஆகமத்தையே அடிப்படை ஆதாரமாகக் காட்டியுள்ளார்.

இதற்கேற்பவே அப்பர் பாடல்களில் இவ்வெண்குணஞ்சுட்டும் பகுதிகள் நிறைந்திருத்தலைக் காண முடிகின்றது.

1. தன் வயத்தனாதல்
   'தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான சங்கரன்' (6:98:1)
2. தூய உடம்பினனதால்
   'செழுஞ்சுடர் நற்சோதி மிக்க உருவே' (6:47:1)
3. இயற்கை உணர்வினனாதல்
   'கலைஞானம் கல்லாமே கற்பித்தானை' (6:11:4)
4. முற்றும் உணர்தல்
   'உணரப்படாத தொன்றில்லை' (6:21:2)
5. இயல்பாகவே பாசங்களினின் நீங்குதல்
   துறவாதே கட்டறுத்த சோதியான்' (6:11:1)
6. பேரருளுடைமை
   'அருளே அலாது எக்கணும் இலன்' (5:96:2)
   'வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்' (6:23:1)
7. முடிவில் ஆற்றலுடைமை
   'காலங்கள் ஊழி கடந்தார் தாமே' (6:78:8)

8. வரம்பில் இன்பமுடைமை

எற்றாலும் குறைவொன்றும் இல்லாதான்' (6:24:10)

மேற்சுட்டிய எண்குணங்களையும் ஒருசேர உள்ளடக்கிய கயிலைத் திருத்தாண்டகப் பாடல் ஒன்றும் அப்பர் பாடியுள்ளமை உணரத்தக்கது.

'ஆட்சியுலகை யுடையாய் போற்றி
அடியார்க் கமுதெலாம் ஈவாய் போற்றி
சூட்சி சிறிது மிலாதாய் போற்றி
சூழ்ந்த கடல்நஞ்ச முண்டாய் போற்றி
மாட்சி பெரிது முடையாய் போற்றி
மன்னியென் சிந்தை மகிழ்ந்தாய் போற்றி
காட்சி பெரிது மரியாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி' (6:57:4)

இப்பாடலில் அமைந்துள்ள சிவனின் எண்குண மாண்பினைப் பின்வரும் உரைப்பகுதி விளக்கும்.

"இத்திருத் தாண்டகத்துள், அவனது எண்குணங்களும் பெறப்படும். அஃதாமாறு காட்டுதும், ஆட்சியால் தன்வயமும், அமுதினால் வரம்பிலின்பமும், சூட்சி சிறிது மின்மையால் இயல்பாகவே பாசங் களின் நீங்குதலும், நஞ்சமுண்டமையால் பேரருளும், பெரிதாய மாட்சியால் முடிவிலாற்றலும் அடியவரது சிந்தையினின்று அறிவித்தலால் இயற்கையுணர்வும், காட்சிக் கருமையால் தூய உடம்பும், கயிலை மலையிருக்கையால் முற்றுணர்வும் பெறப்படுதலை நுண்ணுணர்வாற் கண்டு கொள்க. இஃதோர் அரும்பெறல் திருப்பாடல்"[12]

உயிர்களுக்குள்ள குணங்களையும், இறைவனுக்குரிய குணங் களையும் வகைப்படுத்திக் காட்டும் வகையில் அப்பரின் இடை மருதூர்த் தாண்டகப் பாடலொன்று அமைந்துள்ளது.

"பிரியாத குணமுயிர்கட் கஞ்சோ டஞ்சாய்ப்
பிரிவுடைய குணம் பேசிற் பத்தோ டொன்றாய்
விரியாத குணமொருகால் நான்கேயென்பர்
விரிவிலாக் குணநாட்டத் தாறே யென்பர்" (6:16:7)

இப்பாடலில் உயிர்கட்கமையும் பிரியாத குணமாகிய இயற்கைத் தன்மைகள் பத்தும், பிரிவுடைய குணமாகிய செயற்கைத் தன்மைகள் பதினொன்றும் சுட்டப்பட்டுள்ளன. இறைவனுக்குத் தொகுத்துக் கொள்ளப்படும் விரியாத குணங்கள் நான்கு. அவையாவன, உண்மை, அறிவு, இன்பம், அருள் ஆகியன. சிவனுக்குரிய எண்குணங் களுள், தூய உடம்பினனாதல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் ஆகிய இரண்டு நீங்கலாக எஞ்சிய ஆறும் விரிவிலாக் குணமாகும்.

எனவே சிவனின் எண்குணங்களை நான்காகவும், ஆறாகவும் செறிவு படுத்திச் சொல்லும் வழக்குண்மையை இப்பாடல் உணர்த்துகின்றது.

### 3. சிவமாதல் நிலை

நிலம், நீர், தீ, வளி, வான் ஆகிய ஐம்பூதங்களின் சேர்க்கையே 'உலகம்' என்னும் கருத்து (தொல்.மரபு. 91) தொல்காப்பியர் காலம் தொடங்கி இருந்து வருகின்றது. இவ்வைம்பூதங்களின் இயல்பாகவே இறைவன் திகழ்கின்றான் என்பதைப் பழந்தமிழ்ச் சமயச் சான்றோர் களும் சுட்டியுள்ளனர்.

> "சுவைமை இசைமை தோற்றம் நாற்றம் ஊறு
> அவையும் நீயே. . . . . . . . . . . . . . .
> அவை அவை கொள்ளும் கருவியும் நீயே
> . . . . . . . . . . . . . .
> ஒன்றனில் போற்றிய விசும்பும் நீயே
> இரண்டினில் உணரும் வளியும் நீயே
> மூன்றின் உணரும் தீயும் நீயே
> நான்கின் உணரும் நீரும் நீயே
> ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே
> அதனால் நின் மருங்கின்று, மூவேழ் உலகமும்" (பா. 13)

என்ற பரிபாடலடிகள் இறைவன் ஐம்பூதங்களாகவும் திகழ்வதைப் போற்றியுள்ளன. மேலும் தீயினுள் தெறலாகவும், பூவினுள் நாற்ற மாகவும், ஒவ்வொரு பொருளின் உட்பொருளாகவும் இறைவன் திகழ்வதைச் சங்கப் பாடல் காட்டுகின்றது.

காலப்போக்கில், இறைவனை ஐம்பூதங்களின் வடிவமாகக் கருதும் எண்ணமும் அதனால் ஐம்பூதங்களைப் போற்றித் தொழும் எண்ணமும் தோன்றின.

> "மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்,
> வளைநால் பவ்வம் உடுக்கையாக
> விசும்பு மெய் யாகத் திசை கையாகப்
> படர் கதிர் மதியமொடு சுடர் கண்ணாக
> இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
> வேத முதல்வன்"

என்ற நற்றிணை கடவுள் வாழ்த்துப் பாடல் இயற்கை யாவையும் உள்ளடக்கிய இறைவனின் பேருருவத்தை வரைந்து காட்டுகின்றது.

இறைவனே இயற்கை என்னும் கருத்து, இயற்கைப் பொருள் களைப் போற்றி வணங்கும் நிலையைத் தோற்றுவித்தது. இதனால்

ஐம்பூத வடிவாகச் சிவபெருமான் திகழ்கின்றான் என்ற எண்ணம் உருவாயிற்று. இதன் காரணமாகத் தமிழ்நாட்டில் ஆரூரில் மண் இயல்பாகவும், ஆனைக்காவில் நீர் இயல்பாகவும், அண்ணாமலை யில் தீ இயல்பாகவும், காளத்தியில் வளி இயல்பாகவும், தில்லையில் வான் இயல்பாகவும் சிவபெருமான் வீற்றிருப்பதாகக் கருதி வழிபடும் வழக்கம் நிலைத்தது.

ஐம்பூதங்களிலும் அதனதன் பண்பாகத் திகழ்பவன் சிவன் என்பதை,

"மண் இலங்கு நீர் அனல் கால் வானுமாகி
மற்றவற்றின் குணமெலாமாய் நின்றாரும்" (6:59:5)

"நீள் நிலமும் அந்தீயும் நீரும் மற்றை
நெறியிலங்கு மிகு காலும் ஆகாசமும்
வாள் நிலவு தாரகையும் மண்ணும் விண்ணும்
மன்னுயிரும் என்னுயிரும் தானாம் செம்பொன்" (6:91:8)

ஆகிய பாடல்களில் அப்பர் குறிப்பிட்டுள்ளார். இறைவன் உலகமாகவும் உயிர்களாகவும் இருப்பதோடு தனித்த நிலையில், தான் ஒருவனே யாகத் திகழ்வதையும் விளக்கியுள்ளார்.

உயிர்கள் பிறவா நிலைபெறுதற்கு இறைவன் உலகிடை அவ்வவற்றின் தன்மையாக அமைந்து பேரருள் புரிதலை அப்பர் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன. உயிர்களோடு இறைவன் இரண்டறக் கலந்திருக்கும் சிவமாதல் நிலையே ஈண்டு விளக்கம் பெறுதற் குரியது.

முழுமுதல் தன்மை வாய்ந்த சிவபெருமான், உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் அமைந்து வீடுபேற்று நிலையை எய்தச் செய்தல் சிவமாதல் நிலையாகும்.

"இறைவன் ஒன்றாயும் இரண்டாயும் நில்லாமல் உயிர்களோடு பிரிப்பின்றி உடனாய் நிற்றலால் அவ்விரண்டற்ற நிலையை வடமொழியில் அத்துவிதம் என்ற சொல்லால் குறித்தனர் சான்றோர். அத்துவிதம் என்ற சொல்லுக்கு ஏகம் (ஒன்று) என ஒருசாராரும், துவிதம் (இரண்டு) என மற்றொரு சாராரும் பொருள் கொண்டனர். ஒன்றும் இரண்டும் ஆகா இரண்டற்ற தன்மை என இதற்கு உண்மைப் பொருள் கண்டார் மெய் கண்டார். இங்ஙனம் ஒன்றெனலும் ஆகாமல், இரண்டெனலும் ஆகாமல் தூய நல்லுயிர்கள் சிவத்தோடு இரண்டறக் கலந்து சிவத்தன்மையாய் அடங்கி ஒன்றாகும் வீடுபேற்றின் நிலையே சிவமாதல் என்னும் சொற்றொடரால் அறிவுறுத்தப் பெறும் சைவசித்தாந்த முடிபொருளாகும்"[13]

என்று க. வெள்ளைவாரணனார் தந்துள்ள விளக்கத்திலிருந்து சிவமாதல் நிலையின் பொருள் தன்மையினையும் அதுவே அத்துவித நிலை என்பதனையும் அறிய முடிகின்றது.

இறை, உயிர், தளை ஆகிய மூன்றும் தனித்தனிப் பொருள்களே. ஆயினும், இறைவன் ஏனைய இரண்டும் நிலைபெறுவதற்கு அவற்றோடு இணைந்து ஒன்றாய்த் திகழ்கின்றான். அவற்றை இயக்குகின்ற காலத்து வேறுபட்டுத் திகழ்கின்றான். ஆயினும் இயங்குகின்ற பொருள் களோடு அவனும் இயங்கி உடனாய்த் திகழ்கின்றான். உயிர்களிடத்து, 'அவையேயாய், தானேயாய், அவையே தானேயாய்' நிற்கும் முதல்வன் நிலையை ஒன்றாய் வேறாய், உடனாய் இருப்பதாகச் சைவ சித்தாந்தம் குறிப்பிடுகின்றது.

இறைவன் கலப்பினால் உலக உயிர்களிடை கொள்ளும் 'ஒன்றாதல்' தன்மையை, நின்ற திருத்தாண்டகப் பாடலில் அப்பர் விளக்கியுள்ளார்.

> ''இரு நிலனாய்த் தீயாகி நீரு மாகி
> இயமான னாயெறியுங் காற்றுமாகி
> அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
> ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
> பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
> பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி
> நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
> நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே'' (6:94:1)

உலக இயக்கத்திற்கு ஒன்றாதல் தன்மையே முதன்மையானது என்பதால் அதனை விளக்கும் வகையில் இந்நின்ற திருத்தாண்டகம் அமைந் துள்ளது. நிலம் முதலாகக் கூறப்பட்ட உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் முழுமுதலில் அடங்கியுள்ளமையைத் 'தானலாது உலகமில்லை' (4:40:1) என்ற தொடராலும் அவர் தெளிவுபடுத்தி யுள்ளார். மேலும் 'நிற்பனவும் நடப்பனவும்' என்னும் மறுமாற்றத் திருத்தாண்டகத்திலும் சிவன் எல்லாமாகி ஒன்றாய் இருப்பது நன்கு உணர்த்தப்பட்டுள்ளது.

இறைவன், பொருள் தன்மையால் உயிர்களிடத்து *'வேறாதல்'* நிலையாய் உள்ளமையை,

> 'விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேத
>
> திரிதரு வாயுவல்லர் செறுதியுமல்லர்
> தெளிநீரு மல்லர் தெரியில்

அரிதரு கண்ணியாளை யொருபாகமாக
வருள் காரணத்தில் வருவார்
எரியர வார மார்ப ரிமையாரு மல்ல
ரிமைப்பாரு மல்ல ரிவரே (4:8:2)

என்ற இப்பாடல் இறைவன் ஞாயிறு முதலான பலபொருள்களாகத் தோன்றி, பொருள் தன்மையால் அவற்றின் வேறாயும் இருத்தல் சுட்டப்பட்டுள்ளது. மேலும் 'மண்ணல்லை, விண்ணல்லை' (6:45:9) எனத் தொடங்கும் திருவொற்றியூர்ப் பதிகப் பாடலிலும், இறைவன் வேறாய் இருத்தல் விளக்கம் பெற்றுள்ளது.

உயிர்க்கு உயிராதல் தன்மையால் இறைவன் *'உடனாதல்'* நிலை கொள்ளும் திறத்தினை,

'விண்ணகத் தான்மிக்க வேதத்துள்ளான் விரி நீருடுத்த
மண்ணகத் தான் திருமாலகத் தான்மரு வற்கினிய
பண்ணகத் தான் பத்தர் சித்தத்து ளான்பழ நாயடியேன்
கண்ணகத் தான் மனத்தான் சென்னி யானெங் கறைக் கண்டனே''
(4:11:2:6)

என்ற பாடலில் அப்பர் உணர்த்தியுள்ளார்.

''ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே'' (6:95:3)

என்னும் தனித் திருத்தாண்டகப் பாடலிலும் உடனாயிருந்து பல்வேறு செயல்களை இறைவன் நிகழ்த்தும் பான்மையைப் போற்றியுள்ளார். இப்பாடல், இறைவனது தன்வயமுடைமையை உணர்த்துவதோடு, அவன் உயிர்களிடத்துச் செய்யும் கைமாறற்ற உதவிகளை உணர்ந்து போற்றியிருப்பது குறிப்பிடத்தக்கது. இக்கருத்தையே, மணிவாசகர், திருச்சதகத்தில்

''கோனாகி யானென தென்றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை'' (பா.15)

என்று அருளியிருப்பது ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. இங்ஙனம் அப்பர் இறையியல்புகளாகச் சுட்டியிருப்பவை, சைவ சித்தாந்த முடிபுகள் உருவாவதற்கு நிலைக்களன்களாய் இருந்துள்ளன என்பதை உணர முடிகின்றது.

## கருணைத் திறம்

சிவபெருமான் தன்னுடைய முடிவிலாற்றலாலும், பேரருளுடைமை யாலும் முழுமுதற் பரம்பொருளாய்த் திகழ்கின்றான். அவனது ஆற்றல் சார்ந்த செய்கைகள் அனைத்தும் அவனது பெருங்கருணைத் திறத்தை

யும் உள்ளடக்கியனவாகவே அமைந்துள்ளன. உலகத் தளைகளில் இருந்து உயிர்களை மீட்டுப் பிறவாமையாகிய பெருநிலைக்குக் கொண்டு செலுத்துவதை இறைவன் தன் பெருங்கருணைத் திறத்தாலேயே நிகழ்த்துகின்றான்.

"நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்
தேனாய் இன்னமுதாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானே என் வந்தெனது உள்ளம் புகுந்து அடியேற் கருள்செய்தான்
ஊனாரும் உயிர் வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே" (பா. 10)

என்று உயிர்களுக்கு எளிவந்திரங்கி ஏற்றம் காட்டிய பெற்றியைத் திருவாசகம், திருவேசறவுப் பகுதி உணர்த்தும். எனவே இறைவனின் பெருமையெல்லாம் அவனது கருணைத் திறத்திலேயே பொதிந் துள்ளது எனலாம்.

"மழுவாள் நெடியோன் தலைவன்" (மதுரை. கா. 455)

"பிறவா யாக்கைப் பெரியோன்" (சிலப். 5:169)

முதலாகச் சிவனின் பேராற்றலைப் போற்றிக் காட்டுவது பழந்தமிழ் மரபு. இம்மரபைப் போற்றி,

"உலகுக் கெல்லாம் மூர்த்தியை" (4:74:2)

"ஒப்பொருவரில்லாத ஒருவன்" (6:33:9)

"பெரியார் கட்கெல்லாம் பெரியாய்" (6:38:5)

என அப்பர் கூறியிருந்தாலும் அவனது பேரருள் திறத்தைச் சுட்டும் உளப்பாங்கே அவர் பாடல்களில் மிக்கிருப்பதை உணர முடிகின்றது.

'அடியார் தம் அல்லல் தீர்க்கும் அருமருந்து' (6:1:5)

'வாரா உலகு அருளவல்லான்' (6:38:9)

'பரவி ஏத்திச் சிவனடி வணங்குவார்க்கும் பேரருள்
அருளிச் செய்வார்' (4:48:9)

'அருளார் கருணைக் கடலாம்' (6:90:10)

என வரும் பாடற்பகுதிகள் சிவனின் கருணைத் திறத்தையே முதன்மைப்படுத்தி அமைந்துள்ளன.

சிவபெருமான், வானவர்க்கும், வாழ்த்தி வணங்குவார்க்கும் அருளியதோடு, சிலந்தி, சிற்றெலி போன்ற சிற்றுயிர்க்கும் பேரருள் புரிந்தான் என்பதை அப்பர் பாடல்கள் வியந்து போற்றியுள்ளன.

"நலந்திகழ் வாயில் நூலால் சருகிலைப் பந்தல் செய்த
*சிலந்தியை அரசதாள அருளினாய்*" (4:62:9)

என்னும் பாடற்பகுதி ஒரு சிற்றுயிர் சிவ புண்ணியம் பெற்றுக் கோச்செங்கட் சோழ நாயனாராக உயர்ந்ததைக் குறிக்கின்றது.

"நிறை மறைக்காடு தன்னில் நீண்டெரி தீபம் தன்னைக்
கறை நிறத் *தெலிதன்* மூக்குச் சுட்டிடக்கனன்று தூண்ட
நிறை கடல் மண்ணும் விண்ணும் நீண்ட*வானுலகுமெல்லாம்*
*குறைவறக்* கொடுப்பர்" (4:49:8)

என்னும் பாடலில், விளக்கு நெய்யுண்ணப் புகுந்த சிற்றெலியின் மூக்குப் பட்டதால் சுடர் ஒளி மிகுந்தமை பற்றி, மறுமையில் அச்சிற்றெலி மாவலி வேந்தனாகப் பிறக்க அருள் செய்த செய்தி சுட்டப்பட்டுள்ளது.

சிவபெருமான் முடிவிலாற்றலோடு நிகழ்த்திய அட்ட வீரட்டச் செயல்களில் பேரருள் திறமும் மேம்பட்டிருத்தலைப் பின்வரும் அப்பர் பாடல்கள் மெய்ப்பிக்கின்றன.

முப்புரம் எரித்த செயலில் சிவன் மூவர்க்கு அருள் செய்தமையைத்

"திரிபுரத்தோர் மூவர்க்குச் செம்மை செய்த தலையானை" (6:60:9)

"திரிபுரம் செற்று ஒரு மூவர்க்கு அருள் செய்தானை" (6:74:8)

என்று நாவுக்கரசர் சுட்டியுள்ளார். புத்தனும், நாரதனும் மயக்கிச் சொல்லிய உரைகளால் திரிபுரத்து அசுரர்கள் மனம் மயங்கிச் சிவபக்தியைக் கைவிட்ட நிலையிலும் சுதன்மன், சுசீலன், சுமாலி ஆகிய மூவரும் தொடர்ந்து சிவபக்தி செய்தனர். அதனால் மூவருக்கும் அருள் செய்த பெருங்கருணைத் திறம் வெளிப்படுகின்றது. சிவனருள் பெற்ற இம்மூவருள் இருவர் கோயில் காவலராகவும், மற்றவர் மணிமுழா முழக்குபவராகவும் சிவனருளால் ஆயினர் என்பதாகச் சுந்தரர் இவ்வரலாற்றை விரித்துரைத்துள்ளதும் ஈண்டு கருதத்தக்கது.

சிவபெருமான், தம் மேன்மையைப் போற்றாது வேள்வி செய்த தக்கனை அழித்த பொழுதும் அருள் செய்தார் என்பதனை அப்பர்,

"உயர்விலாத் தக்கன் தன் வேள்வியெல்லாம்
அச்சம் எழ அழித்துக் கொண்டு அருளும் செய்தார்" (6:96:9)

என்னும் பாடற் பகுதியில் விளக்கியுள்ளார். அங்கி, இந்திரன், எச்சன், புள்ளரசு, சந்திரன், சூரியன், தக்கன், திருமால், பிரமன், கூற்றுவன் ஆகியோரைத் தண்டித்ததாகவும், அவர்களுள் இந்திரன், சந்திரன், தக்கன், புள்ளரசு ஆகியோருக்கு அருள் வழங்கியதாகவும் அவர் உணர்த்தியுள்ளார். சிவபெருமான் தம்மைப் போற்றாது புறக்கணித்தவர் கட்கும் பேரருள் புரிந்த மாட்சி இதனால் அறிய முடிகின்றது.

தேவரும் அசுரரும் பாற் கடலைக் கடைந்து அமுது காண முயன்றபோது வெளிப்பட்ட நஞ்சினை உண்டு உலகைக் காத்த பேராற்றலையும் அதனூடே பொதிந்து கிடக்கும் பெருங்கருணைத் திறத்தையும், பின்வரும் அப்பரின் பாடல் வெளிப்படுத்துகின்றது.

"வடங்கெழு மலைமத் தாக வானவர் அசுரரோடு
கடைந்திட வெழுந்த நஞ்சங் கண்டு பல்தேவரஞ்சி
அடைந்து நுஞ் சரணமென்ன அருள் *பெரிதுடையராகித்*
தடங்கடல் *நஞ்சமுண்டார்*" (4:65:2)

சிவனார், தாம் நஞ்சுண்டு பிறர்க்கு அமுதீந்து பேரருள் புரிந்த செய்தியை,

"அமரர்கள், பின் அமுதுண்ண நஞ்சுண்டார்" (6:53:2)

"கடலில் விடமுண்டு அமரர்க்கு அமுதம் ஈய இசைந்தவன்" (6:64:7)

"மூவாமருந்து அமரர்க்கு அருள் புரிந்த மைந்தன்" (6:1:4)

என்னும் பாடற் பகுதிகள் உணர்த்துகின்றன.

இராவணன், தம் வலிமையைக் காட்டும் ஆணவத்தால் கயிலை மலையைத் தூக்கிய போது சிவபெருமான் தன் கால்பெருவிரலால் அழுத்த, மலையிடைச் சிக்கி வருந்தினான். சிவனருள் பெற வேண்டிச் சாம கீதம் இசைத்தான். அது கேட்டு மகிழ்ந்த சிவபெருமான், இராவணனுக்குப் பெயரும், நீண்ட வாழ்நாளும், வாளும் வழங்கி அருள் செய்தமையை அப்பர் மூன்று பதிகங்களில் முழுமையாக விளக்கியுள்ளார் (4:34; 47:59).

புறச்சமயத்தில் இருந்து வந்த தமக்கு, இறைவன் அருள் புரிந்ததைப் போற்றும் வகையில் அப்பரின் பல பாடல்கள் அமைந்துள்ளன. தமக்கு அருள்புரிந்த இறைவனை முன்னிலைப்படுத்திக் குறையிரந்து வேண்டும் நிலையிலும், இறைவனின் அருட்குணங்களை எண்ணி மகிழ்ந்து போற்றும் வகையிலும், தம் வாழ்வில் அவன் அருளால் அவ்வப்போது நிகழ்த்திய திருவருட் செயல்களை நவிலும் முறையிலும் அப்பரின் பல பதிகங்கள் அமைந்துள்ளன.

"குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார் நகை நாணாது
உழிதர் வேனைப்
பண்டமாப்படுத் தென்னைப் பால்தலையில் தெளித்துத் தன்
*பாதங்காட்டி*" (4:5:4)

"வஞ்சகப் புலையனேனை வழியறத் தொண்டிற் பூட்டி
*அஞ்சலென் றாண்டு கொண்டாய்*" (4:76:4)

"பழி வழியோடிய பாவிப் பறிதலைக் குண்டர் தங்கள்
மொழி வழியோடி முடிவேன் முடியாமைக் காத்துக் கொண்டாய்"
(4:103:4)

போன்ற பாடல்களில், சமணத்தில் இருந்து தாம் சைவம் புகுந்தமைக்குச் சிவனருளே காரணம் என்பதனை அப்பர் தெளிவுறுத்துகின்றார்.

இறைவன் உயிர்களோடு உடனாயிருந்து அவை மீண்டும் பிறவா நிலை எய்தக் காரணமாய் அமைவான். இவ்வாறு உயிர்களிடத்துத் தாமே முன்போந்து நிகழ்த்தும் கருணைத் திறத்தை,

"தேடிச் சென்று திருந்தடி *ஏத்துமின்*
*நாடி வந்தவர்* நம்மையும் *ஆட்கொள்வர்"* (5:5:5)

"பாத்திரம் சிவமென்று பணிதிரேல்
*மாத்திரைக் குள் அருளும்"* (5:10:3)

முதலான பாடற்பகுதிகளில் அப்பர் நினைந்து போற்றியுள்ளார். இங்ஙனம் சிவபெருமான் எண்ணினார்க்கும் எண்ணாதார்க்கும், போற்றினார்க்கும் போற்றாதார்க்கும், அடைந்தார்க்கும் அடையாதாருக்கும் அருள் செய்த அண்ணல் என்பதை அப்பர் பாடல்கள் புலப்படுத்தியுள்ளன.

## 5. திருவடிப் பெருமை

இறைவனின் பெருமைகள் யாவும் அவனது திருவடிகட்கே உரியன. அவை அறிவு, செயல் ஆகியவற்றின் வடிவங்களாகத் திகழ்பவை. சிவத்தின் கூறாகிய சத்தி, சிவனின் திருவடிகளைப் பற்றுக்கோடாகக் கொண்டே உலகைத் தொழிற்படுத்துகின்றது. அதனால் உயிர்களின் எண்ணம், சொல், செயல் ஆகியன இறைவனின் திருவடிகளையே நிலைக்களனாகக் கொள்ள வேண்டுமென்பது புலனாகின்றது. திருவள்ளுவரும் 'நற்றாள் தொழாஅர்', 'மாணடி சேர்ந்தார்', 'தாளை வணங்காத்தலை' என வரும் தொடர்களில் திருவடிகளையே முதன்மைப்படுத்தியுள்ளார். திருமுறை அருளாளர்களும் திருவடிப் பெருமைகளை விளக்கும் பாங்கிலேயே இறைவனின் முழுமுதல் தன்மையை வெளிப்படுத்தியுள்ளனர்.

இறைவனின் திருவடிகளையன்றித் தமக்கு வேறு பற்றுக் கோடில்லை என்றும் அவற்றை நெஞ்சில் வைத்துப் போற்றுவதால் எவ்விதக் குறையும் இல்லை என்றும், அவற்றைத் தொழுவார் நெஞ்சமே சிவன் உறையும் கோயில் என்றும் அப்பர் பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். திருஅங்கமாலைப் பதிகத்தில்,

"இறுமாந்திருப்பன் கொலோ - ஈசன்
பல்கணத் தெண்ணப் பட்டுச்

சிறுமானேந்தி தன்சேவடிக் கீழ்சென்றங்கு
இறுமாந்திருப்பன் கொலோ' (4:9:11)

என்று சிவனின் திருவடிக்கீழ் செம்மாந்து வாழ்தலுக்கு ஏங்கி அப்பர் கூறியிருப்பது கருதத்தக்கது.

அழியாத பேரின்ப வாழ்வு பெறும் உயிர்கள் இன்பச் செருக்கில் மகிழும் என்பதையும் இப்பாடல் உணர்த்துகின்றது.

இறைவனுடைய திருவடிகள் இயற்கைப் பெருநலமாகத் திகழும் என்பதனை,

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே" (5:90:1)

என்னும் பாடல் உணர்த்துகின்றது.

சிவபெருமானின் திருவடிகள் இம்மை, மறுமை, வீடுபேற்றுப் பேரின்பங்களை வழங்குவன என்பது அப்பரின் முடிபு.

"பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு *நீங்கிடும் இன்பம்வந் தெய்திடும்*
சிறப்பர் சேறையும் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே" (5:77:3)

"ஓதிய ஞானமும் ஞானப் பொருளு மொலி சிறந்த
வேதியர் வேதமும் வேள்வியுமாவன விண்ணும் மண்ணும்
சோதியுஞ் செஞ்சுடர் ஞாயிறு மொப்பன தூமதியோ
டாதியு மந்தமு மானவை யாற னடித்தலமே" (4:92:17)

இவற்றால் சிவனடிகளை மறவாமல் மனத்து வைத்தால் பிறப்பும் மூப்பும் பெரும் பசியும் பிணியும் இறப்பும் நீங்கி இன்பம் எய்தும் என்றும், மெய்யுணர்வும், இறைஞானமும், வேதப்பொருளும் வேள்விப் பயனுமாக அவை திகழ்கின்றன என்றும் அப்பர் குறிப்பிட்டுள்ளார். இச்செய்திகளை முதன்மையாகக் கொண்டு அப்பரின் நான்கு திருப்பதிகங்கள் உள்ளன.

இறைவனின் திருவடிகள் மெய்யன்பர்களுக்கு அணித்தாகவும் எளிதாகவும் அருள் தருபவை; அன்பிலார்க்குச் சேய்த்தாகவும் அரிய தாகவும் அமைபவை.

"தொடர்ந்து விடாத தொண்டர்க்கு அணியன;
தேவர்க்குச் சேயன" (4:92:3)

'உம்பர்க் கெல்லாம் எய்தற் கரியன' (4:100:2)

'உற்றார் இலார்க்கு உறுதுணையாவன' (4:192:13)

என்னும் தொடர்கள் திருவடிகளின் அருமை பெருமைகளை உணர்த்துவன.

முற்றும் அறிதலும், முழுதுணர்தலுமே இறைவனை அடையும் வழிகள். அவற்றைப் பெற உறுதுணையாய் அமைபவை திருவடிகள்.

"மாமறைகள் சொன்ன துறைதொறும் தூப்பொருளாயின" (4:100:1)

"ஆரணத்தின் வேண்டும் பொருள்கள் விளங்க நின்றாடின" (4:100:6)

என்னும் தொடர்கள் திருவடிகள் ஞானம் தரவல்லன என்பதை நவில்பவை.

உயிர்கள் வினை நீங்கினாலன்றிப் பிறவாமை நிலை அடையா; அவ் வினைகளை நீக்கும் ஆற்றலும் திருவடிகளுக்கே உள்ளன என்பதைப்,

'பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன' (4:92:1)

'கழலா வினைகள் கழற்றுவ' (4:92:19)

என்னும் தொடர்கள் உணர்த்துகின்றன.

பிறவாமையை வேண்டுவதே சிவநெறி, அதனை அளிப்பவை திருவடிகளே.

'ஏழேழ் பிறப்பும் அறுத்தன' (4:92:2)

'நீங்காப் பிறவிநிலை கெடுத்து' (4:92:19)

என்னும் தொடர்கள் பிறப்பறுக்கும் இறைவனின் பெற்றியைச் சுட்டுவன.

உயிர்கள் பிறவாமை எய்தின் வீடு எய்தலாம். அத்தகைய வீடுபேற்றை அளிப்பன திருவடிகளே.

'முத்தி கொடுப்பன' (4:92:1)

'தொண்டரைச் செந்நெறிக்கு ஏற்றுந் தகையன' (4:100:7)

என்னும் தொடர்கள் இவற்றை உணர்த்தும்.

இங்ஙனம் அப்பர் பாடல்கள், இறைவனின் திருவடித் திறமின்றிச் சிவத்துவ நிலை பெறவியலா என்னும் முறையில், திருவடிப் பெருமையை உணர்த்தியுள்ளன.

## இ. வழிபாட்டு நிலைகள்

சமய நெறியில், இறைவனை அடைவதற்குரிய நெறிகளில் வழிபாடு இன்றியமையாதது. இறைவனை நெஞ்சார நினைப்பதற்கு

அவனது திருக்கோலங்களும், அவன் அக்கோலங்களோடு எழுந்தருளி யிருக்கும் திருக்கோவில்களும் முன்னின்று உறுதுணை புரிகின்றன. மேலும் இறைவனின் திருக்கோலங்களை மனக்கோயில்களில் இருத்தியும், மெய்யன்பர்களை நடமாடும் தெய்வங்களாகப் போற்றியும் வழிபாடு செய்வது பரிபக்குவ நிலையில் மேற்கொள்ளும் செயல்களாகும். இவ்வழிபாட்டு நிலைகள் அப்பர் பாடல்களில் பரவலாக இடம் பெற்றுள்ளன.

### 1. திருக்கோலங்கள்

எண்ணற்ற உயிர்களும், உலகப் பொருட்களும் இறைவனின் திருமேனிகளாகக் கருதப்படுகின்றன. இவற்றை இயக்குவதற்கு இறைவன் வேறோர் உடம்பு கொள்வதில்லை. உயிர் உடம்புக்குள் இருந்து இயக்குவதைப் போல இவற்றை உள்ளிருந்து இயக்கும் ஆற்றல் இறைவனிடம் உள்ளது. ஆயினும் இறைவன் உயிர்களின் மனம், மொழி, மெய்களுக்கு அகப்படும் வகையில் பல அருள் திருமேனி களைத் தானே விரும்பி அமைத்துக் கொள்கின்றான். இதனை,

> ''அரிதரு கண்ணியாளை ஒருபாகமாக
> அருள் காரணத்தில் வருவார்'' (4:8:2)

என்று அப்பர் உணர்த்தியுள்ளார்.

### அருவம்

இறைவன் திருவுருவை அருவம், அருவுருவம், உருவம் எனப் பாகுபடுத்தி விளக்குவர். அருவநிலையில், இறைவன் உயிருக்கு உயிராய் எள்ளுக்குள் எண்ணெய் போல் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பான்.

> 'மண்ணல்லை விண்ணல்லை வலயமல்லை
> மலையல்லை கடலல்லை வாயுவல்லை
> எண்ணல்லை எழுத்தல்லை எரியுமல்லை
> இரவல்லை பகலல்லை யாவுமல்லை
> பெண்ணல்லை ஆணல்லை பேடுமல்லை
> பிறிதல்லை யானையும் பெரியை நீயே' (6:45:9)

இப்பாடலில் இறைவனின் அருவ நிலை தெளிவுறுத்தப்பட்டுள்ளது.

### அருவுருவம்

அருவுருவ நிலை என்பது, ஐம்பூதங்களாகவும், ஞாயிறாகவும், திங்களாகவும், உயிராகவும் ஆன எட்டுருவாய்த் திகழ்வது.

"இரவியும் மதியும் விண்ணும் இருநிலம் புனலும் காற்றும்
உரகமார் பவனமெட்டும் திசைஒளி உருவமானாய்" (4:63:7)

என்ற பாடற்பகுதி எட்டு அருவுருவங்களைச் சுட்டியுள்ளது. கோவில் களில் வழிபாடு செய்யப்பெறும் இலிங்கத் திருமேனி அருவுருவமாகக் கொள்ளத்தக்கது.

"ஆகமத்தின்படி மூல மூர்த்தி சிவலிங்கமே. புராண அடிப்படையில் தோன்றி வழிபாட்டுக் குரியவாகக் கருதப்படும் மூர்த்தங்கள் அனைத்தும் இலிங்கத்தில் இருந்து தோன்றினவே. இலிங்கத்தினின்றும் தோன்றிய வடிவங்கள் அறுபத்து நான்கு.......இவ்வடிவங்களைச் சுருக்கி இருபத்தைந்து மூர்த்தமாகக் 'காரணம்' என்ற ஆகமம் கூறிற்று..........இத்திருக்கோலங்கள் பலவும் புராணக் கால்வழியே வந்தனவாயினும் இவற்றிற்கெல்லாம் மூலமூர்த்தியாக உள்ள சிவலிங்கமே பிரதிட்டிக்கப்பெற்று வழிபடத்தக்க சிறப்பான மூர்த்தமாகக் கருதப்படுகின்றது."[14]

என்று ப. அருணாசலம் குறிப்பிடுவர்.

அப்பர் பாடிய 'இலிங்க புராணத் திருக் குறுந்தொகை'யில் 'சொக்கணைந்த சுடரொளி வண்ணன்', 'ஒளிநிறவண்ணன்', 'வெய்ய அழல் நிற வண்ணன்', 'எரிவண்ணன்' எனப் பாடல்தோறும் சிவனின் தீ வண்ணத்தைக் குறித்ததோடு,

"செங்கணானும் பிரமனும் தம்முளே
எங்கும் தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற்றேன் என்று இலிங்கத்தே தோன்றினான்" (5:95:11)

என்று இலிங்கத்தையும் சுட்டியுள்ளார்.

'அடையாளம்', 'குறி' எனப் பொருள்படுவது இலிங்கம். சிவலிங்கம் என்பது சிவன் தோன்றித் திகழும் வடிவம். இப்பொருளை,

"குறிகளும் அடையாளமும் கோவிலும்
நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்" (5:90:6)

என்ற பாடற் பகுதியில் அப்பர் எடுத்தாண்டுள்ளார்.

**உருவம்**

உலகுய்ய இறைவன் உருவத் திருமேனி கொண்டு அருளிய கோலங்கள் உருவவகையின. 'நானாவித உருவாய் நமையாள்வான்' (1:9:5) என்றார் ஞானசம்பந்தர். ஆகமங்கள் கூறும் இருபத்தைந்து வடிவங்களும் உருவக் கோலங்களாகக் கொள்ளத்தக்கவை. இவற்றில் சிவபெருமான் அடியவர்களை ஆட்கொள்வதற்குக் கொண்ட வடிவங் களும், உலகம் வாழ அருட்செயல்கள் செய்யக் கொண்ட வடிவங்களும் அடங்கும்.

பழந்தமிழ் இலக்கியங்களில், முப்புரம் எரித்தமை, நீலமணி மிடற்றுடைமை, திங்கள் முடிசூடியமை, இடபக் கொடி கொண்டமை, உமையொருபாகனாய் அமைந்தமை, நெற்றிக்கண் பெற்றமை போன்ற சிவக் கோலங்கள் இடம் பெற்றுள்ளன. இக்கோலங்கள் அனைத்தும் ஆகமங்களில் தனித்தனி வடிவங்களாக நுவலப் பெற்றுள்ளன.

அப்பர் பாடல்களில் ஆகமங்கள் கூறும் பல்வேறு கோலங்களும் அமைந்து அழகுபயக்கின்றன.

"மால்விடை இட்டமா உகந்தேறும் இறைவன்" (5:6:7)

இஃது ஏற்றூர்தியில் அமர்ந்த கோலம்.

"கொம்பு கொப்புளித்த திங்கள் கோணல் வெண்பிறையும் சூடி" (4:24:2)

இது பிறைசூடிய கோலம்.

"அறம் காட்டி அந்தணர்க்கன்று ஆலநிழல் அறம்
அருளிச் செய்த அரனார்" (6:2:3)

இஃது ஆலின் கீழ் அறங்கூறிய கோலம்.

"சமரமிகு சலந்தரன் போர் வேண்டினானைச்
சக்கரத்தால் பிளப்பித்த சதுரர்" (6:53:2)

இது சலந்தரனை அழித்த சக்கரக் கோலம்.

"எண்ணி ஆயிரம் பூக்கொண்டு ஆறுடைச் சடையினானை
அர்ச்சித்தான் அடியினுக்கீழ் வேறுமோர் பூக்குறைய
மெய்ம்மலர்க் கண்ணை மிண்ட கூறும் ஓராழி ஈந்தார்" (4:49:5)

இது மாலுக்குச் சக்கரம் ஈந்த கோலம்.

"அந்தகனை அயிற் சூலத்து அழுத்திக் கொண்டார்" (6:96:5)

இஃது அந்தகனை அழித்த கோலம்.

"அனல்பாய நீறு புரமாம் மலைசிலை கையில் ஒல்க
வளைவித்த வள்ளல்" (4:14:5)

இது முப்புரம் எரித்த கோலம்.

"கயல்பாயக் கடுங்கலுழி கங்கை நங்கை
புயல் பாயச் சடைவிரித்த பொற்பு" (6:18:5)

இது கங்கையைத் தலையில் தாங்கிய கோலம்.

"உந்தி நின்றார் உன்றன் ஓலக்கச் சூளைகள் வாய்தல் பற்றித்
துன்றி நின்றார் தொல்லை வானவ ரீட்டம் பணியறிவான்
வந்து நின்றார் அயனுந் திருமாலும்" (4:99:10)

இது கயிலையில் வீற்றிருக்கும் திருவோலக்கக் கோலம்.

"அயனவனும் மாலவனும் அறியாவண்ணம்
ஆரலழாய் நீண்டுகந்த அண்ணல்" (6:23:10)

இஃது அழலுருக் கோலம்.

"கோன் நாரணன் அங்கம் தாள் மேற்கொண்டு
கொழுமலரோன் தன் சிரத்தைக் கையிலேந்தி
கானார் களிற்றுரிவைப் போர்வை மூடி
கங்காள வேடராய்" (6:47:6)

இஃது எலும்பணிந்த கங்காளக் கோலம்.

"காமன் எழிலழிய எரியுமிழ்ந்த இமையா நெற்றிக் கண்ணவன்'
(6:60:3)

இது காமனைக்காய்ந்த கோலம்.

"சூலமும் பாசமும் கொண்டு தொடர்ந்தடர்ந் தோடிவந்த
காலனைக் காய்ந்த பிரான்" (4:107:6)

இது காலனை உதைத்த கோலம்.

"பண்டமரர் கொண்டுவந்த வேள்வியெல்லாம்
பாழ்படுத்துத் தலையறுத்துப்பல்கண் கொண்ட
கண்டகன்" (6:90:3)

இது தக்கனைத்தடிந்த வீரக்கோலம்.

"தீக்கூரும் திருமேனி ஒருபால் மற்றையொருபால்
அரிவுருவம் திகழ்ந்த செல்வர்" (6:58:3)

இது மாலொரு பாகர் கோலம்.

"அருச்சுனற்கு அம்பும் வில்லும் துடியுடை வேடராகித்
தூய மந்திரங்கள் சொல்லிக் கொடி நெடுந்தேர்
கொடுத்தார்" (4:50:1)

இது விசயனுக்கு அருளிய பாசுபதக் கோலம்.

அப்பர் பாடல்களில் அழகு செய்யும் இத்திருக்கோலங்கள் சிவன் செய்த செயல்களின் சொல்லுருவங்களாகத் திகழ்கின்றன. ஆயினும் அப்பர் காலத்தில் இவை வழிபடு திருமேனிகளாகத் திகழ்ந்தன என்று கொள்வதற்கில்லை.

### மாலொரு பாகன்

சிவத்திருக்கோலங்களில், கங்காளர், மச்ச சங்காரர், கூர்ம சங்காரர், வராக சங்காரர் ஆகிய திருமால் அவதாரக் கோலங்கள் இடம்பெற்றுள்ளன. மச்சமும், கூர்மமும், வராகமும், வாமனமும்

திருமாலின் அவதாரங்களாகக் கருதப்படுபவை. இவ்வவதார வடிவங் களை வென்றதாகக் கூறுவது சிவனுக்கு ஏற்றத்தைத் தருகின்றது. ஆயினும், உமையை ஒரு பாகத்திற்கொண்ட உமையொரு பாகன் கோலம் போலத் திருமாலையும் ஒரு பாகத்திற்கொண்ட மாலொரு பாகன் (அரிஅர்த்த மூர்த்தி) கோலம்,

"திருமாலோர் பாகத்தான் காண்" (6:76:1)

"மறிகடல் வண்ணன் பாகர்" (4:62:8)

என்று அப்பர் பாடல்களில் பயின்றுள்ளது. இஃது அரி அரன் இருவரை யும் ஒன்றுபடுத்திக் கூறும் சிறப்புடையதாக இருப்பது கருதத்தக்கது.

### சோமாஸ்கந்தர்

இக்கோலம் சிவன் உமையோடும் கந்தனோடும் திகழும் திருக்கோலம். சிவன் வலமும், உமை இடமும், கந்தன் நடுவுமாக இருக்கும் இக்கோலம் தமிழ்நாட்டில் ஏழு இடங்களில் உள்ளதென்பர்.[15] திருவாரூர், திருமறைக்காடு, திருநள்ளாறு, திருவாய்மூர், திருநாகைக்காரோணம், திருக்கோளிலி, திருக்காறாயில் ஆகிய இவ்வேழு தலங்களில், முதல் ஆறு இடங்களையும் அப்பர் முப்பத்தாறு பதிகங்களில் பாடியுள்ளார். ஆயினும் இக்கோலத்தை ஓரிடத்தில் கூட அவர் குறிப்பிடவில்லை.

அப்பர் பாடல்களில் வரும் முருகனைப் பற்றிய செய்திகள் பல உள. முருகனின் தாதை என்று பன்னிரண்டு இடங்களிலும் சிவன் மகன் என நான்கு இடங்களிலும், உமை மகன் என ஓரிடத்திலும், வள்ளி மணாளன் என ஈரிடத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளன. சிவன், உமை, முருகன் ஆகியோரை ஒருங்கு கூறும் வகையிலும் பாடல்கள் உள்ளன.

"நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்" (5:19:9)

"செல்வியைப் பாகங் கொண்டார், சேந்தனை
மகனாக் கொண்டார்" (4:43:8)

இவ்விரு தொடர்களிலும் முற்கூறிய மூவரும் இடம்பெற்றிருந் தாலும் சோமாஸ்கந்தர் கோலம் புலப்படவில்லை. முதல் தொடரில் கடம்பனைப் பெற்றவளைப் பாகத்தில் உடையவன் என்னும் செய்தியும், இரண்டாம் தொடரில் செல்வியைப் பாகமாகவும், சேந்தனை மகனாகவும் கொண்ட செய்தியுமே இடம்பெற்றுள்ளன. எனவே இத்தொடர்களில் சோமாஸ்கந்தர் கோலம் உள்ளதாகக் கொள்வதற்கில்லை.

### பிச்சாடனர்

பிச்சைக்குத் திரிபவர் பிச்சாடனர். சிவன் இக்கோலம் கொண்டு தாருகவன முனிவர்களைத் திருத்தினார். மீமாஞ்சை மதம் புகுந்த

அம்முனிவர்களை மனம் மாற்றிச் சிவஞானம் பெறும்படிச் செய்தார் என்பது கதை மரபு.

முனிவர்களை மயக்கும்பொருட்டுத் திருமால் மோகினி வடிவத்திலும், முனிபத்தினியரை மயக்கும் பொருட்டுச்சிவன் பிச்சாடனர் வடிவத்திலும் சென்றதாகக் கூறும் வழக்குண்டு.

"உன்மத்தக மலர் சூடி உலகம் தொழச் சுடலைப்
பல்மத்தகம் கொண்டு பல்கடை தோறும் பலிதிரிவான்" (4:113:6)

"என்பு பூண்டு எருதுஏறி இளம் பிறை
மின்புரிந்த சடைமேல் விளங்கவே
நண்பகல் பலிதேரும்" (5:55:8)

"கழலொலியும் கைவளையும் ஆர்ப்ப ஆர்ப்ப
கடைதோறும் இடுபிச்சைக்கென்று செல்லும்" (6:68:6)

"நறையார்ந்த விடையேறி நீறுபூசி நாகம் கச்சு
அரைக்கு ஆர்த்து ஓர் தலைகையேந்தி" (6:45:4)

அப்பர் கூறும் இப்பாடற்பகுதிகளில் இருந்து சிவபெருமான் கோவணம் அணிந்து, வெண்ணீறு பூசி, உன்மத்தம் சூடி, பூணூல் பூண்டு, மூவிலைச் சூலம் தாங்கி, தலை ஓட்டுப் பிச்சைப் பாத்திரம் ஏந்திப் பிச்சாடனாராகப் பலி தேர்ந்தமையை அறிய முடிகின்றது.

அப்பர் பாடிய அகப்பாடல்களில் இக்கோலமே முதன்மை பெற்றுள்ளது. காதற்பொருளைப் பாடப்பொருத்தமாக இருப்பதுபற்றி அவர் இக்கோலத்தையே எடுத்தாண்டுள்ளார். அவருடைய அகப்பாடல்கள் பெண்பாற் கூற்றாகவே அமைந்திருப்பதால் இதனை விளக்கிப் பாடும் வாய்ப்பு மிகுந்திருக்கிறது.

தாருக வனத்து முனிவர்கள் சிவனை அழிக்கச் செய்த வேள்வியில் தோன்றிய புலி, மழு, மான், பூதங்கள், பாம்புகள், அக்கினி, மந்திரம் ஆகியவற்றைச் சிவன் தம் உடைமைகளாக ஆக்கிக் கொண்டார். ஆணவமல வடிவமாகத் தோன்றிய முயலகனைக் காலால் மிதித்து ஐந்தொழில் ஆடல் புரிந்தார்.

"புலித்தோல் உடையாப் புகுந்து நின்றார்." (6:35:4)

"மழுவாள் ஏந்தி பலியுங் கொள்ளார்" (6:35:6)

"ஐந்தலைய மாநாகம் அரையில் சார்த்தி" (6:58:5)

"பக்கம் பூதங்கள் பாடல் பலி கொள்வான்" (5:29:10)

"அனல் ஒரு கையது ஏந்தி" (6:58:5)

என்னும் பாடற்பகுதிகள், வேள்வியில் இருந்து விளைந்த அழிவுச் சக்திகளை அழித்த சிவனின் பேராற்றலைச் சுட்டுகின்றன.

"பலிகொண்டு ஆயிழையார் அன்பும் கொண்டார்" (6:96:2)

"நிரைவளையார் பலிபெய்ய நிறையுங் கொண்டு" (6:13:8)

"பலிகொண்டார் வளையுங் கொண்டார்" (6:96:6)

"வாரடங்கு வனமுலையார் மையாகி வந்திட்ட பலிகொண்டார்" (6:96:6)

என வரும் காட்சிகளில் இக்கோலம் மகளிரை மயக்கும் பாங்கினதாகத் தோற்றமளிக்கின்றது. உயிர்கள் யாவும் சிவக்கோலத்தில் மயங்கி அவன் வயப்படவேண்டும் என்னும் நோக்கில் அப்பர் பாடல்களில் இக்கோலம் பெரும்பங்கு கொண்டுள்ளது என்று அறிய முடிகின்றது.

## ஆடல் வல்லான்

தில்லைச் சிற்றம்பலத்து ஆடல் வல்லானின் கூத்துக்களில் ஈடுபட்டு மனம் நெகிழ்ந்து பாடியவர்களில் அப்பர் குறிப்பிடத்தக்கவர்.

அப்பர் தாம் பாடிய தில்லைத் திருப்பதிகங்களில் எட்டிலும் ஆடல் வல்லானின் கூத்துத் திறத்தைப் போற்றியுள்ளார். அமைதியோடும், புன்முறுவலோடும் எதிர்நிற்பாரை உசாவும் குறிப்போடும் திகழும் இக்கோலத்தின் தன்மை குறிப்பிடத்தக்கது.

"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற்குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்தபொற் பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே" (4:81:4)

என்ற பாடலில் இறைவனது ஆடலைக் காண மீண்டும் மனிதனாகப் பிறக்க வேண்டும் என்ற விருப்பம் வெளிப்பட்டுள்ளது. குனித்த புருவமும், குமிண் சிரிப்பு, எடுத்த பொற்பாதம் போன்ற சொல்லடைகள் ஆடல்வல்லானை உயிரோவியமாகக் காட்டுகின்றன. இதில் மனங் கனிந்து பேரின்ப வெள்ளத்தில் திளைத்த அப்பர், உலகோரை விளித்துச் சிவனின் ஆடல் காண வற்புறுத்துகின்றார்.

தில்லைச் சிற்றம்பலத்து ஆடற்கோலத்தில் சிவபெருமான் 'என்று வந்தாய்' என்னும் திருக்குறிப்பை வெளிப்படுத்தியதாக உணர்ந்து அப்பர் மனம் மகிழ்கின்றார். அதனால் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக என்னும் உணர்வோடு 'உந்தமக்கு ஊன மில்லை'. 'ஒன்றியிருந்து நினைமின்', 'சென்று தொழுமின்' என்று உலக மாந்தரைப் பணிக்கின்றார். (4:81:2)

"கருமானின் உரிஅதளே உடையா வீக்கிக்
கனை கழல்கள் கலந்தொலிப்ப அனல் கையேந்தி
வருமானத் திரள் தோள்கள் மட்டித்து ஆட
வளர்மதியம் சடைக்கு அணிந்து மான்நேர் நோக்கி

*அருமான வாள் முகத்தாள் அமர்ந்து காண*

*அமரர் கணம் முடி வணங்க ஆடுகின்ற பெருமான்"* (6:1:3)

என்ற பாடல், *திருக்கூத்துக் காட்சியைத்* தெளிவுறக் காட்டியுள்ளது. இவ்வாடல், ஐந்தொழில் ஆடலாகத் திகழ்வது என்று கூறுவர். இக்கோலத்திற்கேற்பவே உலகம் இயங்குகின்றது என்பதால் இஃது 'ஆனந்த தாண்டவம்' என்று போற்றப்படுகின்றது.

வெண்மதியும், கொன்றையும் மத்த மலரும் சூடிக் கங்கை தங்கிய *தலைக்கோலமும்*, செய்ய நிறமும், நீண்ட புரியமுடைய, ஒளிமிக்க *சடைக்கோலமும்*, குனித்த புருவமும், முக்கண் நோக்கும், வெண் குழைகளும், கொவ்வைச் செவ்வாயும், முறுவலிப்பும் கொண்ட *முகக்கோலமும்,* எரியின் விளக்கொத்த நீலமணி மிடறும், திண்ணிய எண்தோள்களும், மழு, துடி, அனல் ஏந்திய கைகளும், மதகளிறும், வெம்புலியும் உரித்து உடுத்த தோலாடையும், பாம்புக் கச்சையும் பொருந்திய *உடற்கோலமும்,* கழலணிந்த செய்ய *திருவடிக்கோலமும்* தாங்கி ஆடல் வல்லான் கூத்து நிகழ்த்தி யதைத் தில்லை திருப்பதிகங்கள் விளக்கியுள்ளன.

உமை அருகிருந்து நோக்க, பூதகணங்கள் கொட்டியும் பாணியும் கொண்டு பண்ணோடு பாடல் இசைக்க, அமரர் கூட்டம் வணங்கி யிருக்க, மண்ணவர்கள் மகிழ்ந்து காண, நிறைந்த அம்பலத்து இரவும் பகலுமாகத் தூக்கிய திருவடியோடு ஆடல் புரிந்ததை அப்பர் வியந்து பல பாடல்களில் போற்றியுள்ளார்.

கோயில் திருவிருத்தப் பதிகத்தில் திருவடி, உடுத்ததுகில், உந்தியின் மேல் அசைத்த கச்சின் அழகு, இலங்கும் ஏனத்து எயிறு, அனங்கனைத் தீ விழித்த நெற்றிக்கண், விளங்கிய தூ மத்த மலர், அரக்கனை நெருக்கி மிதித்த விரல் ஆகிய அழகு நலன்களைக் கொண்ட சிற்றம்பலவனின் ஆடல் கண்ட கண்களைக் கொண்டு காணக்கூடியது வேறொன்றில்லை என்று கூறி ஆடல் வல்லானின் ஆடற் பெருமையை அப்பர் தெளிவுறுத்தியுள்ளார் (4.80).

தில்லை ஆடலைப் பாடிய அப்பர், ஆரூர், ஆலங்காடு, கச்சி, கழுமலம், குடந்தை, குற்றாலம், குறுக்கை, நல்லூர், நள்ளாறு, நெய்த்தானம், வீழிமிழலை ஆகிய பிற திருத்தலங்களிலும் இவ்வாடற்சிறப்பை நினைந்து நெகிழ்ந்து பாடியுள்ளார்.

ஆரூரில், கொடு கொட்டி ஆடியதாகவும் (5:7:1) கச்சியில் ஏகம்பனின் ஆடல் கண்டகால் உலகம் உய்ந்ததாகவும் (4:44:8) காட்டில் காளி காண ஆடியதாகவும் (5:68:8) நல்லூரில் விண்ணோர்

தொழ ஆடலும் பாடலும் நிகழ்த்தியதாகவும் (4:97:5) அப்பர் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

சிவன் ஆடியனவாகக் கொடு கொட்டி, பாண்டரங்கம் ஆகிய இரண்டையும் சிலப்பதிகாரம் (6:30-45) குறிப்பிடும். இவற்றில் பாண்டரங்கம் பற்றிக் குறிப்பாகவும் (6:73:7) கொடுகொட்டியை விளக்கமாகவும் (5:7:1) அப்பர் கூறியுள்ளார்.

காட்டில் காளியொடு ஆடிய ஆடலை

'கபாலம் கைமான் மறி இட்டமாய் இடுகாட்டு எரியாடுவான்' (5:2:3)

'காளிவெங்கோபம் பங்கப்படுப்பான் செய்தற்கரிய நடனம்' (4:100:2)

'வேர்த்து ஆடும் காளி தன்விசை தீர்கென்று கூத்தாடி' (5:22:2)

'மலைகளும் நீருமெல்லாம் கரிகாட்டில் ஆட்டுகந்தீர்' (6:47:9)

ஆகிய பாடற்பகுதிகள் உணர்த்துகின்றன.

"பாடும் பறண்டையும் மொந்தையும் ஆர்ப்ப பரந்து பல்பேய்
கூடி முழவக் குவிகவிழ் கொட்ட குறுநரிகள்
நீடும் குழல் செய்ய வையம் நெளிய நிணப்பிணக்காட்டு
ஆடும் திருவடி" (4:92:9)

என்று சிவன் காட்டில் ஆடியதை ஐயாற்றுப் பதிகத்தில் அப்பர் குறிப்பிட்டுள்ளார்.

தாரகனை அழித்த பின்பும், திரபுரம் எரித்த பின்பும் அவ்வெற்றிக் களிப்போடு ஆடிய ஆடலை,

"ஓடிய தாரகன் தன் உடலம் பிளந்தும் ஒழியாத கோபம் ஒழிய
ஆடிய மாநடம்" (4:14:4)

"ஆயிரம் அசுரர் வாழும் அணிமதில் மூன்றும் வேவ
ஆயிரம் தோளும் மட்டித்து ஆடிய அசைவு தீர
ஆயிரம் அடியும் வைத்த அடிகள்" (4:53:10)

என்னும் பாடற்பகுதிகள் சுட்டுகின்றன.

### அம்மையப்பர்

உலகம், ஆணும் பெண்ணும் கலந்த தன்மையது. மக்களின் வழிபாட்டுணர்விலும் இத்தன்மை வேரூன்றித் திகழ்ந்தது. கொற்றவை பழந்தமிழ் இலக்கியத்தில் பழையோள், முதியோள் எனக் குறிப்பிடப் பெற்றாள். கொற்றவை சக்தியாகிச் சிவத்தில் ஒன்றிணைந்ததைச் சைவ நெறி சுட்டுகின்றது.

'இரண்டுமாம்' அவர்க்கு உள்ளன கோலங்கள்' (5:89:2)

என்றார் நாவுக்கரசர். சிவம், சக்தி எனக் கோலம் இரண்டாயினும் வடிவம் ஒன்றாகியதை அம்மையப்பர் திருக்கோலம் காட்டுகின்றது. 'எத்திறம் நின்றான் ஈசன், அத்திறம் அவளும் நிற்பாள்' என்ற சிவதத்துவம், சிவன் என்ற எண்ண வடிவத்தின் செயல் வடிவமாகச் சக்தியைக் குறிப்பிடுகின்றது.

அனாதியாய் என்றும் உள்ளதாய் இருக்கும் சிவம், 'சத்து' ஆகும். ஞானமயமாய் இருக்கும் சத்தி 'சித்து' ஆகும். இவ்விரண்டும் பொருந்தியுள்ள, 'சத்சித்தை' விளக்குவதே 'அர்த்தநாரி' எனப்படும் 'அம்மையப்பர்' வடிவமாகும். சிவனைப் பாடிய பலரும் சத்தியைத் தனியாகப் பாடாமல் அம்மையப்பர் வடிவமாகவே பாடியுள்ளார்.

"புதுவிரி பொன்செய்ஓலை ஒரு காதொர் காது
சுரிசங்கம் நின்று புரள
விதி விதி வேத கீதம் ஒருபாகம் ஓத,
ஒரு பாகம் மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்று சடைபாகம் மாதர்
குழல் பாகமாக வருவார்,
இது அவர் வண்ண வண்ணம் இயல்வண்ண வண்ணம்
எழில் வண்ண வண்ணம் இயல்பே" (4:8:10)

இப்பாடலில் ஒருடலில் ஆண்மை பெண்மை இரண்டின் இயல்பு களும் திகழ்வதை அப்பர் அழகுறப் பாடியுள்ளார்.

அப்பர், ஆனை முகனையும், ஆறுமுகனையும் மகன்மை முறையில் சுட்டிப் பாடினாற் போல் உமையம்மையைத் துணைவி என்ற முறையில் சுட்டிப் பாடி வேறுபடுத்தி விடாமல் சிவனொடு ஒன்றுபடுத்தியே பாடியுள்ளார்.

"கல்லார்ந்த மலைமகளும் நீயுமெல்லாங்
கரிகாட்டிலாட்டுகந்தீர் கருதீராகில்
எல்லாருமென் தன்னையிகழ்வர்" (6:47:9)

இப்பாடற் பகுதியில் மலைமகளும் நீயும் என்று இருவரையும் முன்னிலைப் படுத்திக் 'கருதீராகில்', நான் எல்லாராலும் இகழப் படுவேன் என்று அப்பர் கூறியுள்ளார். இதனால் அப்பனையேயன்றி அம்மையையும் சாத்துவகையில் வேண்டுதல் பெறப்பட்டது. இங்ஙனம் அப்பர் பாக்கள் முழுமையும் நோக்கும்போது சத்சித்தாகிய அம்மையப்பரையே அவர் பெரிதும் போற்றிப் பாடியிருப்பதை அறிய முடிகின்றது.

## 2. திருக்கோவில்கள்

இறைவனின் உருவத் திருமேனிகளை இருத்தி வழிபடும் இடங்கள் திருக்கோவில்கள். சமய நிலையங்களாகிய கோவில்கள் அன்றைய சமூகப் பணி மன்றங்களாகவும் தொண்டாற்றியுள்ளன. தனி மனித நிலையிலிருந்து ஒருவரைப் பொது மனித நிலைக்கு மாற்றும் பயிற்சி நிலையமாகவும், சமூகப் பண்பாடுகளைக் கற்பிக்கும் இயக்கமாகவும் கோவில்கள் திகழ்வதை அப்பர் உணர்ந்தார். அது பற்றியே 'திருக்கோவில் இல்லாத திருவில் ஊர்' எனத்தொடங்கும் தாண்டகப் பாடலில் 'அஃது ஊரல்ல அடவி காடே' என்று மனம் வருந்திக் கூறினார். மேலும்,

"ஒரு காலும் திருக்கோவில் சூழாராகில்......
அளியற்றார், பிறந்தவாறேதோ என்னில்
பெருநோய்கள் மிக நலியப் பெயர்த்தும் செத்தும்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே" (6:95:6)

என்னும் பாடற்பகுதியில் திருக்கோவில் வலம் வராதவர் படும் துன்பங்களைத் தொகுத்துரைத்துக் கோவிலை வலம்வர வழி காட்டியுள்ளார்.

கோவில்கள் இறையுணர்வை ஊட்டி வளர்ப்பவை; ஊர்ப் பொதுப்பணிகளில் ஈடுபடும் உணர்வை விளைப்பவை என்பதை அப்பர் உணர்ந்து அத்திருக்கோவில் வழிபாட்டை வற்புறுத்தியுள்ளார்.

அப்பர் தலப்பயணம் செய்து நூற்று இருபத்தைந்து கோவில் களைக் கண்டு வழிப்பட்டுள்ளார். ஒரு தலம் பற்றிப் பாடும்போது, பிற தலங்களையும் இணைத்துப் பாடியிருப்பதைச் சில பதிகங்களில் அறிய முடிகின்றது.[17] ஆறாம் திருமுறையில் உள்ள சேத்திரக்கோவை, அடைவுத் திருத்தாண்டகம், பலவகைத் திருத்தாண்டகம் ஆகியன கோவில் அடைவு முறையில் அமைந்துள்ளன.

கோவிலையே, இறைவடிவமாகக் கொண்டு வழிபட வேண்டும் என்பதைச் சிவஞானபோதத்தில் "ஆலயம் தானும் அரனெனத் தொழுமே" (நூ. 12) என்று மெய்கண்டார் குறிப்பிட்டுள்ளார். உயிர்களின் பொருட்டு இறைவன் எழுந்தருளி வீற்றிருக்கும் இடமாகத் திருக்கோவிலைக் கருதி அதனை உயர்வாகவும், நிலைத்த வகை யிலும் எழுப்பினர்.

"ஆயபதி தான் அருட் சிவலிங்கமாம்
ஆயபசுவும் அடலேறு என நிற்கும்
ஆய பலிபீடம் ஆகும் நற்பாசமாம்
ஆய அரநிலை ஆய்ந்து கொள்வார்கட்கே" (பா. 2417)

என்னும் திருமந்திரம் முப்பொருள் உண்மையைக் கோவிலில் பொருத்திக் கூறும் முறையைச் சுட்டியுள்ளது.

'சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மானு'க்கு ஊர்தோறும் வேறு வேறு பெயர்கள் இருப்பினும் சில ஊர்களில், ஊரின் பெயரையே இறைவன் பெயராக வழங்கும் வழக்குண்மையை அப்பர் பாடல்கள் தெரிவிக்கின்றன.

"கருங்களிற்றைக் *காளத்தியைக்* கருதுவார்" (6:80:8)

"பாம்பணையில் பள்ளியானும் அயனும் பரவிக்காணா
*குடமூக்கே*" (6:93:8)

'*மணஞ்சேரி* அருள் எனக் கொடுத்தனன் கொற்றவாளொடு
நாமமே" (5:87:10)

"ஆற்றவும் அருள்செய்யும் *வாட்போக்கி* பால் ஏற்றுமின்
விளக்கை (5:86:4)

இப்பகுதிகள் ஊர்ப் பெயரே கடவுட் பெயராக அமைந்தமையை உணர்த்தும்.

ஆறாம் திருமுறைகளில் உள்ள, பலவகைத் திருத் தாண்டகம் இறைவன் உறையும் ஊர்ப் பெயர்களைச் சொல்லுவதால் உண்டாகும் பயன்களைக் குறிப்பிட்டுள்ளது.

"பூந்துருத்தி பூந்துருத்தி என்பீராகில்
பொல்லாப் புலால் துருத்தி போக்கலாமே' (6:93:1)

என முதற் பாடல் தொடங்கி ஒன்பது பாடல் வரை ஒன்பது ஊர்களை அப்பர் குறித்துள்ளார். பூந்துருத்தி, நெய்த்தானம், ஐயாறு, பழனம், சோற்றுத்துறை, வலஞ்சுழி, கண்டியூர், குடமூக்கு, வெண்காடு ஆகிய ஒன்பது தலங்களுக்கும் முப்பத்தைந்து திருப்பதிகங்களைப் பாடிய அப்பர், இப்பலவகைத் தாண்டகத்தில் தம் நெஞ்சில் நிலைத்த தலங்களை நினைவு கூர்ந்து போற்றியுள்ளார்.

எண்ணம், சொல், செயல் மூன்றாலும் இறைவனை வழிபடுதல் போன்றே கோவில்களையும் நெஞ்சால் நினைத்தும், வாயாற் சொல்லி யும், யாக்கையால் வலம் வந்தும் வழிபடவேண்டும் என்பதை அதிகை வீரட்டப் பதிகத்தில் அப்பர் குறித்துள்ளார்.

### 3. மனக்கோயில்

கோவில்களில் உள்ள திருமேனிகளை வழிபாடு செய்வது பொது நிலை. ஒவ்வொருவரும் மனத்தைக் கோவிலாக்கி வழிபாடு

செய்வது சிறப்பு நிலை. மனக்கோவிலே இறைவன் விரும்பி உறையும் கோவில் என்பதைப் பூசலார் நாயனார் வாழ்விலிருந்து அறிய முடிகின்றது.

திருஅங்கமாலைபாடி, யாக்கை உறுப்புக்கள் ஒவ்வொன்றுக்கும் வழிபாடுகளை வகைப்படுத்திக் கூறிய அப்பர் மனத்தைக் கோவிலாக்கும் முறையைப் பல பாடல்களில் வலியுறுத்தியுள்ளார். சமணத்திலிருந்து சைவம் புகுந்து பாடிய முதற்பதிகத்திலேயே அவர் 'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்' என்று மனக்கோவில் முறைக்கு அவர் அடித்தளமிட்டுக் காட்டியுள்ளார்.

திருமாலும் நான்முகனும் இறைவனைப் புறத்தே காண முயன்று தோற்றதைப் பல பாடல்களில் சுட்டியுள்ள அப்பர், மனக்கோவில் முறையை வற்புறுத்தும் வகையில்

"தேடிக் கண்டு கொண்டேன் - திரு
மாலொடு நான் முகனும்
தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே
தேடிக் கண்டு கொண்டேன்" (4:9:12)

என்று பாடியுள்ளார். மனத்தைக் கோவிலாக்கி அதனுள் வந்து தங்கி வாழ்வளிப்பது இறைவனின் அருட்செயலே என்பதை,

"என் உள்ளம் கோயிலாக்கி அருள் செய்த ஆரூரர்" (4:5:2)

"ஓதுவித்து என் உள்ளத்தின் உள்ளிருந்து அங்குறுதி காட்டி" (4:5:6)

என்னும் பாடற்பகுதிகளில் அப்பர் தெளிவுறுத்தியுள்ளார்.

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்" (பா. 1823)

என்ற திருமந்திரப்பாடலும் "புன்புலால் யாக்கைப் பொன்னெடுங் கோயில்" (பா. 10) என்ற திருவாசகத்தில் திருவேசறவும் பாடலும் மனக்கோவிலை உயிர் நாடியாகக் கருதும் அப்பர் பாடல்களுடன் ஒருங்கிணைத்து நோக்கத்தக்கன.

இறைவன் தங்குவதற்கு ஏற்ற வகையில் செம்மைப்படுத்தி மனத்தைக் கோவிலாக்குவது முதற்பணியாகும். தன்னலம் முதலான தீய எண்ணங்களை விலக்கி மனத்தைத் தூய்மையாக்க வேண்டும். சொல்லும் செயலும் இறைவனையே மையமாகக் கொள்ளும் பக்குவம் உண்டாயின் மனம் கோவிலாகும் நிலை உருவாகும். இவ்வுணர்வு களை அப்பர் பல பாடல்களில் தெரிவித்துள்ளார்.

"மன்னுவான் மறைகள் ஓதி மனத்தினுள் விளக்கொன்றேற்றி
உன்னுவார் உள்ளத்துள்ளார்" (4:45:8)

"காலையும் மாலையும் கைதொழுவார் மனம் ஆலயம்" (4:17:8)

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்" (5:90:9)

மனத்தைக் கோவிலாக்கும் பணியில் அனைத்துப் பொறிபுலன் களுக்கும் பெரும் பங்குண்டு. 'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்' (பா.224) என்னும் திருமந்திர மொழி, மெய்ஞ்ஞானம் தேர்ந்து தெளிவதில் உடம்புக்குள்ள பொறுப்பை உணர்த்துகின்றது. அவ்வகை யில் மனத்துக்கு உறுதுணை புரியும் ஒவ்வோர் உறுப்பும் மதிக்கத் தக்கனவாயுள்ளன.

"நாய டியேன் கண்ணகத்தான்.....சென்னியான்" (4:112:6)

'அகம் குழைந்து மெய்யரும்பி அழுவார் தங்கள் வாயவன் காண்' (6:48:3)

'கற்றார்கள் நாவினாய்' (6:37:6)

ஆகிய பாடற்பகுதிகளில் யாக்கை உறுப்புக்களும் போற்றப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்த சென்னியும் தந்த தலைவனை" (5:90:7)

என்ற பாடலிலும், வாயும், நெஞ்சம், சென்னியும் உயிர்களுக்குத் தந்தவன் இறைவன் என்பதை நினைவுபடுத்தி அவ்வாறு தந்த தலைவனுக்கு வணக்கமும் நன்றியும் கூறும் வகையில் உயிர்கள் அன்பு செலுத்த வேண்டும் என்று அப்பர் அறிவுறுத்தியுள்ளார்.

மனத்தைக் கோவிலாக்கும் பணிக்கு இன்றியமையாது வேண்டப் படுவது இறையன்பு. 'அன்பே சிவம்' என்பது சைவநெறி.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்" (பா. 270)

என்று திருமந்திரம் இதனை மெய்ப்பிக்கும். திருக்களிற்றுப்படியாரும்,

"ஆரேனும் அன்பு செயின் அங்கே தலைப்படுங்காண்
ஆரேனும் காணா அரன்" (பா.15)

என்று அன்பையே வற்புறுத்திக் கூறியுள்ளது.

அப்பரும் 'அன்புடையார் சிந்தை அகலார்' (6:89:1) 'அன்புடையார் மனத்தான்' (5:37:8) எனக் கூறியதோடு இறைவனை எய்த எண்ணமே இன்றியமையாதது என்பதைப் பல பாக்களில் விளக்கியுள்ளார். ஆரூர், ஆலவாய், நள்ளாறு, புன்கூரும் நீடூரும் ஆகிய பதிகங்கள் முற்றுமாக மனத்திண்மையை வலியுறுத்துகின்றன. இவை

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்" (குறள் 666)

என்னும் குறள்நெறியை விளக்குகின்றன.

அன்பு நெறியாலன்றி, இறைவனை அடைய முடியாது என்பதை,

'நாடி நாரணன் நான்முகன் என்றிவர்
தேடியும் திரிந்தும் காண வல்லரோ
மாடமாளிகை சூழ் தில்லையம் பலத்து
ஆடியபாதம் என் நெஞ்சுள் இருக்கவே' (5:1:10)

என்று அப்பர் நயமுற நவின்றுள்ளார். இறைவனைக் காண விழைவோர் தத்தம் நெஞ்சிலே காணவேண்டுமேயன்றி வேறெங்கும் காணவியலாது; அதற்கு அன்பே துணை என்பது அப்பர் நெறி.

## 4. அடியவர் வழிபாடு

மனத்தைக் கோவிலாகக் கொண்டு வாழும் அடியார்களை வழிபடுவது சீரிய நெறி. சைவ நாயன்மார்கள் வரலாற்றில் சிவபெருமான் அடியவர் வேடங்கொண்டு பல அருளிச் செயல்களை நிகழ்த்தி யிருப்பது இவ்வழிபாட்டு முறையை மேன்மைப்படுத்துகின்றது.

அடியவர்களை வழிபடுவது, இறைபணி போன்ற புண்ணியப் பணி என்பதை உணர்ந்து, அப்பர் ஒரு தனிப்பதிகமே பாடியுள்ளார் (4:101). அதில் பாடல் தோறும் 'தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணிமே' என்ற முடிவினைத் தந்திருப்பது அப்பரின் அடியார் வழிபாட்டுப் பண்புக்கு அரணாக அமைகின்றது. ஞானசம்பந்தரும்,

"தொண்டர் தொண்டரைத் தொழுது அடிபணி மின்கள்
தூநெறி எளிதாமே" (2:104:10)

என்று சமயப் பயனை எளிதில் அடைய இவ்வழிபாட்டை ஒரு வாய்ப்பாகக் காட்டியுள்ளார்.

அப்பரின் மேற்கூறிய ஆரூர்த் திருவிருத்தம் திருத்தொண்டர் வழிபாட்டிற்குக் கால்கோளாகத் திகழ்கின்றது. பின் வந்த சுந்தரர், திருவாரூரில் திருத்தொண்டத் தொகை பாடி இவ்வழிபாட்டை ஒரியக்கமாக உருவாக்குவதற்கு இப்பதிகமே பெருங்காரணமாகவும் ஆகியுள்ளது.

அடியவரைத் தொழும் அடியார் நெஞ்சினுள்ளே இறைவன் திகழ்வான் என்பதனை அப்பர் வலியுறுத்தி, அத்தொழுகையைப் போற்றியுள்ளார்.

"எவரேனுந் தாமாக விலாடத் திட்
திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
உவராதே யவரவரைக் கண்ட போதே
உகந்தடிமைத் திறம் நினைந்தங்கு வந்து நோக்கி
இவர் தேவர் அவர் தேவ ரென்று சொல்லி
இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" (6:61:3)

இப்பாடலில் திருநீறும், உருத்திராக்கமும் உடைய திருவேடம் தொழும் சிறப்பும், அத்தகையோர் நெஞ்சுள் சிவன் உறையும் சீர்மையும் அப்பரால் விளக்கப்பட்டுள்ளன. அடியவரை வழிபடுவது ஆண்டவரை வழிபடுவதை ஒக்கும் என்பதைத் திருமூலரும், தம்திருமந்திரத்தில்

"படமாடக் கோயிற் பகவற் கொன்றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க் கங்காகா
நடமாடக் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடக் கோயிற் பகவற்க தாமே" (பா. 1857)

என்ற பாடலில் உணர்த்தியுள்ளார்.

"அறிவு சங்கரற்கு அன்பர் எனப்பெறில்
செறிவுறப் பணிந்து ஏத்திய செய்கை" (பா. 4)

என்று சேக்கிழார் குலச்சிறை நாயனார் புராணத்திலும்

"மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே' (நூ.12)

என்று மெய்கண்டார் சிவஞானபோதத்திலும் அடியவர் வணக்கத்தின் உட்பொருளை வெளிப்படுத்தியுள்ளனர்.

நாயன்மார்களின் திருவுருவங்களைச் சிவாலயங்களில் வைத்து வழிபாடு செய்து வருவது, காலந்தோறும் அடியவர் வணக்கம் மதிக்கப் பட்டு வந்ததைக் காட்டுகின்றது. சண்டேசுரருக்குத் தரப்படும் தனிப்பதமும், பஞ்சமூர்த்திகளில் ஒருவராக அவரைக் கருதுவதும் அடியார் வணக்கச் செய்கைகளாகவே உள்ளன. அடியவரைத் தொழுவதும் அவரை வழிபடுவதும் மிகச்சிறந்த நெறிகள் என்பதனைப் பெரியபுராணம் கூறும் நாயன்மார்கள் வரலாற்றில் இருந்தும் அறிய முடிகின்றது.

மெய்ப்பொருள் நாயனார், ஏனாதிநாத நாயனார் வரலாறுகள் சிவவேடப் பொலிவினைப் போற்றும் சீரிய பண்பாட்டை வற்புறுத்துபவை. அங்ஙனமே சம்பந்தரைக் கணநாதரும், அப்பரை அப்பூதி அடிகளும்,

சுந்தரரைச் சோமாசி மாறரும், வழிபட்டுச் சிவப்பேறு பெற்றன என்று அடியவர் வழிபாட்டுப் பயனை உணர வழிவகுக்கின்றது வைணவ நெறியில் நம்மாழ்வாரை மதுரகவியாழ்வார் வழிபட்டுப் பேறுபெற்றதும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது.

"பணியுமாம் என்றும் பெருமை" என்னும் குறள் நெறியை உயிர் மூச்சாக உடைய அப்பர் தம் வாழ்நாளில் சம்பந்தரைச் சந்தித்த சூழல்களில் வெளிப்படுத்திய பெரும் பணிவுடன்கூடிய உணர்வுகள் கருதத்தக்கவை.

காலபாசத் திருக் குறுந்தொகையில் பதினொரு பாடல்களிலும் அடியவர்களை அணுகாது நலந்தருமாறு அப்பர் கால தூதர்களை வேண்டியுள்ளார். மேலும் இறைவனிடமே அடியவர்க்காக விண்ணப்பப் பதிகமும் அவர் பாடியுள்ளார். இவ்வுணர்வு மேலும் பல பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

"அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும்
கண்டு வீற்றிருக்கும் கருத்து ஒன்றிலோம்
...தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே" (5:39:3)

அடியவர் திருவடிகளைத் தலையில் தாங்கும் பேறு கிட்டுமாயின் தமக்கு விண்ணக வாழ்வோ, அமரரின் பெரும் பதங்களோ வேண்டிய தில்லை என்று உறுதிபடக் கூறியுள்ளார். தம் துன்பம் விலகிட வேண்டிக் கொள்ளும் அப்பர், பிறர் துன்பம் விலகவும் வேண்டிப் பாடுகின்றார் (4:110:2). அவரின் சிறந்த தாய்மை நிலையை இது வெளிப் படுத்துகின்றது.

### 5. ஒருவனே தேவன்

செத்துச் செத்துப் பிறக்கும் தெய்வங்களால் வணங்கப்பெறும் பெருந்தெய்வம் சிவன் என்பதை

"அரியும் பிரமனும் வணங்கும் சோதி" (5:100:2)

என்று அப்பர் அறிவுறுத்தியுள்ளார். மேலும்,

"நூறு கோடி பிரமர்கள் நொங்கினார்
ஆறுகோடி நாராயணர் அங்ஙனே
ஏறுகங்கை மணல் எண்ணில் இந்திரர்
ஈறிலாதவன் ஈசன் ஒருவனே" (5:100:3)

என்ற பாடலில் ஒன்று பரம்பொருள்; அது சிவமே என்னும் உண்மையை ஆணித்தரமாக அறிவித்துள்ளார். இவ்வுண்மை உணராதாரை 'மனப்பாறைகள்', 'வாது செய்து மயங்கும் மன

ஏழைகள்', 'பாவகாரிகள்', 'சலவார்கள்', 'கல்மனவர்', 'மாயத்துப்பட்ட மனத்தர்', 'கருத்திலாக்கயவக் கணத்தோர்' என்று ஆதிபுராணத் திருக் குறுந்தொகையில் கடிந்து கூறியுள்ளார்.

வேள்வித்தீயும், ஞாயிற்று வடிவமும், நான்மறைப் பொருளும் சிவனே என்பதனை உணர்ந்து போற்றுமாறு அவ்வவ் வணக்கத்தாரை நெறிப்படுத்தியுள்ளார் (5:100:7;8).

'தாயினும் நல்ல சங்கரன்' (5:100:9) என்று சிவனின் அன்புத் தன்மையையும், 'ஆரருள் பெருக்கச் செய்த பிரான் பெருந்தன்மை' (5:100:10) என்று அவன் அருள் தன்மையையும், அடிப்படையாகக் காட்டி

''மாதேவனலால் தேவர் மற்றில்லை' (5:100:4)

என்று சிவன் ஒருவனே இறைவன் என்பதனை முடிபு காட்டியுள்ளார்.

அப்பர் தாம் பாடிய இறுதிப்பாட்டில் 'ஒருவரையுமல்லாது உணராதுள்ளம்' என்று ஓர் இறைக் கொள்கையைப் போற்றி வந்தமையைச் சுட்டியுள்ளார். 'ஒருவனே தேவன்' என்னும் இத்தகைய சிவநெறி, சமயகுரவர் நால்வராலும் போற்றிப் பரப்பப் பெற்று வந்துள்ள பெருநெறியாகும். புறச்சமயம் புகுந்து மீண்ட அப்பர்,

''சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோமல்லோம்
சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றோம்'' (6:98:5)

என்னும் பகுதியில் சிவகதியே செம்மைக்கதி என்று உலகவர்க்கு உணர்த்தியுள்ளார்.

'உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லாது எங்கள் உத்தமனே' (பா.2)

என்ற மணிவாசகர் திருச்சதகத்தில் மொழிவதும் ஈண்டு ஒப்புணரத் தக்கது.

''சிவனேயெம் பெருமானென் றிருப்பார்க் கென்றும்
நன்றாகும் நம்பி'' (6:20:9)

என்று அப்பர் தம் வாழ்நாள் முழுவதும் பெற்ற சிவநலத்தை நவின்றுள்ளார். இவ்வோரிறைக் கொள்கையே பலநிலைகளில் அப்பர் பாடல்களில் விளக்கம் பெற்றுள்ளது.

### ஈ. வழிபாட்டு முறைகள்

உயிர்கள் இறைவனை எய்துவதற்கு வழிபாடு தேவை. அவ் வழிபாடுதான் உயிர்களின் பாதுகாவலுக்கும், கல்வி, அறிவு, பொருள்,

புகழ் முதலான சீரிய செல்வங்கள் சேர்வதற்கும், வழி வழி மரபு சிறந்து மேம்படுவதற்கும் வழிவகுக்கின்றது. இதனைத் தொல்காப்பியர்,

"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின்" (தொல்.செய்.நூ. 106)

என்று புறநிலை வாழ்த்து நூற்பாவில் விளக்கியுள்ளார்.

வழிபடும் மாந்தரைத் தெய்வம் முன்னின்று காக்கும் என்பதும், அழியாத நிலைத்த புகழைத் தருகின்ற பல்வேறு நலங்களைத் தந்து வாழ்விக்கும் என்பதும், வழிபடுவோரையும், அவர்வழித் தோன்றல் களையும் முறையாகக் காக்கும் என்பதும் இந்நூற்பாவால் விளக்க மாகின்றது. வழிபாட்டின் தேவை, வழிபாட்டின் விளைவு ஆகிய வற்றில் விளக்கும் இத்தொல்காப்பியச் சிந்தனைகளைப் பக்திக் காலப் பாடல்கள் முதன்மைப்படுத்தி மொழிந்துள்ளன.

வழிபாட்டில் மேற்கொள்ள வேண்டிய முறைகளாக நால்வகை நெறிகள், ஐந்தெழுத்தின் பெருமை, திருநீற்றுப் பெருமை, பாடித் தொழுதல், விண்ணப்பங்கள், போலிச்சடங்குகளைத் தவிர்த்தல் ஆகிய கூறுகள் அப்பர் பாடல்களின் வழிநின்று இப்பகுதியில் விளக்கப்படுகின்றன.

### 1. நால்வகை நெறி

இறையருளைப் பெற்று உயிர்கள் இன்புறச் சைவ மரபில் நால்வகை நெறிகள் விளக்கப் பெற்றுள்ளன. அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்படும். இந்நான்கையும், 'நாதன் தன் பணி' (சு.பக்கம். செ. 12) என்று சிவஞான சித்தியார் கூறும். இந்நான்கு நெறிகளிலும் அரும்பு, மலர், காய், கனி என்ற நிலையில் மெய்ஞ்ஞானம் வளரும் என்பதைத் தாயுமானவர் சுட்டியுள்ளார்.[18]

'சரியை' என்பது ஒழுக்கம். ஒரு செயலுக்குக் காரணமாகிய மன இயல்பு வழிபடத் தூண்டும் மன ஈடுபாடு. திருக்கோவில்களில் அலகிடுதல், மலர்மாலை தொடுத்தல், புகழ்ந்து பாடுதல் போன்ற வற்றால் வழிபடுவது.

'கிரியை' என்பது செயல். அகத்தாலும் புறத்தாலும் வழிபடுவது.

'யோகம்' என்பது சேர்க்கை. அலைபாயும் மனத்தை இறை வனிடத்து ஒன்றி நிலைபெறச் செய்து வழிபடுவது.

'ஞானம்' என்பது அறிவு. அறிவின் துணைகொண்டு மெய்ப்பொருளை உணர்தல். அறிவின்படிமே இறைவனின் உருவம் என்று உணர்ந்து கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் ஆகிய நிலைகளில் வழிபடுவது.

இந்நால்வகை நெறிகளையும் முறையே தாசமார்க்கம், புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனச் சிவஞான சித்தியார் சுட்டியுள்ளது (சுபக்கம். செ. 15).

"சரியை செய்வோர் ஈசன் உலகிருப்பர்"

"கிரியையினை இயற்றுவோர்கள் நின்மலன்தன் அருகிருப்பர்"

"உழந்தவர் சிவன்தன் உருவத்தைப் பெறுவர்"

"ஞானப் பெருமையுடையார் சிவனைப் பெறுவர்"

(சுபக்கம். செ.19-23)

என்று அவற்றின் பயன்களைச் சித்தியார் மேலும் விரித்துரைத் துள்ளது.

இந்நெறிவழி நிற்போர் முறையே சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் ஆகிய முத்தி நிலைகளைப் பெறுவர் என்று சித்தியார் மேலும் விளக்கம் அளித்துள்ளது (சுபக்கம்.செ. 18).

நால்வகை நெறிகளின் பணிகள், பயன்கள் பற்றிச் சித்தியார் முதலாகச் சாத்திர நூல்களும், அவற்றின் உரைகளும் மரபாகக் கூறிவரும் கருத்துக்கள் பின்வரும் அட்டவணையில் முறைப் படுத்தப்பட்டுள்ளன.

மேற்காட்டிய அட்டவணையில் சமய குரவர் நால்வருக்கும், ஒவ்வொரு நெறி வரையறுத்துக் கூறப் பெற்றுள்ளது.

இவ்வகையில் நோக்குழி, அப்பர் 'சரியை'யாகிய தொண்டு நெறியில் (தாச மார்க்கம்) நின்றவர் என்ற கருத்து பெறப்படு கின்றது. அவ்வாறாயின் யோக நெறியையும், ஞான நெறியையும் அறியாதவர் அப்பர் என்ற முடிவுக்கு வரவேண்டிய இக்கட்டான சூழ்நிலை ஏற்படுகின்றது.

சமய குரவர் நால்வருக்குள்ளேயே தரம் பிரிப்பதாகிய தன்மை உண்டாகின்றது. இவ்வகைக் கருத்து முரண்களை யெல்லாம் நன்கு அலசி ஆய்ந்த திருமுறைச் செல்வர் க. வெள்ளைவாரணனார்,

"சமய குரவராகிய இந்நால்வரும்......முதிர்ந்த
ஞானநெறியில் நின்ற செம்புலச் செல்வர்கள்

## நான்கு நெறிகள்

| | சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|---|
| 1. வழிபடும் மேனிகள் | உருவத்திருமேனி | அருவுருவத் திருமேனி | அருவத்திருமேனி | அருவுருவங்கடந்த சச்சிதானந்தப்பிழம்பு |
| 2. செயல் நிலைகள் | புறத்தொழில் | புறத்தொழிலும், அகத்தொழிலும் | அகத்தொழில் | அறிவுத்தொழில் |
| 3. ஈடுபாட்டுக்களன்கள் | உடம்பு | உடம்பும் உள்ளமும் | உள்ளம் | உடம்பு உள்ளங்கட்கு மேலான அறிவு |
| 4. வழி முறைகள் (தாசமார்க்கம்) | தொண்டு நெறி (சற்புத்திரமார்க்கம்) | மகன்மைநெறி (சகமார்க்கம்) | தோழமை நெறி (சன்மார்க்கம்) | ஒன்றும் நெறி |
| 5. முத்தி நிலைகள் (சாலோகம்) | இறை உலகிருத்தல் (சாமீபம்) | இறை அருகிருத்தல் (சாரூபம்) | இறை உருப்பெறல் (சாயுச்சியம்) | இறையோடு இரண்டறக் கலத்தல் |
| 6. ஞான வளர்ச்சி | அரும்பு | மலர் | காய் | கனி |
| 7. நிலை எய்தியவர்கள் | அப்பர் | சம்பந்தர் | சுந்தரர் | மாணிக்கவாசகர் |

என்பதே சேக்கிழார் முதலிய முன்னைய
அருளாசிரியர்களின் துணிபாம்''[19]

என்று முறை மாறிப்போன போக்கினைச் சுட்டிச் செம்மைப்படுத்தி யிருப்பது கருதத்தக்கது.

அப்பர் பாடல்களில் சரியை முதலான நான்கு நெறிகளைச் சார்ந்த உணர்வுகளும் இடம்பெற்றுள்ளன.

''நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடை எம் ஆதீ என்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே'' (6:31:3)

என்ற பாடல் சரியை நெறியை உணர்த்துகின்றது. கோயில் புகுதல், அலகிடுதல், பூமாலை புனைதல், புகழ்ந்து பாடல், தலையாரக் கும்பிடுதல், கூத்தாடுதல், போற்றி செய்தல் ஆகிய சரியைவழி சார்ந்த செயல்கள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன.

''கைப்போது மலர்தூ விக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே'' (4:7:3)

இப்பாடலில், சரியைச் செயல்களோடு, ஐம்புலனும் அகத்தடக்கல் இறைவனை மனத்துவைத்தல் ஆகிய கிரியைச் செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

சரியை, கிரியை ஆகிய இரு நெறிகளையும் ஒன்றுபடுத்தி அப்பரின் திரு அங்கமாலைப் பதிகம் ஒருங்கு விளக்கியுள்ளது.

''உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படு முணர் நெய்யட்டி உயிரெனுந்திரி மயக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே'' (4:75:4)

அகலில் நெய்யை ஊற்றித் திரியிட்டு விளக்கேற்றின் எங்கும் ஒளிபரவும். அவ்வொளியில் பொருள்கள் யாவும் கண்ணுக்குப் புலனாகும். அதுபோல, உடம்பாகிய வீட்டினுள் உள்ளமாகிய

அகலில், உணர்வாகிய நெய்யை ஊற்றி, உயிராகிய திரியை யிட்டுச் சிவஞானமாகிய ஒளியை ஏற்றி, அவ்வொளியிடையே ஒன்றி நுணுகி நோக்கின் இறை திருவடி தெற்றெனப் புலனாகும். இப்பாடல் யோகநெறியை உருவகப்படுத்திக் கூறியுள்ளது. சரியை, கிரியை ஆகிய இருநெறிகளை அப்பர் ஒன்றுபடுத்திக் கூறியதன் அடிப்படையில், திருக்களிற்றுப் படியாரும் இவ்விரு நெறிகளை இணைத்துச் 'சிவதன்மம்' எனக் குறிப்பிடுதல் ஈண்டு கருதத்தக்கது. அப்பர் சிவானந்த ஞானவடிவாகச் சிவபெருமானின் திருவடி நீழலில் இணைந்தவர்.

"ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்
ஞானத்தால் தொழுவேன் உனை நானலேன்
ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு
ஞானத்தால் உனைநானும் தொழுவனே" (5:91:3)

என்று அவர் அடக்கத்துடன் கூறினாலும்

"என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே" (5:91:2)

"நன்றா நன்மனம் வைத்திடு ஞானமாம்
ஒன்றா னைக்கண்டு கொண்டதென் உள்ளமே" (5:98:7)

என்று இறைவனைத் தாம் ஞானத்தால் இனங்கண்டு கொண்டதை அவரே கூறியிருப்பது நோக்குதற்குரியது.

இவ்வாறு நான்கு நெறிகளிலும் அப்பர் தோய்ந்திருந்தார் என்பதற்கான அகச்சான்றுகள் அவருடைய பாடல்களிலேயே அமைந்திருக்க, அவரைச் சரியை நெறி மட்டுமே பின்பற்றியவர் என ஒரு நெறிக்கு உட்படுத்திக் கூறியிருப்பது பொருத்தமற்ற தாகவே தெரிகின்றது.

சைவம் கூறும் இந்நான்கு நெறிகளும், பக்தி நெறியின் நான்கு படிகள்; இவற்றுக்கு அடிப்படை அன்பாகும். இவ்வன்பை அடிப்படையாகக் கொண்டு வளரும் பக்தி நெறியை வைணவர் 'கருமம்', 'ஞானம்', 'பக்தி', 'பிரபத்தி', 'ஆச்சாரிய அபிமானம்' என ஐவகைப்படுத்திக் கூறுவர்.

சைவ வைணவ பக்தி நெறிகளில் படிநிலைகள் அமைந்துள்ள இப்பொதுத் தன்மையை

"இவ்விரண்டு நெறிகளும் சில அடிப்படையான தெய்வத் தொண்டு களில் தொடங்கி, முற்றாகத் தன்னை ஒப்படைப்பதில் முடிகின்றன...

பொதுவாக பக்தியின் ஒவ்வொரு படியிலும் ஞானம் பிரிக்க முடியாது கலந்து நிற்கின்றது"[20]

என்று ப. அருணாசலம் விளக்குவர்.

வைணவம் கூறும் பிரபத்தி நெறி என்பது இறைவன் அருளையே புகலாக அடைவதை உணர்த்துவது.

> "இறைவனையன்றி வேறு எவர்க்கும் நான் அடிமையில்லை; அவனையன்றி வேறு எவரையும் வேறு எதனையும் இன்பமாகக் கருதேன்; அவனையன்றி வேறு எவரையும் வேறு எதனையும் உபாயமாகக் கருதேன்"[21]

எனும் உறுதிகளின் ஒட்டுமொத்த வடிவே பிரபத்தி நெறியாகும்.

இம்மூன்று உறுதிகளையும் முறையே

> "நாமார்க்கும் குடியல்லோம்.....சங்கரன் நற்
> கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க் குறுகினோமே" (6:98:1)
>
> "என்னில் யாரும் எனக்கினியாரில்லை
> என்னிலும் இனியான் ஒருவன் உளன்" (5:21:1)
>
> "சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோ மல்லோம்
> சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்" (6:98:5)

என்று அப்பர் பாடல்களில் இடம்பெற்றிருத்தலை அறிய முடிகின்றது. இந்நிலை பக்தியின் முதிர்ச்சியில் தோன்றுவது. ஞானத்தை அடிப்படை யாகக் கொண்டு ஞானத்தால் விளைவது. எனவே நால்வகை நெறியிலும் நின்று, ஞானச்சுடரைத் தன் உள்ளத்தே கண்டு காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கியவர் அப்பர் பெருந்தகை என்று கூறுவதே பொருந்தும்.

### 2. பூசை முறை

இறைவன் திருமேனிகளை நன்னீராட்டி, மாலைகளால் அணி செய்து மலரிட்டு அருச்சித்து அவன் பெருமைகளைப் போற்றிப் பரவுவது வழிபடு மரபு.

உழவாரப் படை கொண்டு திருப்பணி செய்த அப்பர் நீராட்டுதல் முதலாக, இறைவனுக்குச் செய்யும் பணிகளை விளங்கக் கூறியுள்ளார்.

கன்றாப்பூர்த் திருத் தாண்டகம் இப்பூசை முறையை நன்கு தெளிவுபடுத்தியுள்ளது. திருவதிகை வீரட்டக் குறுந்தொகையில் அட்டமாமலர் கொண்டு செய்யும் பூசை கூறப்பெற்றுள்ளது.

'அட்டபுட்பம்', 'எட்டுநாள் மலர்', 'ஒண்மலர் எட்டு', 'எண் மலர்' எனக் குறிப்பிட்டுள்ள அப்பர் குறிப்பிட்டுள்ள எட்டு மலர்கள், புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, குவளை, அலரி, செந்தாமரை ஆகியன என்று விளக்கமளிப்பர்.

இவ்வாறு மலரிட்டு வணங்குதல் ஒருபுறமிருப்ப, ஞானநெறி நின்று சிவபூசை செய்யும் முறையையும் அப்பர் கூறியுள்ளார்.

"காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமைய வாட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே" (4:76:4)

அப்பரின் மனத்துள்ளே நின்ற ஞானச்சுடர் இப்பாடலாக உருவெடுத்துள்ளது.

வழிபாட்டின்போது மேற்கொள்ள வேண்டிய செயல்கள் பலவற்றை அப்பர் பாடல்கள் விளக்கியுள்ளன. அவை,

1. வைகறைக்கு முன் கோவிலை அலகிட்டு மெழுகிட்டுத் தூய்மை செய்தல். (6:31:3)
2. சிறுகாலைப் பொழுதில் சங்கொலித்தல். (4:102:10)
3. பறை முழக்குதல். (5:92:2;73:2;42:10)
4. தேனொடு பால் தயிர் நெய்யும், தெங்கிளநீரும், தூய நன்னீரும் கொண்டு இருக்கு ஓதி திருமுழுக்காட்டுதல். (4:75:1)
5. கொன்றை மாலை சூட்டிப் பூக்களால் அர்ச்சனை செய்தல். (4:65:6)
6. செஞ்சொல்லால் பாமாலை புகழ்ந்து இறைவனைப் போற்றுதல் (4:15:11)
7. நாளும் குங்கிலியப் புகை எழுப்பியும் நல்லகிற்புகை காட்டியும் தொழுதல் (4:37:2;10; 4:102:10)
8. மலர் தொடுத்தும் தூப தீபம் காட்டியும் சந்தனம் அணிவித்தும் எப்போதும் அருகிருந்து வணங்குதல் (4:80:3)
9. வைகலும் ஆர்வமொடு விளக்கேற்றுதல் (4:31:1;4:77:3)
10. இறைவன் அருளையும், அடியவர் தொண்டையும் புகழ்ந்து வழிபடுதல் (5:30:10)
11. ஐம்புலன்களையும் அகத்தடக்கி, அழுது கருத்தினால் தொழுதல் (6:61:5)

12. சங்கரா சயசய போற்றி என்று வாயார வாழ்த்தல் (6:31:8)
13. கைகளைக் கூப்பித் தொழுதல் (4:9:7)
14. நமச்சிவாய மந்திரம் சொல்லி நெற்றியில் திருநீறணிந்து பெருமையோடு வலம் வருதல் (4:92:6)
15. கோவில்களில் அட்டாங்கமாய் விழுந்து வணங்குதல் (5:95:7)
16. மெய்யில் திருநீறுபூசிக் கோவிலைச் சுற்றித் தரையில் புரண்டு வலம் வருதல். (4:110:1)

### 3. திருவைந்தெழுத்தின் பெருமை

வழிபாட்டில் இறைவன் திருப்பெயரை எண்ணிப் போற்றுதல் மரபு. 'நமச்சிவாய' என்னும் மந்திரம், படைக்கலமாக இருந்து, மெய்யடியார்களின், புறப்பகை, அகப்பகை ஆகியவற்றைக் களையும். இவ்வைந்தெழுத்தின் ஆற்றல் பற்றி அப்பர் பாடல்கள் தரும் செய்திகள் பல.

1. இறைவன் ஐந்தெழுத்து வடிவமாக உள்ளான். (6:53:6)
2. சிவாயநமவென்ற சிந்தை மந்திரம் கொண்டு காலையும் மாலையும் ஐந்தெழுத்தை ஓதுவது இறைவனுக்குச் செய்யும் அன்பாகும். (6:61:8)
3. ஐந்தெழுத்து மந்திரம் துன்பத்தையும் பிணியையும் போக்கும்; அருந்தவத்தைத் தரும். (5:43:6)
4. ஐம்பொறிகளாகிய பூதங்களைச் 'சிவாயநம' என்று கூறி வெல்லலாம் (5:43:6)
5. அறிவிலராயினும் ஐந்தெழுத்து ஓதியுணர்வார் உள்ளத்தில் அம்மையப்பன் தோன்றுவான் (5:60:1)
6. ஐந்தெழுத்தில் ஓரெழுத்தை உணர்ந்து போற்றினாலும் நமன் வந்து சாரான். (5:92:9)

நமச்சிவாயத்தின் பெருமைகளை, அப்பர் 'நற்றுணை யாவது', 'நாவினுக் கருங்கலமாவது', 'நல் அகவிளக்காவது', 'நன்னெறியாவது', 'குலநலம் கொடுப்பது' என்று ஒரு தனிப் பதிகத்தில் விளக்கிக் கூறி அதனை எடுத்து மொழிவாருக்கு 'இடுக்கண் இல்லை' என்று அப்பதிகத்தின் பயனையும் சிறக்க மொழிந்துள்ளார் (4:11).

"நமச்சிவாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சிவாயவே நானெறி வித்தையும்
நமச்சிவாயவே நாநவின்றேத்துமே
நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே" (5:90:2)

என்ற பாடலில் ஐந்தெழுத்தின் பெருமைகளைச் சுரிதகமாக வடிவமைத்துத் தந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. ஐந்தெழுத்தின் துணைக்கொண்டே தமக்கு நேர்ந்த இன்னல்கள் பலவற்றை வென்று சிறந்தார் என்பதை அவர் வாழ்வு உணர்த்துகின்றது.

### 4. திருநீற்றுப் பெருமை

நெற்றியில் திருநீறு அணிவது சிவச் சின்னமாகும். "ஆணவம் முதலான மும்மலங்களைப் போக்கும் சிவத்துவப் பேற்றின் அறிகுறி திருநீறு" என்று ஆறுமுக நாவலர் விளக்கமளிப்பர்.[23]

'அந்தவ்ளப்பொடி', 'சாம்பல்', 'சுடலை நீறு', 'தணல் முழுகு பொடி', 'வெண்ணீறு' என அப்பர் திருநீற்றினைக் குறிப்பிட்டுள்ளார். 'தூ நீறு', 'சோதி விளங்கு நீறு', 'விலை பெரிய வெண்ணீறு' என்பன அப்பரின் திருநீற்றுப் புகழ் மொழிகள். திருநீற்றின் நிறம், பெருமை நுண்மை, பயன், பிறப்பிடம் இவைபற்றிய குறிப்புக்கள் தோன்றுமாறு அடைமொழிகள் கொடுத்திருக்கக் காண்கின்றோம்.

"விச்சையாவதும் வேட்கைமையாவதும்
நிச்சலை நீறணிவாரை நினைப்பதே" (5:92:8)

என்று, நீறணிவதிலும் நீறணிவாரை நினைப்பது சிறப்பு என்று சுட்டியுள்ளார். திருநீறு அணியும்போது சிவாய நமவென்று மொழிய வேண்டும் (4:94:6). ஐந்தெழுத்தை மொழிந்து நீறணிந்தால் பிணித்துள்ள வினையும், நோயும் அழலிடைப்பட்ட விறகு போல் வெந்தழியும் (4:77:4).

அரிய நோய்கள் கெடுமாறு வெண்ணீறு அணியாதார், அருளற்றாராவர். மாறி மாறிப் பிறக்கும், இறக்கும் தொழிலரு மாவர் (6:95:6). 'நீறில்லா நெற்றி பாழ்', என்னும் வாய்மொழிக்கு அடியெடுத்துக் கொடுப்பது போன்று, 'திருவெண்ணீறு அணியாத திருவில் ஊர்..... ஊரல்ல அடவி காடே' என்று அப்பர் சுட்டியுள்ளார் (6:95:5). 'விலங்கொடு மக்கள் அனையர்' என்பதைப்போல நீறணிவாரை மக்கள் என்றும், நீறணியாரை விலங்குகள் என்றும் கருத வைத் திருப்பது அக்காலத்தில் சமயவாதிகளிடையே திருநீற்றுச் சின்னத்திற் கிருந்த அழுத்தமான நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றது.

### 5. பாடித்தொழுதல்

திருக்கோவில் வழிபாட்டில் இறைவனைப் புகழ்ந்து பாடுவது நற்செயலாகும். 'வாயாரப் பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபடும்...என் நெஞ்சமே என்ன புண்ணியம் செய்தனை'

(2:106:1) என்றார் ஞானசம்பந்தர். இறைவன் திருப்புகழைப் பாடுவது 'தவநெறி'யாகும். புதிது புதிதாகப் பாடாவிடினும் அப்பர் முதலான அருளாளர் திருமொழிகளை ஓதுவதும் புண்ணியச் செயலாகும்.

"நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரசனும்
பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை" (7:67:5)

எனச் சுந்தரர் கூறும் முறையால், அப்பர் பாடல்களும் பாடித் தொழும் நெறிக்கு உட்பட்டவை என்று அறியலாம்.

அப்பர் தம் முதற் பதிகத்தில் 'தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்' என்ற கொள்கையைப் போற்றி ஊர்தோறும் சென்று திருப்பணி செய்ததோடு தமிழ்ப்பணியும் செய்திருப்பது கருதத்தக்கது.

'தமிழ் மாலைகளால், நாம் படிமக்கலம் செய்து தொழுதும் (4:102:3) என்று அப்பர் தம் நெஞ்சுக்குச் சொல்வது போன்று தம்மால் இயலும் பணி பதிகப்பணி என்று நவின்றுள்ளார்.

### 6. விண்ணப்பங்கள்

அப்பர் தம் பதிகங்களில் தன்னிரக்கத்தோடு இறைவனிடம் வேண்டிய வேண்டுதல்கள் அவர்தம் உள்ளக்கிடக்கையை உணர்த்த வல்லவை.

"சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்" (4:1:3)

என்ற வேண்டுதலோடு சமணத்திலிருந்து சைவ சமயம் புகுந்த அப்பர் நற்றொண்டன், சிவத்தொண்டன் எனத் தம்மை உலகம் ஒப்பவேண்டும் என்று முதன்மையான விண்ணப்பத்தை வைத்துள்ளார்.

திருத்தூங்கானை மாடப் பதிகத்தில் 'மூவிலைச் சூலம் என்மேல் பொறி', 'திருவடி நீறு என்னைப் பூசு', 'இடபம் பொறித்து என்னை ஏன்றுகொள்' என்ற மூன்று விண்ணப்பங்களை வெளி யிட்டார் (4:109). புறச்சமயத்தில் இருந்து வந்த தம்மைச், சிவதீக்கை முறையால் தூய்மை செய்து ஏற்க வேண்டும் என்ற நோக்கத்தில் இவை அமைந்துள்ளன. இவற்றில் இடபக் குறியும், சூலக்குறியும், அத்தலத்திலேயே இறைவன் திருவருளால் அவருக்குப் பொறிக்கப் பெற்றன. திருநீறு பூசுதலாகிய செய்கை அவர் வாழ்வில் வேறெங்கும் நிகழ்ந்ததாக, அவர் பாடல்களில் சான்றுகள் இல்லை.

இது கருதியே சேக்கிழார் பெருந்தகை,

"திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்ப" (பெ.பு.திருநாவு.பா.67)

என்று குறித்துள்ளார். 'அப்பருக்குத் திருநீறு அளித்தவர் திலகவதி யாரெனினும் அது இறைவனாகிய திருவாளன் திருநீறே' எனவும், அவன் திருவுளப்படியே திலகவதியார் அதனை அப்பருக்கிட்டார் எனவும் உணர வைத்திருப்பது கருதத்தக்கது. மெய்த்தொண்டரான திலகவதியார் அளித்த திருநீறே நாவுக்கரசருக்கு முதல் சிவதீக்கையாக அமைந்தது எனலாம்.

திருச்சத்தி முற்றத்தில் "கூற்றம் குமைப்பதன் முன் பூவாரடிச் சுவடு என்மேல் பொறித்து வை" (4:96:1) என்று பணிந்து வேண்டு கின்றார். இவ்வேண்டுதல் நல்லூரில் நிறைவேறுகின்றது. அதனால், 'திருவடி என் தலைமேல் வைத்தார், நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே" (4:77:10) என்ற முடிப்போடு அப்பர் நன்றி நவில் கின்றார். தாம் விரும்பும் சிவக்கோலத்துக்காக இறைவனிடம் அப்பர் வேண்டிய விண்ணப்பங்கள் இவை.

இறைவன் தம்மையும் ஒருபொருளாகக் கருதி அருள் செய்ய வேண்டும் என்ற நோக்கில், "என்னைக் குறிக் கொண்டருள்" (4:87) "சிவனே உன் அபயம்" (6:42), 'என் விண்ணப்பம் தனி நெஞ்சமே' (4:111) எனச் சில தனிப்பதிகங்களில் விண்ணப்பித்துள்ளார்.

சமணர் தமக்கிழைத்த இன்னல்களைச் சிவன் நாமம் துணைக் கொண்டு, வென்று அஞ்சாது வாழ்ந்த அப்பர், இறைவனிடம் தம்முயிருக்கும் உய்தி கிட்டுமோ என்று எழுந்துள்ள அச்சத்தைப் போக்குமாறு, 'அஞ்சல் என்னாய்' (4:67:1) 'அஞ்சினேற்கு அஞ்சல் என்னீர்' (4:52:8), 'துஞ்சும் போதாக வந்து துணையெனக்காகி நின்று அஞ்சல் என்றருள வேண்டும்' (4:57:1) என்று வேண்டு கின்றார். புறப்பகைகட்கு அஞ்சாது வாழ்ந்த அப்பர் அகப்பகைகட்கு அஞ்சி வாழ்ந்தமையை இது காட்டுகின்றது.

'உன்மேல் பழிவராவண்ணம் அருபிணி நோய் வராமல் காக்க' (109:2) என்றும், 'கடுமையான வல்வினை நோய்கள் அடையா வண்ணம் காக்க' (4:47:1) என்றும், 'வாதை, வடு, குற்றம் ஆகியன தீர்க்க' (4:51:8) என்றும் வேண்டுகின்றார்.

'கூற்றம் வந்து சேருமுன், உன் திருவடிகளை இப்பிறவியிலேயே என் நெஞ்சில் எழுதிவை; மறுமையில் எனக்கு நீ அருளுவாய் என்பதை ஒருவரும் அறியார்' (4:96:6) என்றும் நயந்து கூறித் தமக்கு இப்பிறவியிலேயே அருள்பாலித்து விடுமாறு முறையிட்டுள்ளார்.

'அடைக்கலமாகக் கொண்டவரை அவரின் தகாமை கருதி ஒதுக்கி விட இயலாது' (4:96:8) என்றும், 'தமக்கு அடைக்கலம்

தத்தமக்கு இவ்வுலகமே நன்றாகத் திகழ்கின்றது' (4:91:9) என்றும் அடியவர்க்காகப் பரிந்து வேண்டுகின்றார். மேலும், 'உன் திருவடியைப் புகலாகக் கொண்ட அடியவர்களுக்கு வறுமை, நோய் ஆகியன வராமற் காத்து அவர்கள் மாட்டு அருள்புரிய வேண்டும்' (4:99:5) என்றும் விண்ணப்பம் செய்கின்றார்.

இவ்வாறு உயிர்களின் ஈடேற்றங்கருதியும், அடியவர்களின் நன்னலங் கருதியும் அப்பர் செய்கின்ற விண்ணப்பங்கள் அவர்தம் பொதுநலப் போக்கினையும் பரந்த மனப்பாங்கினையும் புலப்படுத்து வனவாய் உள்ளன.

### ٤. போலிச் சடங்குகளைக் கடிதல்

இறைவழிப்பாட்டில் அன்பு உயிராக அமைவது; அஃதின்றிச் செய்யும் வழிபாடு பொருளற்றது. இறைவனை அன்பு நெறியிலும் அறிவு நெறியிலும் வணங்கும் வழக்கங்கள் இருந்தாலும் அன்பு நெறியை வலியுறுத்தியே தேவார மூவரின் பாடல்கள் அமைந்துள்ளன.

அப்பர் அன்பின்றிச் செய்யும் வழிபாடுகளை வெறுத்தார். வேதஆகம நெறிமுறைகளோடு வழிபாடு மேற்கொண்டாலும் உள்ளூறத் திகழவேண்டியது அன்பு என்று வற்புறுத்தியுள்ளார்.

''துன்பே கவலை பிணி என்றிவற்றை
நணுகாமல் துரந்து கரந்துமிடீர்
......... அடியார் படுவது இதுவேயாகில்
அன்பே அமையும்'' (4:1:9)

இப்பாடற்பகுதியில் அன்புகொண்டே இறையருளைப் பெற்று இன்னல் களைக் களைய முடியும் எனத் தெளிவாக்கியுள்ளார்.

வழிபாட்டில் எச்செயல் செய்யினும் அஃது அன்பு வழிப்பட்டே அமைதல் வேண்டும். வழிபாடு அமைய வேண்டிய முறையை எதிர்மறை நடையிலும் பாவநாசத் திருக் குறுந்தொகையில் விளக்கி யுள்ளார். அவை, அவர் காலத்தில் நிலவிய போலிச் சடங்கு களைத் தொகுத்துக் கூறும் வகையிலும் வெறுத்துக் கூறும் முறை யிலும் அமைந்துள்ளன.

1. கங்கை, காவிரி, குமரித்துறை, கடல் எங்கு நீராடினாலும் எங்கும் ஈசன் என்று போற்றாதார்க்கு எப்பயனுமில்லை. (5:99:2)
2. பட்டராயினும், சாத்திரங்கேட்பினும், கொடையும் விருந்தும் கொடுக்கினும் ஈசனிடம்விருப்புச் செலுத்தா தாருக்குப் பயனில்லை. (5:99:3)

3. வேதம் ஓதி, வேள்விகள் செய்து நீதி நூல் பயின்று ஆறங்கம் உணர்ந்தாலும் ஈசனை அன்போடு நினை யார்க்குப் பயனில்லை. (5:99:4)

4. வைகறையில் மூழ்கி, விதிவழி நின்று பெருவேள்விகள் செய்தாலும் இறைவனை நெஞ்சில் நிறுத்தாதார்க்குப் பயனில்லை. (5:99:5)

5. நாடும் காடும் திரிந்து பெருந்தவம் புரிந்து, உணர்வு ஒழிந்து மேலுலக வாழ்வை ஆய்ந்தாலும் இறைவனை 'ஞானன்' என அறியாதார்க்குப் பயனில்லை. (5:99:6)

6. வேடங்கள் மிகுந்து, ஊன் உண்ணாது உடலை வருத்தித் திரிந்தாலும் சிவனைப் போற்றிப் பாடாதாருக்குப் பயனில்லை. (5:99:7)

இவற்றால், சடங்குகளை ஆர்வமாகச் செய்வதை விட இறைவனிடம் அன்பை முறையாகச் செலுத்துவதே சிறந்தது என்பது அப்பரின் அறிவுரை எனத் துணிய முடிகின்றது.

மெய்ப்பொருளை உள்ளவாறு அறிந்து நுண்ணுணர்வோடு இறைவனை வணங்கும் ஞானிகட்குச் சாதனங்கள் தேவை யில்லை என்பதனை, "முன்கோலும், தருப்பையும் கொண்டு, மான்தோல் உடுத்தி வருத்தி வாழ்ந்தாலும் பயனில்லை; வேதம் ஓதும் உரிமையைப் பெற்றோர் இறைவனை உணரார் ஆயின் பயனில்லை (5:39:8) எனக்கூறி அப்பர் அறிவுறுத்துகின்றார்.

மெய்யான வழிபாடு இறையருளைப் பயக்கும் என்றும், பொய்யான வழிபாடு இறையருளைப் பயக்காது என்றும் அப்பர் ஒரு பாடலில் தெளிவுறுத்தியுள்ளார்.

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார் சடைப்புண்ணியன்
பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கண்டு
நக்கு நிற்பர் அவர் தமை நாணியே" (5:90:9)

இங்ஙனம் அப்பர் தம் கால வழிபாட்டு முறைகளில் இருந்த சடங்குகள், கடுந்தவங்கள் போன்றவற்றை விடுத்துத் தூய அன்பு வழியையே வற்புறுத்தியுள்ளார்.

அப்பர் கூறும் வழிபாட்டு முறைகள் பணிவு, கனிவு, அன்பு, உண்மை, நேர்மை, உழைப்பு, மனத்தூய்மை, மனஒருமை ஆகிய வற்றை அடிப்படையாகக் கொண்டு திகழ்கின்றன.

### உ. வழிபாட்டுப் பயன்கள்

செய்யும் செயல் ஒவ்வொன்றுக்கும் விளைவு-பயன் உண்டு. கற்பதன் பயன் இறைவனை வணங்குவதே என்பர் வள்ளுவர். இறைவழிபாட்டுச் செயல்களுக்கும் பயன்கள் உள. 'நிலமிசை நீடு வாழ்வார்', 'யாண்டும் இடும்பை இல', 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்', 'இருள்சேர் இருவினையும் சேரா' என வழிபாட்டின் பயன்களைக் கடவுள் வாழ்த்தில் வள்ளுவர் விளக்கியுள்ளார். 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்று கூறி திருத்தொண்டாற்றிய அப்பர், வழிபாட்டுப் பயன்களைத் தம் பாடல்களில் சுட்டியிருப்பது கருதத்தக்கது.

அருள்மிக்க இறைவன் தமக்குப் பயக்க இருக்கும் நலன் களை, அப்பர்,

"தன்னைச் சரணென்று தாளடைந்தேன். . . . .
. . . . . . புகலூர் அண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தென்வினை கட்டறுத் தேழ்நரகத்
தென்னைக் கிடக்கலொட் டான்சிவலோகத் திருத்திடுமே"

(4:105:1)

என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார். நரகம் வராது காத்தல், வினைக் கட்டுக்களை அறுத்தல், பிறப்பு விடுத்தல், சிவலோகத்துச் சேர்த்தல் ஆகிய பயன்களைப் பக்தி செய்வார்க்கு இறைவன் செய்வான் என்பது அவர் நம்பிக்கை.

வழிபாட்டில் விளையும் பயன்களை இம்மை நலம், மறுமை நலம், மெய்யுணர்வு, வினைநீக்கம், சிவப்பேறு, ஆகிய கூறுகளாக ஈண்டு வகுத்துக் காணலாம்.

#### 1. இம்மை நலம்

1. சிவனைச் செம்மையாகத் தொழுவார்க்கு வானவர் செல்வம் யாவும் இம்மையிலேயே கிடைக்கும். (5:14:4)
2. ஐயனே, அரனே என்று தொழுது வாழ்ந்தால் உய்யலாம்; உலகத்தார் போற்ற வாழலாம். (5:60)
3. கங்கை சூடிய கடவுளை அடைந்தார்க்கு அவலமில்லை. (5:41:1)
4. திருவடி நினைவார்க்கு வையம் ஆளும் பெருமை வாய்க்கும். (5:65:7)
5. சிவனைச் சார்ந்தோர் என்று தம்மைக் கூறிக்கொள்ளும் அளவிலேயே தடுமாற்றங்கள் கெடும். (5:97:18)

6. வானம் பொய்த்து நிலவளம் கெட்டுத் துன்புற்றாலும், நாடாள் வோர் கூடி எதிர்த்தாலும் சிவனை வணங்குவார் அஞ்சாது வாழலாம். (5:77:6)
7. ஈட்டிய பெருஞ்செல்வம் இழப்பினும், கூற்றுவந்து அழைப்பினும் சிவனை எண்ணினால் வாட்டந் தீரும். (5:60:6)
8. உறுபிணி, செறுபகை, உள்நோய், பேரிடர், இவையாவும் மருந்தென விளங்கும் இறைவனை வணங்கினால் தீரும். (4:13:6)

இவை வழிபாடு செய்வார்க்கு விளையும் இம்மை நலங்கள்.

### 2. மறுமை நலம்

1. நாள்தோறும் சிவனை வலம் வந்து வணங்குவார்க்கு வானுலகு ஆளும் பேறு கிடைக்கும். (5:97:1)
2. நரகக் கொடுந்துன்பம் சூழாது. (4:105:1)

அலகிடுதல், மலர் தொடுத்தல், விளக்கிடுதல் ஆகிய கோவிற்பணி ஒவ்வொன்றிற்கும் தனித்தனிப்பயன் இருத்தலை

"விளக்கினார் பெற்றவின்ப மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கினன் மலர்தொடுத்தாற் றூய விண்ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ஞ்ஞெறி ஞானமாகும்
அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகடா மருளுமாறே" (4:77:3)

என்ற பாடல் உணர்த்தியுள்ளது.

அரும் பிறவி பெற்ற மானிடர் திருநின்ற செந்நெறி நின்று சிவப்பேறு பெற வேண்டும் என்ற பெரு நோக்குடையவர் அப்பர். அதனால் விண்ணக வேந்தனாதல், வானுலகாளுதல் போன்ற பயன்களுக்கு முதன்மையளிக்கவில்லை என்பது கருதற்குரியது.

### 3. மெய்யுணர்தல்

இம்மைச் செல்வம், மறுமைச் செல்வம் பெறுவதைவிட மெய்யுணர்தலாகிய ஞானச்செல்வம் பெறுதலே வழிபாட்டின் முக்கியப் பயனாகும்.

'ஞானப் பெருங்கடல்' (6:8:3), 'ஞான முதல் தனிவித்து' (5:91:2) 'மையறு ஞானச்சோதி' (5:52:7), 'காரணக் கலை ஞானக் கடவுள்' (5:68:2) என இறைவனையே ஞான வயப் படுத்தி அப்பர் குறித்துள்ளார்.

1. ஆரூர் அரநெறி கைதொழும் வாய்ப்பைப் பெற்றவர் ஞானஒளி பெறுவர் (4:17:5)
2. கள்ளம் இன்றி, மனம்ஒன்றி இறைவனிடம் ஈடுபட்டால் உள்ளத்தில் ஞானத்தைக் காண இயலும். (5:98:3)
3. குணங்களால் வணங்குவாரின் நெஞ்சில் ஞானம் உள் பொருளாகத் திகழும். (5:98:7)
4. கொடுஞ்சினத்தை அடக்கி நற்பண்புகளைப் பெருக்கினால் ஞானம் மேன்மேல் மிகும் நிலைவாய்க்கும். (6:76:9)
5. இறைவனை ஞானமாகிய தளை கொண்டு தன் நெஞ்சில் இருத்திக் கொள்ளலாம். (5:91:2)
6. கல்லாராயினும், வழிபடின் இறைவன் ஞானம் வழங்கி மெய்யுணரச் செய்வான். (6:11:4)

கல்வியில், கற்றவரோடு இணைந்து வாழவில்லை, நல்லவரோடு இணைந்து பயின்றதில்லை; தவமும் செய்ததில்லை, ஐம்புலன்களை வென்ற துறவோரோடு வாழ்ந்ததுமில்லை. இவற்றால், சமண்புக்க நிலையில் தனக்குச் சிவஞானமும், அதனை அடையும் வழிமுறைகளும் வாய்க்காது போயினவே; எனக் கழிவிரக்கப்படுகின்றார்.[24] அவர்தம் கழிவிரக்கப்பாடல்கள் யாவும் இறைவனை அடைவிக்கும் ஞானத்தைப் பெறுவதன் இன்றியமையாமையை உணர்த்துகின்றன.

### 4. அவா அறுத்தல்

ஐம்புலனை அடக்கி ஆளவல்லாரே பற்றற்ற நிலை கைவரப் பெறுவர். பிறபொருட்பற்றின்றி இறைப்பற்று ஒன்றே பெற்றிருப்பது அவா அறுத்தல் ஆகும். தூய்மை என்பது அவாவின்மை.

"அவாவென்ப வெல்லா உயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து" (குறள் : 361)

என்பர் திருவள்ளுவர். பற்றறுக்கத் தேவைப்படும் ஐம்புல வென்றியை இறையருளால் பெறலாம். ஐம்புலக் கள்வர் மீது ஞானக்கணை தொடுத்து, ஏமமாய சிவனருள் துணைகொண்டு வெல்லலாம் என்பது அப்பர் துணிபு. (4:77:5)

'கூற்றம்போல் ஐவர்' (4:52:6), 'வஞ்சக் கள்வர் ஐவர்' (6:99:3), 'ஐவர் மூர்க்கர்' (4:52:1), 'மதக்களிறு ஐந்து' (5:46:8), என ஐம்புல ஆற்றலைச் சுட்டிய அப்பர், இவற்றின் பிடியில் இருந்து விடுபட்டு உய்ய வேண்டுமாயின் இறையருள் வேண்டும் எனத் தெளிவுறுத்தியுள்ளார்.

'ஐம்புல மேலீட்டால், மத்துறு தயிரே போல' (4:52:9)

'கழியிடைத் தோணி போல' (4:31:6)

இவ்வுவமைகள் புலன்களுக்குள்ள மிக்க ஆற்றலைப் புலப் படுத்துவன. ஆற்றல்மிக்க அப்புலன்களை வென்று, பேராற்றல் மிக்க இறையருள் கைவரப்பெறுதலே நன்னெறி (4:52) என்பது அப்பர் காட்டும் நெறி.

## 5. வினை நீக்கம்

ஞானம் பெற்று, பற்றற்று வாழ்வோர் வினை நீக்கம் பெற்றால் தான் வீடுபேறு அடைய முடியும். இவ்வினை நீக்கத்திற்கு இறையருள் துணைபுரிகின்றது.

"அல்ல லென்செயும் அருவினை யென்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தா னெண்செயும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
எல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே" (5:1:4)

எனத் தம்மை வினைகள் தாக்காமைக்குக் காரணம் கூறியுள்ளார். வழிபட்டு இறையருளைப் பெற்றாரின் பாவங்கள் அழியும் (4:97:11); வினைகள் விலகும் (4:17:7); பழுதொன்றின்றிப் பரமனைத் தொழுது செல்பவர் தம்வினை தூளியே (5:41:3); 'ஆடிப்பாடி அண்ணாமலை கைதொழ ஓடிப்போம் நமது வினைகளே' (5:5:5) என்று வினை நீக்கப் பயன் பற்றிய செய்தி களை அப்பர் தம் பாடல்களில் மிகுதி யாகக் குறித்துள்ளார்.

## 6. சிவப்பேறு

வினைநீங்கப் பெற்றவரே சிவப்பேறு பெறுவர். அதுவே சிவவழிபாட்டின் முடிந்த பயன்.

"செம்மையுள் நிற்பராகில் *சிவகதி* விளையும் அன்றே" (4:76:2)

"தேறி நினைதியாயின் சிவகதி திண்ணமாகும்" (4:77:7)

". . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . உனதருளால்
திருவாய் பொலிய சிவாயநமவென்று நீறணிந்தேன்
தருவாய் *சிவகதி* நீ" (4:94:6)

"வெம்மையான வினைக்கடல் நீங்கி நீர்
செம்மையாய் *சிவகதி* சேரலாம்" (5:43:8)

என வழிபாட்டின் முடிந்த பயன் 'சிவகதி' என்பதனை அப்பர் உறுதிபடக் கூறியுள்ளார்.

## ஊ. சைவக் கொள்கைகள்

இறைவனின் இயல்புகளை உணர்ந்த அருளாளர்கள், உலகுய்யும் பொருட்டு அருளிய பாடல்கள், தோத்திரங்களாகும். இவற்றில் பொதிந்து கிடக்கும் அனுபவ உண்மைகளை முறைப் படுத்தித் தருவன சாத்திரங்களாகும். இவை சமய ஒழுக்க நெறியின் இலக்கணமாகத் திகழ்கின்றன. இச்சாத்திரங்களுக்குப் பெரிதும் மூலமாக உள்ளவை தோத்திரங்களே.

அப்பர் பாடிய திருப்பதிகங்களில் இறை (பதி), உயிர் (பசு), தளை (பாசம்) ஆகியவற்றின் தன்மைகள், தத்துவங்கள், உயிர்கள் வினை நீக்கம் பெற்றுச் சிவஞானந்தலைப்படுகின்ற தன்மை ஆகியன இடம் பெற்றுள்ளன. இக்கருத்துக்கள் 'சைவக் கொள்கைகள்' என்னும் தலைப்பில் ஈண்டு விளக்கப்படுகின்றன.

### 1. இறை உண்மை

இந்திய நாட்டில் தோன்றிய சமயங்களில் 'கடவுள் இல்லை' என்னும் கருத்துடையனவும், 'கடவுள் உண்டு' என்னும் கருத்துடை யனவும் இருந்தன. கடவுள் உண்மையை அடிப்படை யாகக் கொண்ட சமயங்களுள் சைவ சமயமும் ஒன்று. கடவுள் உண்டு; அவன் ஒருவனே; அவன் மும்மூர்த்திகளின் மேலானவன் என்ற வகையில் கடவுள் உண்மையைச் சைவசமய அருளாளர்கள் தோத்திரங்களின் வழியும் சாத்திரங்களின் வழியும் நிறுவியுள்ளனர்.

சைவசமய நாயன்மார்களுள் குறிப்பிடத்தக்கவராகிய அப்பர் இறை உண்மையைப் பலவிடங்களில் எடுத்து மொழிந்துள்ளார்.

"தானலா துலக மில்லை" (4:40:1)

"தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடியோங்களுக்கே" (4:94:1)

"புந்திவட்டத்திடைப்புக்குநின் றானையும் பொய்யென்பனோ" (4:98:1)

"உள்ளத்தில் ஒளியைக் கண்ட துள்ளமே" (5:98:3)

என்னும் பாடற் பகுதிகளில் உலகம் முழுவதும் தானாய்ப் பரவி நின்ற பரம்பொருளின் உண்மையைச் சுட்டித் தோன்றாத் துணையாய் அப்பரம்பொருள் இருக்கும் இயல்பினையும் சுட்டி அத்தகைய உள் பொருளைத் தம் உள்ளத்துள்ளே கண்டு கொண்டதாக அப்பர் மகிழ்ந்து கூறுகின்றார். (4:9:12)

வைணவ மதம், கடவுள் உண்மையை ஒப்புக்கொள்ளினும் கடவுளுக்கும் பிறப்பு உண்டு என்று கூறுகின்றது. ஞானம் தலைப்பட்டு,

'உடம்பும்மிகை' எனக் கருதும் ஞானியர்கட்குப் பிறப்பு என்பது இழிவாகவும் பெருந்துன்பமாகவும் தோன்றும். எனவே அவர்கள் பிறப்பு நீங்கிப் பேரின்ப வடிவாக உள்ள இறைவனை அடைதலே கடன் எனக் கருதுவர்.

அப்பர் கடவுளுக்குப் பிறப்பு உண்டு எனக் கூறுவோரைச்,

"செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகள்" (5:100:2)

"பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துட் பட்ட மனத்தர்" (5:100:9)

என்றும் எள்ளியுரைப்பர்.

உள் பொருளாகக் கருதப்பெறும் இறைவன், பிறவா, இறவாப் பேரியல்போடு திகழ்ந்து, ஊனும், உயிரும் உணர்வுமாய்க் கலந்து திகழ்கின்றான் என்பதை,

"பிறப்பிலார் இறப்பிலார் பிணி யொன்றில்லார்" (6:10:8)

"ஊனாகி உயிராகி யதனுள் நின்ற உணர்வாகி" (6:62:2)

என்று தெளிவுறுத்துவர். மணிவாசகரும், "ஊனாய் உயிராய் உணர்வாய் என்னுள் கலந்து" என்று மொழிந்திருப்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

இறைவன் பிறப்பு முதலான தொழில்கள் அனைத்தையும் கரணத்தால் செய்யாது, நினைத்த மாத்திரத்தில் செய்யும் தனிச் சிறப்பு வாய்ந்தவன்; ஆயினும் இத்தொழில்களால் வரும் மாறுபாடுகள் அவனுக்கு இல்லை என்பதனை அப்பர்,

"நோக்காதே எவ்வளவும் நோக்கினானை
நுணுகாதே யாதொன்றும் நுணுகி னானை
ஆக்காதே யாதொன்று மாக்கினானை" (6:11:5)

என்னும் பாடற்பகுதியில் விளக்குகின்றார்.

இறைவனின் ஒப்புவமையில்லாத பரத்துவத் தன்மையும், அவன் உயிர்களோடு ஒன்றாயும், உடனாயும், வேறாயும் இருந்து அருள்செய்யும் பெருங்கருணைத் திறமும் 'இறையியல்பு' என்னும் இவ்வியலின் முதற் பகுதியில் விளக்கப் பெற்றுள்ளன. இக்கருத்துக்கள் இறை யுண்மையை மேலும் வலியுறுத்து வனவாய் உள்ளன.

## 2. உயிர் உண்மை

தளையால் பிணிக்கப்பட்டிருப்பது 'உயிர்'. 'பசு', 'ஆன்மா' என்னும் சொற்களால் உயிர் சுட்டப்படுகின்றது. அப்பர் 'ஆன்மா' என்ற சொல்லையே எடுத்தாண்டிருப்பதும் கருதத்தக்கது. (4:45:2)

**இறையைப் போலவே உயிரும் உள்பொருள்; அழிவற்றது. ஆனால் அவ்வுயிர் தான் ஈட்டிய பாவ புண்ணியங்கட்கு ஏற்பப் *பல்வேறு உடல்களை ஏற்கும் இயல்புடையது.***

உயிர்கள் என்றும் உள்பொருளாயினும் தாமே உணரும் ஆற்ற லற்றவை. இறைவன் உணர்த்த உணரும் தன்மையைப் பெற்றுப் பின்னர் இறையருளில் ஒன்றுபடும் வாய்ப்பைப் பெறுகின்றது. "உயிராவணம் செய்திட்டு உன்கைத்தந்தால்" (6:25:1) என்ற பாடலடியில் அப்பர், உயிர் இறைவனுக்கு அடிமைப்படக் கூடியது என்று கூறுகின்றார்.

உயிர்கள் இறைவன் காட்டக்காணும் நிலையினைப் பெற்றிருப்பதால், அவனுடைய உதவி அவ்வுயிர்களுக்கு இன்றியமையாததாகின்றது. இதனை அப்பர்

"அவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே" (6:97:10)

என்று மேலும் தெளிவுறுத்துகின்றார்.

மணிவாசகர், "அவனருளாலே அவன்தாள் வணங்கி" எனக் கூறியிருப்பதும் இவண் நினையத்தக்கது. எனவே உயிர்கள் தாமே காணும் வல்லமையற்றன என்பதையும், உயிர்களின் மெய்யன்பு பற்றி அவற்றிற்கு உணர்த்தும் வாய்ப்பை இறைவனருளுவான் என்பதையும் அப்பர் பாடல்கள் கொண்டு உணரமுடிகின்றது.

உயிர்கள் தாமே உள்நோக்கித் தன்னை உணருமாறும், பக்தி செய்து மனம் உருகுமாறும், தன் புகழைப் பாடுமாறும் இறைவனே பணிக்கின்றான்.

"காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே" (6:95:3)

உயிர்கள் இறைவனைக் காண முடியாமைக்குக் காரணம், அவன் தன்னைக் காட்டிக் கொள்ளாமையே; இறைவன் தன்னைக் காட்டுவியாதபொழுது உயிர்கள் தாமே அவனைக் காண வல்லன அல்ல, என்ற பொருள்படும்படி அப்பர், மேற்கூறிய பாடலடிகளை அருளியிருப்பது சிந்தித்தற்குரியது.

உயிர் தன்னை இயக்குகின்ற தலைவனை ஞானத்தால் உணர்ந்து, வீடுபெறும் தன்மையுடையது என்பதனை அப்பர்,

"*ஊனாகி உயிராகி* யதனுள் நின்ற
*உணர்வாகிப்* பிறவனைத்தும் நீயாய் நின்றாய்
நானேதும் அறியாமே யென்னுள் வந்து
நல்லனவுந் தீயனவுங் *காட்டா நின்றாய்*" (6:62:2)

என உணர்த்துகின்றார். இப்பாடற்பகுதியில் 'ஊன்' பாசத்தையும், 'உயிர்' பசுவையும், 'உணர்வு', 'காட்டுதல்' ஆகியவை பதியையும் உணர்த்துகின்றன, மேலும் உயிர் சிவஞானம் கைவரப் பெற்று வீடுபெறுவதற்குரிய தன்மையினையும் சுட்டி நிற்கின்றன.

உயிர்கள் உள்பொருள்; அவற்றிற்குத் தலைவன் இறைவன், என்னும் இவ்வுண்மைகளை உள்ளடக்கி உணர்த்தும் வகையில் 'பசுபதி' என்னும் ஆட்சியை இறைவனுக்கு அப்பர் வழங்கி யுள்ளமை நோக்குதற்குரியது.

### 3. தளைகள்

உயிர்களைப் பிரிக்கும் தன்மையுடையவை தளைகள். இவை இருள், அஞ்ஞானம், பாசம், மலம் என்னும் குறியீடுகளால் குறிக்கப் பெறும். இத்தளைகள் ஆணவம், கன்மம், மாயை என மூவகைப்படும்.

### ஆணவம்

யான் எனது என்னும் தற்செருக்கு உணர்வே ஆணவமாகும். இவ்வுணர்வுடையார்க்கு இறைவன் முன்வந்து அருளாது தன்னை மறைத்துக் கொள்வான். இவ்வுணர்வற்று "யாவுமே முதல்வன், அவனே அனைத்தும்" என்ற எண்ணத்தோடு அவனை அடைய முயல்வோர்க்கு அவனருள் வாய்க்கும்.

"எம்பிரா னென்றதேகொண் டென்னுளே புகுந்துநின்றிங்
கெம்பிரா னாட்டவாடி யென்னுளே யுழிதர்வேனை
எம்பிரா னென்னைப் பின்னைத் தன்னுளே கரக்குமென்றால்
எம்பிரா னென்னினல்லா லென்செய்கே னேழையேனே" (4:76:3)

இப்பாடலில், அப்பர் உயிர் தன்முனைப்பற்று இருக்க வேண்டிய திறத்தினை எடுத்து மொழிந்துள்ளார்.

'யான்' என்னும் அறிவோன், 'எனது' என்னும் அறிவாலும் அதனால் அறியப்படுபொருளாலும் மயக்க உணர்வை அடைகின்றான். எனவே உயிர் தனிமைப்பட்டு ஆணவ மலத்தைப் பெறுகின்றது. இவ்வாணவம் உயிர்களோடு அனாதியாக இருந்து அவற்றின் அறிவையும் தொழிலையும் மறைத்து நிற்கின்றது. இதன் இயல்பை

"தினைத்தனையோர் பொறையிலா வுயிர்போங் கூட்டைப்
பொருளென்று மிகவுன்னி மதியா லிந்த
அனைத்துலகும் ஆளலா மென்று பேசும்
ஆங்காரம்" (6:42:5)

என்று அப்பர் புலப்படுத்தியுள்ளார்.

**மாயை**

உயிர்களை மயக்கும் தன்மையுடையது மாயை. வினைகள் தோன்றுவதற்கு இம்மாயையே காரணம். இது "நீர்மேல் எழுத்தும் நிகழ் கனவும் பேய்த் தேரும்போல"[26] நிலையின்றி இருப்பது.

"பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர் கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே" (6:27:1)

இப்பாடலில் அப்பர் வினைகளுக்குக் காரணமாகிய மாயையில் தாம் தொடக்குறவில்லை என்பதனையும் தமக்குக் காட்சிப்பட்ட உலகப் பொருள்களின் மயக்கில் சிக்கிவிடாது அவற்றுக்கு முதல் நிலையாகத் திகழும் பரம்பொருள் ஒன்றையே நோக்கி நின்றதனையும் தெளிவுறுத்தி யுள்ளமை குறிப்பிடத்தக்கது.

அப்பரின் இப்பாடற்கருத்தை அடியொற்றிச் சிவஞானபோத அதிகரணச் செய்யுள் ஒன்று அமைந்துள்ளமை இவண் ஒப்பு நோக்கத்தக்கது.

"இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும் - பின்செய்வினை
மாயையுடன் நில்லாது மற்றவன்றான் மெய்ப்பொருளே
ஆயஅதனால் உணரும் அச்சு"[27]

பெருங்காயம் வைத்த பாண்டத்தில் அதன் வாசனை மெலிதாய்த் தோன்றுதல் போலச் சிவஞானிகளிடம் எப்பொழு தேனும் மலங் களின் தாக்கம் ஏற்படின், சிவஞானத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டு அவர்கள் அம்மலங்களின் தாக்கு தலினின்றும் நீங்கி நிற்கும் நிலையைப் பெறுவர் என்பது இச்செய்யுளின் கருத்து. அப்பரின் தோத்திரப் பாடல் சாத்திரக் கருத்தாக உருவெடுத்தமையை ஈண்டு அறியமுடிகின்றது.

## 4. வினைக் கொள்கை

### கன்மம்

உயிர்கள் செய்யும் செயல்களாகிய நல்வினை தீவினைகள் ம் கன்மம் எனப்படும். இது மாயையுடன் கூடி நிற்பது. இக்கன்ம வினைகளே உயிர்கள் பிறப்பதற்குக் காரணங்களாக உள்ளன.

இந்தியச் சமயங்கள் அனைத்திற்கும் இவ்வினைக் கொள்கை பொது. வினை, வினை வகை, வினையின் செயற்பாடு, வினையின் ஆற்றல் ஆகியன பற்றிப் பழந்தமிழ் நூல்கள் குறிப்பிடுகின்றன.

> "ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
> ஒன்றி உயர்ந்த பால தாணையின்"[28]

எனத் தொல்காப்பியரும்,

> "ஊழிற் பெருவலி யாவுளமற் றொன்று
> சூழினுந் தான்முந் துறும்" (குறள் 380)

எனத் திருவள்ளுவரும் முறையே ஊழ் வகையினையும், ஊழின் ஆற்றலையும் குறித்துள்ளனர்.

தொல்வினை, உள்வினை, வருவினை என வினை மூன்று வகைப்படும். இவை முறையே இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய காலங்களில் பயன் விளைத்தல் பற்றிப் பழவினை நிகழ்வினை, மேல்வினை எனப் பெயர்பெறும்.

அப்பர் தம் பாடல்களில் பழவினை, தொல்வினை, மேலை வினை, வல்வினை, விளைவினை எனப் பல்வேறு சொற்களில் வினைகளைக் குறித்துள்ளார்.

> பந்தித்த பாவங்க *எம்மையிற்* செய்தன *விம்மை*வந்து
> சந்தித்த பின்னைச் சமழ்ப்பதென்னே" (4:113:4)

என முற்பிறவி வினை பிற்பிறவியில் வந்து தாக்கும் என்பதைச் சுட்டியுள்ளார். மேலும்,

> "*அல்ல*லென்செயும் *அருவினை*யென்செயும்
> தொல்லை *வல்வினைத்* தொந்தந்தா னென்செயும்" (5:1:4)

> "பண்டு செய்த *பழவினை*யின்பயன்
> கண்டுங் கண்டுங் களித்திகாண் நெஞ்சமே" (5:47:1)

என வரும் பாடற் பகுதிகளில் வருவினை, நிகழ்வினை, பழவினை ஆகிய மூன்றையும் குறிப்பிட்டுள்ளமை காணலாம்.

இவ் வினைகள் தாமே இயங்கா. வினைகளை ஆக்கிய உயிர்களிடம் செலுத்தி அவற்றிற்குரிய பயனைச் சேர்ப்பவன் இறைவனேயாவான். உயிர்கள் மீது அருள் வைத்து இருவினை களை நீக்கும் பணியையும் அவனே செய்கின்றான். இதனைச் சிவஞானபோதம், 'முயற்சியின் பயனை விளைவிக்கும் நிலம் போல வினை செய்வார்க்கு அவரவர் வினைப் பயனை இறைவன் கூட்டுவிப்பான். வினைப்பயன் தானே சென்று அவனை அடையாது' என்று தெளிவுறுத்தும்[29]

"பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழக்க வேண்டில்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
பொழிலாரூ ராவென்றே போற்றா நில்லே" (6:31:7)

என்ற பாடற்பகுதியில் வினை நீக்கம் பெறச் 'சிவனேகதி' என அப்பர் வழி காட்டியுள்ளார்.

பல பாடல்களில் வினை செய்யும் கொடுந் துன்பங்களைப் பற்றியும் அவற்றிலிருந்து மீட்டுக் காக்கும் இறைவனின் வல்லமை பற்றியும் அப்பர் குறிப்பிட்டுள்ளார்[30]. தாம் தாம் ஈட்டிய புண்ணிய பாவங்களாகிய நல்ல, தீய வினைகளை அவ்வவ்வுயிர்களே துய்க்க வேண்டும் என்பதும் சாத்திர முடிவு[31].

ஆனால் சமய குரவர்கள், உயிர்கள் அவ்வகையில் வினைப் பயனைத் துய்த்துத் துன்புறாவண்ணம், உயிர்களின் இருவினை களையும் நீக்கிக் காக்கும் இறைவனின் அருள் திறத்தினை மிகுதியும் போற்றியுள்ளனர். வினை நீங்கினாலன்றி மெய்யுணர்வு தோன்றாது என்பதும், இறைவனை வழிபடுவதே வினை நீக்கத்திற்கு வழி என்பதும் அப்பரின் முடிந்த முடிபுகள்.

### 5. தத்துவம்

தத்துவம் என்பதற்கு உண்மை என்பது பொருள். அது படைப்புக் காலம் முதல் ஒடுக்கக் காலம் வரை தன் தன்மையில் மாறாதிருப்பது. தத்-அதனது, த்வம்-தன்மை எனப் பிரித்து அதனது தன்மை என்று பொருள் கூறுவர்[32]. உயிர்களின் பொருட்டு மாயையில் இருந்து இறைவன் படைத்துக் கொடுப்பவை தத்துவங்கள். அவற்றின் காரியங்கள் தாத்துவிகங்கள். இறைவன் தத்துவங்களாகத் திகழ்வதை அப்பர்,

"தத்து வந்தலை நின்றவர்க் கல்லது
தத்து வனலன்" (5:46:7)

"தானன்றி வேறொன்றில்லாத் தத்துவன்" (6:50:7)

"தத்துவங்கள் ஆனான் தன்னை" (6:60:9)

"தன்னொப் பில்லாத் தத்துவன்" (6:64:4)

என்ற தொடர்களில் சுட்டியுள்ளார்.

முப்பத்தாறு தத்துவங்கள் என்றும், தொண்ணூற்றாறு தத்துவங்கள் என்றும் சைவ சமயம் கூறுகின்றது. முப்பத்தாறு தத்துவங்களுடன் அறுபது தாத்துவிகங்களைக் கூட்டித் தொண்ணூற்றாறு தத்துவங்கள் எனத் தொகைப்படுத்துவர்[33]. இத் தத்துவத் தொகைகளை அப்பர் தமது பாடல்களில்

"துருத்தியாங் குரம்பை தன்னிற் தொண்ணூற்றங் கறுவர் நின்று"

"முப்பது முப்பத்தாறு முப்பது மிடுகுரம்பை" (4:54:3)

"எண்பதும் பத்துமாறு மென்னுளே யிருந்துமன்னி" (4:70:3)

என்று குறிப்பிட்டுள்ளார்.

வைணவ சமயம் தத்துவம் இருபத்தைந்து எனக் கொண்டு இருபத்தைந்தாம் தத்துவம் வாசுதேவன் எனக் கூறும். சைவசமயம் அவற்றிற்கு மேல் பதினொன்று கூட்டி முப்பத்தாறு தத்துவங்கள் என வரையறுத்துள்ளது. இவ்வகையில் கீழ்ப்பட்ட தத்துவமாகிய வாசுதேவன் பரமசிவத்தின் ஆணை வழி நின்று காத்தல் தொழில் செய்வான்[34]. இக்கருத்தை உளங்கொண்டு அப்பர் சிவபெருமானை "ஐயஞ்சின் அப்புறத்தானும்" (4:4:10) என்று மொழிந்துள்ளமை நோக்குதற்குரியது.

கயிறுகள் அறப்பெற்ற ஊசல் தரையிற் சென்றடைவது போன்று தத்துவங்களினின்று நீங்கப்பெற்ற உயிர் இறைவனைச் சென்றடையும் என்பதை அப்பர் உவமை முறையில் ஒரு பாடலில் விளக்கியுள்ளார்.

"உறுகயி றூசல்போல வொன்றுவிட் டொன்றுபற்றி
மறுகயி றூசல்போல் வந்துவந் துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல் போலப் பிறைபுல்கு சடையாய்பாதத்
தறுகயி றூசலானே னதிகைவீ ரட்டனீரே" (4:26:6)

என்னும் இப் பாடலில் வரும் உவமையைக் கொண்டே மெய்கண்டாரும் சிவஞான போதத்தில் ஓர் ஏதுவாக,

"ஊசல் கயிறற்றால் தாய் தரையே யாந் துணையான்"[35]

என்று விளக்கியுள்ளார்.

## 6. அணைந்தோர் தன்மை

இறைவன் தாளைத் தலைப் பட்டவர்களின் தன்மையைக் கூறுவது 'அணைந்தோர் தன்மை' எனப்படும். உயிர்களுக்கும், இறைவனுக்கும் உள்ள தொடர்பில், உயிர் எய்தும் பயன் இறைவன் தாளைத் தலைப்படுதலாகும்.

அப்பரின் வாழ்வில் மனிதப் பிறவியின் மாண்புகள் யாவும் நிறைந்திருந்தன. திருநின்ற செம்மையாக உள்ள இறைவனையே அவர் தமது வாழ்வுச் செம்மைக்குப் பற்றுக் கோடாகக் கொண்டார். சிவன் என்னும் திருப்பெயர் ஒன்றே செம்மையானது; அதுவே வாழ்க்கைக்கு உறுதி பயப்பது என்னும் வகையில்,

"சிவ னெனு மோசையல்ல தறையோ வுலகிற்
றிரு நின்ற செம்மை யுளதே" (4:8:1)

என்று அவர் இறைவனின் திருப்பெயரைப் போற்றிப் பாடினார். இப்பாடற் பகுதியை அடிப்படையாகக் கொண்டே சுந்தரர்,

"திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்" (7:39:4)

என்று அப்பருக்கு வணக்கம் செலுத்தியுள்ள திறம் குறிப்பிடத் தக்கது.

முத்தியை அளிக்கும் அச்சிவபரம்பொருளைத் தம்மனத்துச் செம்மையாக இருத்திக் கொண்டமையால், அப்பர்,

"திருமாலொடு நான்முகனுந் தேடித் தேடொணாத் தேவனை
என்னுளே தேடிக்கண்டு கொண்டேன்" (4:92:12)

என்றும்,

"நாடி நாரணன் நான்முக னென்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்
தாடி பாதமென் நெஞ்சு ளிருக்கவே" (5:1:10)

என்றும் செம்மாப்போடு கூறுகின்றார். இங்ஙனம் சிவபெருமானை உள்ளத்தில் துணையாகக் கொண்டவர்கள் இவ்வுலகில் அச்சமும், துன்பமும் கொள்ள வேண்டியதில்லை, எவர்க்கும் பணிந்து வாழத் தேவையில்லை (6:98:1) என்றும்,

"வெம்ப வரு கிற்பதென்று கூற்றம் நம்மேல்
வெய்ய வினைப் பகையும் பைய நையும்
எம் பரிவும் தீர்ந்தோம் இடுக்கண் இல்லோம்" (6:95:2)

எனக் கூறும் பெருமிதம் அவர்கட்குக் கைகூடும் என்றும் உறுதி யளிக்கின்றார்.

திருமந்திரம் அச்சமின்மை, பற்றுநீக்கம், பிறவி நீக்கம், சித்தம் சிவமாகும் நிலை, செய்வன எல்லாம் சிவமாகக் காணும் நோக்கம், சிவப்பேறு கிட்டுதல் ஆகியவற்றை அணைந்தோர் தன்மையாகக் குறிப்பிட்டுள்ளது. (பா-ள்-2957-2981)

மெய்கண்டார் உயிர்கள் பாச நீக்கம் பெற்று அரன்கழல் நாடிச் செல்லுதலை அணைந்தோர் தன்மையாகக் குறிப்பிட்டுள்ள மையும் சுட்டத்தக்கது[36].

அப்பர் பாடல்களிலும், அணைந்தோர் தன்மைக்குரிய பேறுகள் விரிவாகக் கூறப் பெற்றுள்ளன.

1. சிவபெருமான் திருவடியைச் சேரப் பெற்றவர்கள் பிறப்பு, வினை, நரகம், ஆகியவற்றில் இருந்து விடுபட்டுச் சிவலோகத்தில் இருப்பர். (4:105:1)
2. அன்பு, அருள், எளிமை நிறைந்த சிவபெருமான் தன்னைச் சார்ந்தவர்களின் பிழையைப் பொறுத்துக் கருணை செய்வான். (6:95:8)
3. மண்ணுலகம் நிலநடுக்கத்தால் அழிந்து, பெருங்கடல் வெள்ளம் சூழ்ந்து, உலகம் அழியினும், இருசுடரும் வீழினும் இறைவனின் திருவடிகளை உறுதியான பற்றுக் கோடாகக் கொள்வோர் அஞ்ச வேண்டியதில்லை (4:94:9)

எனபன அபபா கூறும அணைநதோா தனமைகளாகும.

சிவபெருமான் திருவடிப் பேற்றினை நிலைபெறுமாறு அணைந்த அப்பர்,

"எமக்கென்றும் இன்பம் வைத்தார்" (4:38:4)

"நன்மையே தீமையில்லை" (4:40:9)

"திருவடி பரவியேத்தக் குறைவிலேன்" (4:76:9)

"பொற் கழல் ஈங்கிருக்கப் பெற்றேன் என்ன
குறையுடையேன் (4:20:4)

எனக் கூறுவன, அணைந்தோர் தன்மையின் அனுபவ வெளிப் பாடுகளாகத் திகழ்கின்றன.

இலக்கியத்திலிருந்து இலக்கணம் காண்பது போலத் தோத்திரத் திலிருந்து சாத்திரம் காண்பது இயல்பு. 'தோத்திரமும், சாத்திரமும் ஆனார்தாமே' என்று அப்பர் சிவபெருமானோடு இரண்டையும் இணைத்து இவ்வுண்மையைக் குறித்துள்ளார். சிவஞானபோதம், சிவஞான சித்தியார் போன்ற சாத்திரங்கள் தோன்றியமைக்கு அப்பர் பாடல்கள் பெரிதும் துணை புரிந்துள்ளன. அவர், தம்முடைய தோத்திரப் பாடல்களில்

சைவ, சமய சாத்திரத்திற்கும் அடித்தளமிட்டுச் செல்கின்றார். இவ் வகையில் அவர் ஒரு முன்னோடியாகவும் விளங்குகின்றார்.

### முடிபுகள்

இறையியல் இறைவனைப் பற்றியது மட்டுமன்று; மனிதனை யும் உள்ளடக்கியது.

பல்வேறு சமயங்கட்கும் பரம்பொருளாய்த் திகழ்வது 'சிவபரம் பொருளே' என்பது அப்பர் முடிபு.

படைத்தல் முதலான எத்தொழில் புரியும் தெய்வமாயினும் முழுமுதல் தன்மையால் சிவனே தலைவனாவான்.

பேராற்றலும் பேரருளும் நிறைந்த நிலையைச் சிவனின் எண்குணத் தன்மை காட்டுகின்றது.

சமணத்திலிருந்து மீண்டு சைவம் சேர்ந்த அப்பரிடம் தன்னிரக்கவுணர்வு மேலோங்கி இருப்பதால் அதன் அடிப்படை யிலான பாடல்களே மிகுந்துள்ளன.

சிவத்திருக்கோலங்களில் 'ஆடல்வல்லான்', 'அம்மையப்பர்', பிச்சாடனர்' கோலங்கள் உள்ளங்கவர்ந்தன என்பதால் அவை அப்பர் பாடல்களில் பெரும்பங்கு வகிக்கின்றன.

திருமேனிகளுக்கு நிகராகத் திருக்கோவில்களை வணங்கும் முறைமையைத் தோற்றுவித்து வளர்த்த பணியை அப்பர் தேவாரம் செய்துள்ளது.

இறைவணக்கம் போலவே அடியார் வணக்கமும் அப்பரால் போற்றப்பட்டுள்ளது.

ஓரிறைக் கொள்கையை வற்புறுத்தி அப்பர் சைவ சமயத் திற்கு ஏற்றம் தந்துள்ளார்.

சரியை முதலாய நான்கு நெறிகளில் நால்வரை முறைப் படுத்திக் கூறுவது திருமுறை முடிபுகளுக்கு மாறாய் உள்ளது.

திருவைந்தெழுத்தும் திருநீறு முதலான சிவச்சின்னங்களும் கொண்டு மக்களிடையே சமய ஈடுபாடு ஏற்படுத்தப் பெற்றுள்ளது.

அப்பரின் முறையீடுகள் அவரின் மனித நேயத்தை உணரச் செய்கின்றன.

பல்வேறு வழிபடு முறைகளைக் கூறிய அப்பரே, சில சடங்குகளைக் கண்டித்துள்ளார்.

மெய்யுணர்ந்து, அவாவறுத்து, சிவப்பேறு பெறுதலே முடிவான வழிபாட்டுப் பயனாகும்.

சைவசித்தாந்த முடிபுகள் உருவாவதற்கு அப்பர் பாடல்கள் முதன்மைக் களங்களாகத் திகழ்கின்றன.

தனிமனித இன்பத்திற்கும், மனித சமுதாய அமைதிக்கும் அப்பர் பெருமானின் வாழ்வியல் நெறிகளும், இறையியல் உண்மைகளும் நேரிய வழிகாட்டுதல்களாகத் திகழ்கின்றன.

**அடிக்குறிப்புக்கள்**

1. Encyclopaedia Americana, Vol. 26, P. 633
2. Ibid
3. Chamber's Encyclopaedia, Volume xiii p. 596
4. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி - 4, ப. 516
5. Chamber's Encyclopaedia, Volume xiii p. 596
6. Ibid.
7. Encyclopaedia Americana, Vol. 26 p. 634
8. Ibid.
9. நடேச கவுண்டர், கு., அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், ப. 347.
10. மேலது, சூ-1, செ. 34
11. குறள்-9, பரிமேலழகர் உரை.
12. திருநாவுக்கரசர் தேவாரம், தருமபுர ஆதீனப்பதிப்பு, அருணை வடிவேல் முதலியார் உரை, ப. 413.
13. வெள்ளைவாரணனார், க., பன்னிரு திருமுறை வரலாறு, பகுதி-2, ப. 338
14. அருணாசலம், ப., சைவசமயம், பக். 3-5
15. நடேச கவுண்டர், கு., அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், ப. 254.
16. சிவஞா. சித். சுபக்கம், செய் - 75
17. அப்பர் தேவாரம், 6:7; 6:33; 6:22; 6:69; 6:51
18. தாயுமானவர் பாடல்கள், பராபரக்கண்ணி, 167.
19. வெள்ளைவாரணனார், க., பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பகுதி, ப. 860.
20. அருணாசலம், ப., பக்தி இலக்கியம், பக். 144-146
21. தெ.பொ.மீ. மணிவிழா மலர், (க.ஆ.) சுவாமி பரமானந்தர்
22. நடேச கவுண்டர், கு., அப்பர் வரலாற்றாராய்ச்சியும், தேவாரத் திறனாய்வும், ப. 326
23. ஆறுமுக நாவலர், சைவ வினாவிடை, இரண்டாம் புத்தகம், ப. 33.

24. அப்பர் தேவாரம், 4:54:7; 4:52:8; 4:78:1,2, 5:33:2; 6:5:10; 6:94:9.
25. மேலது, 6:29:6; 4:37:6,7; 4:46:5; 4:91:2
26. சிவஞானபோதம், சூ. 6, அதி. 1
27. மேலது, சூ. 10, அதி. 2
28. தொல்-பொருள், களவு.நூ.2
29. சிவஞானபோதம், சூ.2, அதி.2.
30. அப்பர் தேவாரம், 4:86:9; 4:79:3; 4:105:4, 5:42:9; 5:66:7; 6:10:5.
31. சிவஞானபோதம், சூ.2, அதி.2.
32. சைவ சித்தாந்தத் திறவு, ப.99.
33. பின்னிணைப்பு; எண் 5
34. சிவஞானபோத மூலமும் சிற்றுரையும், ப. 15
35. சிவஞானபோதம், சூ. 8, அதி. 4
36. மேலது, சூ. 206.

# துணைநூற்பட்டியல்

**முதன்மை நூல்கள்**


திருநாவுக்கரசர் - திருநாவுக்கரசர் தேவாரத் திருப்பதிகங்கள், நாலாந்திருமுறை, முத்து சு. மாணிக்க வாசக முதலியார் (உரை), தருமபுர ஆதீனம், தருமபுரம், 1957.

———————— - திருநாவுக்கரசர் தேவாரத் திருப்பதிகங்கள், ஐந்தாந்திருமுறை, சொ. சிங்காரவேலன் (உரை), தருமபுர ஆதீனம், தருமபுரம், 1961.

———————— - திருநாவுக்கரசர் தேவாரத் திருப்பதிகங்கள், ஆறாந்திருமுறை, சி. அருணை வடிவேல் முதலியார் (உரை), தருமபுர ஆதீனம், தருமபுரம், 1961.

———————— சுந்தரர் - திருநாவுக்கரசர் சுந்தரர் தேவாரப் பதிகங்கள், கயப்பாக்கம் சதாசிவ செட்டியார், கழக வெளியீடு, சென்னை, 1973, மறுபதிப்பு.

———————— - தேவாரம் (பண்முறை) அப்பரும் சுந்தரரும் கோபாலையர் டி.வி (ப.ஆர்) இந்தியப் பிரெஞ்சுப் பண்பாட்டுக்கழகம், பாண்டிச்சேரி, 1985.

———————— - அடங்கன்முறைத் தேவாரப் பதிகங்கள், சுந்தரர், கா. குமாரசாமி முதலியார் (ப.ஆர்), ஆறுமுக திருஞானசம்பந்தர் விலாச அச்சுக்கூடம், சென்னை, 1893.

———————— - திருநாவுக்கரசர் தேவாரம் (தலமுறை) காசிமடம், ஸ்ரீவைகுண்டம், 1970.

திருநாவுக்கரசர், சுந்தரர், திருஞானசம்பந்தர் - மூவர் தேவாரம் (தலமுறை) மகாதேவன், வே (ப.ஆர்), ஸ்ரீகாமகோடி ஆய்வு மைய வெளியீடு, கும்பகோணம், 1988.

| | |
|---|---|
| கந்தசுவாமி முதலியார் | - காஞ்சிப்புராணம், கலாநிதி அச்சுக்கூடம், சென்னைப் பட்டணம், வெகுதானிய ஆண்டு, புரட்டாசி மீ. |
| கலியாண சுந்தரனார், திரு.வி. | - மனித வாழ்க்கையும் காந்தி அடிகளும், அரசு புக் டிப்போ, மைலாப்பூர், சென்னை - 4, ஏப்ரல் 1969, 9-ஆம் பதிப்பு. |
| ———————— | - நாயன்மார் வரலாறு, சாது அச்சுக்கூடம், சென்னை, 1958, மூன்றாம் பதிப்பு. |
| காந்தி, க. | - தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை - 20, முதற்பதிப்பு. |
| கிருஷ்ணன், ப. | - தமிழ் நூல்களில் தமிழ்மொழி, தமிழ் இனம், தமிழ்நாடு, இளந்தமிழர் பதிப்பகம், சென்னை, 1984, முதற் பதிப்பு. |
| குன்றக்குடி அடிகளார் | - வானொலியில்... கலைவாணி புத்தக நிலையம், சென்னை 1975, முதற்பதிப்பு. |
| ———————— | - அப்பர் விருந்து, கலைவாணி புத்தகாலயம், சென்னை, 1990. |
| கைலாசபதி, க. | - பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், மக்கள் வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு. |
| ———————— | - சமூகவியலும் இலக்கியமும், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1988, இரண்டாம் பதிப்பு. |
| சதாசிவ பண்டாரத்தார், டி.வி. | - தமிழ் இலக்கிய வரலாறு, 13,14,15 நூற்றாண்டுகள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர், 1963. |
| சித்தலிங்கம், டி.பி. | - சைவசமயத் தோற்றமும் வளர்ச்சியும், சோமு நூலகம், சென்னை, 1979. |
| சிவப்பிரகாச சுவாமிகள் | - நால்வர் நான்மணிமாலை, வை. இரத்தின சபாபதி (உரை) மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1969. |

சுப்பிரமணிய பிள்ளை, கா. - அப்பர் சுவாமிகள் சரித்திரம், கழகம், சென்னை, 1970.

சுப்பிரமணிய முதலியார், சி.கே. - வாகீசர் அல்லது மெய்யுணர்தல், ஸ்ரீ அக்னீசுவரர் கோயில் வெளியீடு, திருப்புகலூர், 1959, முதற் பதிப்பு.

சுப்பிரமணிய பிள்ளை, ஜி. - வாசகரும் வாகீசரும், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், ஜூலை 1968, இரண்டாம் பதிப்பு.

சுப்புரெட்டியார், ந. - சைவசமய விளக்கு, வேங்கட வெளியீடு, சென்னை - 40, 1984, முதற்பதிப்பு.

——————— - நாவுக்கரசர், ஐந்திணைப் பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை, 1986, முதற்பதிப்பு.

செங்கல்வராயப் பிள்ளை, வ.சு. - தேவார ஒளிநெறி (1, அப்பர்) முதல் தொகுதி, கழக வெளியீடு, சென்னை, 1960, முதற்பதிப்பு.

——————— - தேவார ஒளிநெறி (2 அப்பர்) இரண்டாம் தொகுதி, கழக வெளியீடு, சென்னை, 1962, முதற்பதிப்பு.

சேக்கிழார் - திருத்தொண்டர்மாக்கதை, ப. இராமநாத பிள்ளை, (ப.ஆ) கழக வெளியீடு, சென்னை, 1970.

——————— - திருத்தொண்டர் புராணம் (மூன்றாம் பகுதி - முதற் பாகம்), சுப்பிரமணிய முதலியார், சி.கே (உரை) கோவைத் தமிழ்ச்சங்கம், கோயமுத்தூர், 1943.

சேதுப்பிள்ளை, ரா.பி. - திருவள்ளுவர் நூல் நயம், கழக வெளியீடு, சென்னை - 1965, ஐந்தாம் பதிப்பு.

ஞானசம்பந்தன், அ.ச. - பெரியபுராணம்-ஓர் ஆய்வு, தமிழ்ப் பல்கலைக்கழகத் தத்துவ மையம், காஞ்சிபுரம், தமிழ்ப்பல்கலைக் கழக வெளியீடு - தஞ்சாவூர் - 1987 முதற்பதிப்பு.

ஞானமூர்த்தி, தா.ஏ. - சமணம், சென்னைப் பல்கலைக்கழகம், 1977, முதற்பதிப்பு.

தாயுமானவ சுவாமிகள் - தாயுமானவ சுவாமி பாடல்கள், ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த் துறை, 1980, முதற்பதிப்பு.

திருஞானசம்பந்தர் - தேவாரம்-பண்முறை, முதல் மூன்று திருமுறைகள் - கோபாலையர், டி.வி (பதி), இந்திய பிரெஞ்சு நிறுவனம், பாண்டிச்சேரி, 1984.

திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி - திருநாவுக்கரசுதேவர், திருஏகாதசமாலை, ரா. சண்முகசுந்தரம் செட்டியார் (உரை) ஸ்ரீ அக்னீஸ்வரர் தேவஸ்தானம் திருப்புகலூர், 1961.

திருநாவுக்கரசு, க.த. - திருக்குறள் நீதி இலக்கியம், சென்னைப் பல்கலைக் கழகம், 1977, மறுபதிப்பு.

திருமூலர் - திருமந்திரம், ஸ்ரீகுமரகுருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம், 1976.

திருவள்ளுவர் - திருக்குறள்-பரிமேலழகர் உரையுடன், கழக வெளியீடு, சென்னை, 1970.

துரைசாமிப்பிள்ளை, ஔவை, சு. - சைவ இலக்கிய வரலாறு (கி.பி. 7 முதல் 10-ஆம் நூற்றாண்டு வரை), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1958, முதற்பதிப்பு.

தேவசேனாபதி, வ.ஆ. - சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள் டாக்டர். எஸ். இராதாகிருஷ்ணன், மெய்யுணர்வு மேல்நிலைக்கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக்கழகம், 1987.

தொல்காப்பியர் - தொல்காப்பியம் - பொருளதிகாரம் இளம்பூரணர் உரையுடன், கழக வெளியீடு, சென்னை, 1969.

நடேச முதலியார், அ. - திருவாமூர் திருநாவுக்கரசு நாயனார் வரலாறு, திருவாமூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள், குருபூஜை விழாக்குழு, சிதம்பரம், 1977.

நடேச கவுண்டர், கு. - அப்பர் வரலாற்றாராய்ச்சியும், தேவாரத் திறனாய்வும், கழக வெளியீடு, சென்னை, 1972.

பரமசிவானந்தம், அ.மு. - சமுதாயமும் பண்பாடும், தமிழ்க்கலைப் பதிகம், சென்னை-30, செப்டம்பர், 1962.

பாலச்சந்திரன், சு. - இலக்கியத் திறனாய்வு, அணியகம், சென்னை, 1975.

பாஸ்கரத் தொண்டைமான், தொ.மு. - வேங்கடம் முதல் குமரி வரை (பொன்னியின் மடியிலே) சித்திரக்கூடம், எல்.ஆர். சுப்பிரமணிய பிள்ளை பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி - 6, 1961, முதற்பதிப்பு.

பிங்கல முனிவர் - பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு கழக வெளியீடு, சென்னை, 1968.

பிள்ளை, கே.கே. - தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1981, மறுபதிப்பு.

மாணிக்கம், வ.சுப. - தமிழ்க்காதல், பாரி நிலையம், சென்னை-1, 1980, மூன்றாம் பதிப்பு.

மாணிக்கவாசகர் - திருவாசகம், ஸ்ரீகுமரகுருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம், 1975.

முருகவேள், ந.ரா. - சைவசித்தாந்தம், சேக்கிழார் பதிப்பகம், குன்றத்தூர், சென்னை, 1964, முதற்பதிப்பு.

ரீட்டா முதலியோர் (ப.ஆர்) - அன்னம் (இறையியல் சிற்றேடு) பண்பாடு-மக்கள் தொடர்பகம், இலயோலா கல்லூரி, சென்னை - 24, 1988, ஜனவரி.

லஷ்மணன், கி. - இந்திய தத்துவ ஞானம், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-14, 1980, மூன்றாம் பதிப்பு.

| | |
|---|---|
| வித்தியானந்தன், சு | - தமிழர் சால்பு (சங்க காலம்), பாரி புத்தகப் பண்ணை, சென்னை-5, 1971, இரண்டாம் பதிப்பு. |
| வெள்ளைவாரணர் | - பன்னிரு திருமுறை வரலாறு-முதற் பகுதி, (முதல் ஏழு திருமுறைகள்) அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1972. |
| ———————— | - பன்னிரு திருமுறை வரலாறு-இரண்டாம் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1969. |
| வேலுப்பிள்ளை, ஆ. | - தமிழர் சமய வரலாறு, பாரி புத்தகப் பண்ணை, திருவல்லிக்கேணி, சென்னை, 1980, முதற்பதிப்பு. |
| ———————— | - தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பாரி புத்தகப்பண்ணை, சென்னை-5, 1985, மூன்றாம் பதிப்பு. |
| வேங்கடசாமி, மயிலை. சீனி | - சமணமும் தமிழும், கழக வெளியீடு, சென்னை-1, ஆகஸ்ட், 1980. |
| ———————— | - நற்றிணை-மூலமும் உரையும், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், சைவ வித்தியாபாது பாலன யந்திர சாலை, சென்னை, இராவுச ஆண்டு. |
| ———————— | - பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினி யருரையும் உ.வே. சாமிநாதையர் (ப.ஆர்), டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1974. |
| ———————— | - பரிபாடல் மூலமும் பரிமேலழகருரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையா நூல் நிலையம், சென்னை, 1980, ஐந்தாம் பதிப்பு. |
| ———————— | - புறநானூறு மூலமும் பழைய உரையும், உ.வே.சா. பதிப்பு, டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை-41, 1971, ஏழாம் பதிப்பு. |

Balasubramaniam, K.M. - Special Lectures on Saiva Siddhanta, Annamalai University, 1959.

Pande, Susmita - Birth of Bhakti in Indian Religions and Art, Books and Books Publishers, New Delhi 1982, First Edition.

Satchidananda Murthy, K. - Philosophy in India, Traditions Teaching and Research, Indian Council of Philosophical Research, New Delhi, First Edition, 1985.

Vanmikanathan, G. - Appar, Sahitya Akademi, New Delhi - 110 001, 1983, First Edition.

**கட்டுரைகள்**

அண்ணாமலை, சுப. - *அப்பரடிகளும் வழிபாடும்,* பேராசிரியர் டாக்டர் தமிழண்ணல் மணிவிழா மலர், மதுரை, 1989.

இலட்சாராமன், இரா. - *திருமுறையில் இயற்கை-ஒரு குறியீடு,* இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி-1, ச. அகத்தியலிங்கம் (ப.ஆர்) இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர், 1988.

குன்றக்குடி அடிகளார் - *ஏழில் இருபது*, அப்பரடிகள் (கட்டுரைத் தொகுதி), தமிழ்நாடு தெய்விகப் பேரவை, சென்னை, 1973.

சுந்தரமூர்த்தி, கு. - *அப்பரடிகளின் தொண்டுநெறி,* அப்பரடிகள் (கட்டுரைத் தொகுதி), தமிழ்நாடு தெய்விகப் பேரவை, சென்னை, 1973.

சுந்தரேசன், ப. - *அப்பரடிகளும் இசையும்,* அப்பரடிகள் (கட்டுரைத் தொகுதி) தமிழ்நாடு தெய்விகப் பேரவை, சென்னை, 1973.

செங்கல்வராயப் பிள்ளை, வ.சு. - *திருநாவுக்கரசர்,* கலைக்களஞ்சியம் - தொகுதி 6, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

—————— - *தேவாரம்,* கலைக்களஞ்சியம், தொகுதி-6, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

—————— - *தேவாரமும், பண்ணும்* செந்தமிழ்ச் செல்வி-25, கழக வெளியீடு, 1950-51.

தண்டபாணி தேசிகர், ச. - *அப்பர் அடிகள் அருளுபதேசம்,* அப்பரடிகள் (கட்டுரைத் தொகுதி), தமிழ்நாடு தெய்விகப் பேரவை, சென்னை, 1973.

திலகவதி, பு.இரா. - *திருநாவுக்கரசரின் அகப்பாடல்கள்,* இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி-4, ச. அகத்தியலிங்கம் (ப.ஆ), இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர், 1988.

தேவசேனாபதி - *அப்பரடிகளும் வழிபாடும்,* அப்பரடிகள் (கட்டுரைத்தொகுதி), தமிழ்நாடு தெய்விகப் பேரவை, சென்னை, 1973.

முப்பால்மணி - *தமிழகத்தில் உலகாயிதம்,* தாமரை, 30-ஆம் ஆண்டு மலர், சென்னை.

முருகவேள், ந.ரா. - *அப்பரைப் பற்றிய ஓர் ஆய்வுரை,* அப்பரடிகள், (கட்டுரைத் தொகுதி) தமிழ்நாடு தெய்விகப் பேரவை, சென்னை, 1973.

வச்சிரவேல் முதலியார், க. - *சாத்திரமும் தோத்திரமும்,* திரிசிரபுரம் சைவ சித்தாந்த சபை நூற்றாண்டு விழா மலர், திருச்சி, 1984.

வேங்கடசாமி நாட்டார், ந.மு. - *திருநாவுக்கரசர்,* மணிமலர் (பண்டித மணி மு. கதிரேசச் செட்டியார் 60-வது ஆண்டு நிறைவு விழா மலர்), 1941.

வேனிலா ஸ்டாலின் - *சமணரும் சித்தரும்-ஓர் ஒப்பீடு* தமிழ் இலக்கிய ஆய்வுக்கோவை, தொகுதி-1, ப.ச. அகத்திய லிங்கம் (ப.ஆ), அனைத்திந்திய தமிழ் இலக்கியக் கழகம், தஞ்சாவூர்-5, 1989.

**கலைக்களஞ்சியம் - அகராதி**

பாலுசாமி, ந. - வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-4, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ஏப்ரல், 1987, முதற்பதிப்பு.

பெரியசாமித் தூரன் - கலைக்களஞ்சியம், தொகுதி 6, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

Sills, David, L. - International Encyclopaedia of the Social Sciences, Vol. 1 & 2, Collier Macmillan Publishers, London 1972, Reprint.

Vaiyapuri Pillai, S. - Tamil Loxican, Vol.I, Part II University of Madras, 1925.

—— - Chamber's Encyclopaedia, Vol. xiii New Revised Edition Learning systems corporation Limited, 1973.

—— - Encyclopaedia Americana, Vol.26, Americana Corporation, New York 1976.

—— - The Compact Edition of the Oxford English University, Vol. II, Oxford of the Clarendon Press, 1971.

—— - Webster's New Colleciate Dictionary - Indian Edition, Scientific Book Agency, Calcutta, 1981.

**ஆய்வேடுகள்**

பரிமணம், அ.மா. - அப்பர் தேவார ஆய்வு, பி.எச்.டி. பட்ட ஆய்வேடு, மதுரைப் பல்கலைக்கழகம், 1974.

Balasubramanian, V.T. - A study of Thirunavukkaracar's Tevaram, M.Litt. Thesis, University of Madras, 1967.

Singaravelu, C. - A Linguistic and Critical study of Appar Tevaram Hymns, Ph.D. Thesis, Annamalai University, 1972.

# பின்னிணைப்பு எண் : 1

## அப்பர் வழிபட்ட தலங்கள் : 120

அதிகை, அண்ணாமலை, அரிசிற்கரைப் புத்தூர், அவளிவணல்லூர், அன்பிலாலந்துறை, அன்னியூர், ஆக்கூர், ஆப்பாடி, ஆமாத்தூர், ஆரூர், ஆரூர் அரநெறி, ஆலங்காடு, ஆலம்பொழில், ஆலவாய், ஆவடுதுறை, ஆனைக்கா, இடைமருதூர், இராமேச்சுரம், இன்னம்பர், எறும்பியூர், ஐயாறு, ஒற்றியூர், ஓமாம் புலியூர், கச்சி ஏகம்பம், கச்சிமேற்றளி, கஞ்சனூர், கடம்பந்துறை, கடம்பூர் (கரக்கோவில்), கடவூர்மயானம், கடவூர் வீரட்டம், கடுவாய்க்கரைப் புத்தூர், கண்டியூர், கயிலாயம், கருகாவூர், கருவிலிக் கொட்டிட்டை, கழிப்பாலை, கழுக்குன்றம், கற்குடி, கன்றாப்பூர், காட்டுப்பள்ளி, காழி, காளத்தி, கானூர், கீழ்வேளூர், குடந்தைக் கீழ்க்கோட்டம், குடமூக்கு, குரக்குக்கா, குரங்காடுதுறை (தென்), குறுக்கை, கொட்டையூர், கொண்டீச்சரம், கோகர்ணம், கோடிகா, கோயில், கோவலூர், கோழம்பம், கோளிலி, சத்திமுற்றம், சாய்க்காடு, சிராப்பள்ளி, சிவபுரம், செங்காட்டங்குடி, செம்பொன்பள்ளி, சேறை, சோற்றுத்துறை, தலையாலங்காடு, துருத்தி (குற்றாலம்), நல்லம், நல்லூர், நள்ளாறு, நனிபள்ளி, நாகேச்சரம், நாகைக்காரோணம், நாரையூர், நின்றியூர், நீலக்குடி, நெய்த்தானம், நெல்வாயில் அரத்துறை, பந்தணை நல்லூர், பயற்றூர், பராய்த்துறை, பருப்பதம், பழனம், பழையாறை வடதளி, பள்ளியின் முக்கூடல், பாசூர், பாண்டிக் கொடுமுடி, பாதிரிப் புலியூர், பாலைத் துறை, புகலூர், புத்தூர், புள்ளிருக்கு வேளூர், புறம்பயம், பூண்கூர், பூந்துருத்தி, பூவணம், பூவனூர், பெண்ணாகடம், பெருவேளூர், பேரெயில், பைஞ்ஞீலி, மங்கலக்குடி, மணஞ்சேரி, மயிலாடுதுறை, மருகல், மழபாடி, மறைக்காடு, மாற்பேறு, மீயச்சூர் இளங்கோயில், முண்டீச்சரம், முதுகுன்றம், வலஞ்சுழி, வலம்புரம், வலிவலம், வன்னியூர், வாஞ்சியம், வாட்போக்கி, வாய்மூர், வான்மியூர், விசய மங்கை.

## பின்னிணைப்பு எண் : 2

### பாடல் எண்ணிக்கை அடிப்படையில் பதிகங்களின் அமைப்பு

| வரிசை எண் | பாடல் எண்ணிக்கை | பதிகங்கள் | | | பதிகங்களின் தொகை |
|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | |
| 1 | 1 | 1 | - | 1 | 2 |
| 2 | 2 | 4 | - | 1 | 5 |
| 3 | 3 | 2 | - | - | 2 |
| 4 | 4 | 1 | 1 | - | 2 |
| 5 | 5 | - | 1 | - | 1 |
| 6 | 6 | 2 | 1 | 1 | 4 |
| 7 | 7 | 2 | 2 | 1 | 5 |
| 8 | 8 | 2 | 2 | 2 | 6 |
| 9 | 9 | 5 | 6 | 5 | 16 |
| 10 | 10 | 80 | 62 | 66 | 208 |
| 11 | 11 | 12 | 22 | 21 | 55 |
| 12 | 12 | 1 | 2 | 1 | 4 |
| 13 | 20 | 1 | - | - | 1 |
| 14 | 30 | - | 1 | - | 1 |
| | பதிகங்களின் தொகை | 113 | 100 | 99 | 312 |

# பின்னிணைப்பு எண் : 3

## தல அடிப்படையில் அப்பர் பதிகங்களும் பாடல்களும்

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| | நடுநாட்டுத் தலங்கள் : 9 | | | | | |
| 1. | திரு அதிகை | 1, 2, 10, 24, 25, 26, 27, 28, 104 | 53, 54 | 3, 4, 5, 6, 7 | 16 | 158 |
| 2. | திருப்பாதிரிப்புலியூர் | 94 | - | - | 1 | 10 |
| 3. | திருமுண்டீச்சரம் | - | - | 85 | 1 | 9 |
| 4. | திரு ஆமாத்தூர் | - | 44 | 9 | 2 | 21 |
| 5. | திருக்கோவலூர் | 69 | - | - | 1 | 10 |
| 6. | திருப்பெண்ணாகடம் | 109 | - | - | 1 | 3 |
| 7. | திரு நெல்வாயில் அரத்துறை | - | 3 | - | 1 | 10 |
| 8. | திருமுதுகுன்றம் | - | - | 68 | 1 | 10 |
| 9. | திரு அண்ணாமலை | 63 | 4, 5 | - | 3 | 30 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| | **சோழ நாட்டுத் தலங்கள் : 99** | | | | | |
| 10. | தில்லைச் சிற்றம்பலம் (கோயில்) | 22, 23, 80, 81 | 1, 2 | 1, 2 | 8 | 83 |
| 11. | திருவேட்களம் | -- | 42 | -- | 1 | 10 |
| 12. | திருக்கழிப்பாலை | 6, 30, 106 | 40 | 12 | 5 | 42 |
| 13. | திரு நாரையூர் | -- | 55 | 74 | 2 | 20 |
| 14. | (சீர்) காழி | 82, 83 | 45 | -- | 3 | 21 |
| 15. | குரக்குக்கா | -- | 75 | -- | 1 | 10 |
| 16. | புள்ளிருக்கு வேளூர் | -- | 79 | 54 | 2 | 19 |
| 17. | திருப்புன்கூர்-நீடூர் | -- | -- | 11 | 1 | 10 |
| 18. | திருக்குறுக்கை | 49, 50 | -- | -- | 2 | 20 |
| 19. | திருநின்றியூர் | -- | 23 | -- | 1 | 10 |
| 20. | திரு நனிபள்ளி | 70 | -- | -- | 1 | 9 |
| 21. | திரு வலம்புரம் | 55 | -- | 58 | 2 | 20 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| 22. | திருச் சாய்க்காடு | 65 | -- | 82 | 2 | 20 |
| 23. | திரு வெண்காடு | -- | 49 | 35 | 2 | 21 |
| 24. | திருச் செம்பொன்பள்ளி | 29 | 36 | -- | 2 | 20 |
| 25. | மயிலாடுதுறை | -- | 39 | -- | 1 | 11 |
| 26. | திருத் துருத்தி | 42 | -- | -- | 1 | 10 |
| 27. | திரு மணஞ்சேரி | -- | 87 | -- | 1 | 10 |
| 28. | பந்தணை நல்லூர் | -- | -- | 10 | 1 | 10 |
| 29. | திரு அன்னியூர் | -- | 8 | -- | 1 | 10 |
| 30. | திருக் கடம்பூர் | -- | 19, 20 | -- | 2 | 21 |
| 31. | திரு ஓமாம்புலியூர் | -- | -- | 88 | 1 | 9 |
| 32. | திரு ஆப்பாடி | 48 | -- | -- | 1 | 10 |
| 33. | திரு மங்கலக்குடி | -- | 73 | -- | 1 | 10 |
| 34. | திருக் கஞ்சனூர் | -- | -- | 90 | 1 | 10 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| 35. | திருக் கோடிகா | 51 | 78 | 81 | 3 | 25 |
| 36. | திருக் கோழம்பம் | -- | 64 | -- | 1 | 11 |
| 37. | திரு ஆவடுதுறை | 56, 57 | 29 | 46, 47 | 5 | 51 |
| 38. | தென் குரங்காடுதுறை | -- | 63 | -- | 1 | 11 |
| 39. | திரு இடை மருதூர் | 35 | 14, 15 | 16, 17 | 5 | 47 |
| 40. | திரு நாகேச்சரம் | 66 | 52 | 66 | 3 | 30 |
| 41. | திருச் சத்தி முற்றம் | 96 | -- | -- | 1 | 10 |
| 42. | நல்லூர் | 97 | -- | 14 | 2 | 22 |
| 43. | திருக் கருகாவூர் | -- | -- | 15 | 1 | 11 |
| 44. | பாலைத் துறை | -- | 51 | -- | 1 | 11 |
| 45. | திரு அவளிவணல்லூர் | 59 | -- | -- | 1 | 10 |
| 46. | வெண்ணியூர் | -- | 17 | 59 | 2 | 21 |
| 47. | பூவனூர் | -- | 65 | -- | 1 | 11 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| 48. | திருப்பழனம் | 12, 36, 87 | 35 | 36 | 5 | 50 |
| 49. | திருச்சோற்றுத்துறை | 41, 85 | 33 | 44 | 4 | 41 |
| 50. | திருவேதிகுடி | 90 | -- | -- | 1 | 10 |
| 51. | திருக்கண்டியூர் | 93 | -- | -- | 1 | 10 |
| 52. | திருவலஞ்சுழி | -- | 66 | 72 | 2 | 11 |
| 53. | திருக்கொட்டையூர் | -- | -- | 73 | 1 | 10 |
| 54. | திருக்குடமூக்கு | -- | 22 | -- | 1 | 10 |
| 55. | திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் | -- | -- | 75 | 1 | 11 |
| 56. | திருச்சேறை (செந்நெறி) | 73 | 77 | -- | 2 | 19 |
| 57. | திருச்சிவபுரம் | -- | -- | 87 | 1 | 8 |
| 58. | அரிசிற் கரைப்புத்தூர் | -- | 61 | -- | 1 | 10 |
| 59. | கடுவாய்க் கதைப்புத்தூர் | -- | 62 | -- | 1 | 10 |
| 60. | திருவாஞ்சியம் | -- | 67 | -- | 1 | 7 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| 61. | பெருவேளூர் | 60 | -- | -- | 1 | 10 |
| 62. | திரு ஆரூர் | 4, 5, 19, 20, 21, 52, 53, 101, 102 | 6, 7 | 24, 25, 26, 27, 28, 29, 30, 31, 32, 34 | 21 | 208 |
| 63. | திரு ஆரூர் அரனெறி | 17 | -- | 33 | 2 | 21 |
| 64. | திருவலிவலம் | -- | -- | 48 | 1 | 10 |
| 65. | திருக்கீழ் வேளூர் | -- | -- | 67 | 1 | 10 |
| 66. | திருக்கன்றாப்பூர் | -- | -- | 61 | 1 | 9 |
| 67. | திருப்பயற்றூர் | 32 | -- | -- | 1 | 10 |
| 68. | திருப்பள்ளியின் முக்கூடல் | -- | -- | 69 | 1 | 10 |
| 69. | திருப்புகலூர் | 16, 54, 105 | 46 | 99 | 5 | 44 |
| 70. | திருச்செங்காட்டங்குடி | -- | -- | 84 | 1 | 10 |
| 71. | திருநள்ளாறு | -- | 68 | 20 | 2 | 20 |
| 72. | திருமருகல் | -- | 88 | -- | 1 | 10 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| 73. | திருக்கடவூர் | 31, 107 | 37 | -- | 3 | 31 |
| 74. | திருக்கடவூர் மயானம் | -- | 38 | -- | 1 | 8 |
| 75. | திரு ஆக்கூர் | -- | -- | 21 | 1 | 10 |
| 76. | திரு மீயச்சூர் | -- | 11 | -- | 1 | 10 |
| 77. | திரு வீழிமிழலை | 64, 95 | 12, 13 | 50, 51, 52, 53 | 8 | 83 |
| 78. | திருக்கொண்டீச்சரம் | 67 | 70 | -- | 2 | 20 |
| 79. | திருத்தலையாலங்காடு | -- | -- | 79 | 1 | 10 |
| 80. | திருப்பேரெயில் | -- | 16 | -- | 1 | 11 |
| 81. | திருமறைக்காடு | 33, 34 | 9, 10 | 23 | 5 | 50 |
| 82. | திருவாய்மூர் | -- | 50 | 77 | 2 | 20 |
| 83. | திருக்கோளிலி | -- | 56, 57 | -- | 2 | 20 |
| 84. | திருநாகைக்காரோணம் | 71, 103 | 83 | 22 | 4 | 39 |
| 85. | திருவன்னியூர் | -- | 26 | -- | 1 | 9 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| 86. | திருக்கருவிலிக் கொட்டிட்டை | -- | 69 | -- | 1 | 10 |
| 87. | திருநல்லம் | -- | 43 | -- | 1 | 10 |
| 88. | திருநீலக்குடி | -- | 72 | -- | 1 | 10 |
| 89. | திருப்பழையாறை வடதளி | -- | 58 | -- | 1 | 10 |
| 90. | திரு இன்னம்பர் | 72, 100 | 21 | 89 | 4 | 40 |
| 91. | திருப்புறம்பயம் | -- | -- | 13 | 1 | 10 |
| 92. | திரு விசயமங்கை | -- | 71 | -- | 1 | 10 |
| 93. | திரு ஆலம்பொழில் | -- | -- | 86 | 1 | 9 |
| 94. | திருக்கானூர் | -- | 76 | -- | 1 | 9 |
| 95. | திருக்காட்டுப்பள்ளி | -- | 84 | -- | 1 | 10 |
| 96. | அன்பில் ஆலந்துறை | -- | 80 | -- | 1 | 10 |
| 97. | திரு ஆனைக்கா | -- | 31 | 62, 63 | 3 | 30 |
| 98. | திரு எறும்பியூர் | -- | 74 | 91 | 2 | 20 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| 99. | திருச்சிராப்பள்ளி | -- | 85 | -- | 1 | 4 |
| 100. | திருக்கற்குடி | -- | -- | 60 | 1 | 10 |
| 101. | திருப்பராய்த்துறை | -- | 30 | -- | 1 | 11 |
| 102. | திருக்கடம்பந்துறை | -- | 18 | -- | 1 | 10 |
| 103. | வாட்போக்கி | -- | 86 | -- | 1 | 10 |
| 104. | திருப்பைஞ்ஞீலி | -- | 41 | -- | 1 | 10 |
| 105. | திரு ஐயாறு | 3, 13, 38, 39, 40, 91, 92, 98 | 27, 28 | 37, 38 | 12 | 124 |
| 106. | திரு நெய்த்தானம் | 37, 89 | 34 | 41, 42 | 5 | 50 |
| 107. | திருமழபாடி | -- | -- | 39, 40 | 2 | 17 |
| 108. | திருப்பூந்துருத்தி | 88 | 32 | 43 | 3 | 30 |
| | கொங்குநாட்டுத் தலம் : 1 | | | | | |
| 109. | திருப்பாண்டிக் கொடுமுடி | -- | 81 | -- | 1 | 5 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| | தொண்டை நாட்டுத் தலங்கள் : 9 | | | | | |
| 110. | திருக்கச்சி ஏகம்பம் | 7, 44, 99 | 47, 48 | 64, 65 | 7 | 72 |
| 111. | திருக்கச்சி மேற்றளி | 43 | -- | -- | 1 | 10 |
| 112. | திருமாற்பேறு | 108 | 59, 60 | 80 | 4 | 30 |
| 113. | திருக்கழுக்குன்றம் | -- | -- | 92 | 1 | 2 |
| 114. | திருவான்மியூர் | -- | 82 | -- | 1 | 10 |
| 115. | திரு ஒற்றியூர் | 45, 46, 86 | 24 | 45 | 5 | 43 |
| 116. | திருப்பாசூர் | -- | 25 | 83 | 2 | 21 |
| 117. | திரு ஆலங்காடு | 68 | -- | 78 | 2 | 20 |
| 118. | திருக்காளத்தி | -- | -- | 8 | 1 | 11 |
| | துளுவ நாட்டுத் தலம்: 1 | | | | | |
| 119. | திருக்கோகரணம் | -- | -- | 49 | 1 | 10 |

| வரிசை எண் | தலப்பெயர் | பதிக எண் | | | பதிகத் தொகை | பாடல் தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | நான்காம் திருமுறை | ஐந்தாம் திருமுறை | ஆறாம் திருமுறை | | |
| | வடநாட்டுத் தலங்கள் : 2 | | | | | |
| 120. | திருப்பருப்பதம் | 58 | -- | -- | 1 | 10 |
| 121. | திருக்கயிலாயம் (சாரல்) | 47 | -- | 55, 56, 57 | 4 | 40 |
| | பாண்டிய நாட்டுத் தலங்கள் : 4 | | | | | |
| 122. | திருப்புத்தூர் | -- | -- | 76 | 1 | 10 |
| 123. | திரு ஆலவாய் | 62 | -- | 19 | 2 | 21 |
| 124. | திருப்பூவணம் | -- | -- | 18 | 1 | 11 |
| 125. | திரு இராமேச்சரம் | 61 | -- | -- | 1 | 11 |
| | பொதுப் பதிகங்கள் | 17 | 12 | 8 | 37 | 395 |
| | கூடுதல் தொகை | 113 | 100 | 99 | 312 | 3064 |

# பின்னிணைப்பு எண் - 4

## அப்பர் தேவாரத்தில் அகப்பொருட் பாடல்கள் - கூற்றுவகை

| அகப்பாடல் - தொகை வரிசை எண் | திருமுறை எண் | பதிக எண் | பாடல் எண் | கூற்று வகை | | | அகப்பாடல்களின் தொகை எண் |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | தலைவி கூற்று | தோழி கூற்று | செவிலி கூற்று | |
| 1-10 | 4 | 6 | 1-10 | | | 1-10 | 10 |
| 11-20 | 4 | 12 | 1-10 | 1-10 | | | 10 |
| 21-30 | 4 | 97 | 1-10 | 1-10 | | | 10 |
| 31-40 | 5 | 29 | 1-10 | | | 1-10 | 10 |
| 41-50 | 5 | 40 | 1-10 | | | 1-10 | 10 |
| 51-60 | 5 | 45 | 1-10 | | | 1-10 | 10 |
| 61-72 | 5 | 53 | 1-12 | 1-12 | | | 12 |
| 73-82 | 6 | 9 | 1-10 | 1-10 | | | 10 |
| 83-92 | 6 | 13 | 1-10 | 1-10 | | | 10 |
| 93-102 | 6 | 45 | 1-10 | 1-10 | | | 10 |
| 103-112 | 6 | 58 | 1-10 | 1-10 | | | 10 |

| அகப்பாடல் - தொகை வரிசை எண் | திருமுறை எண் | பதிக எண் | பாடல் எண் | கூற்று வகை | | | அகப்பாடல்களின் தொகை எண் |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | தலைவி கூற்று | தோழி கூற்று | செவிலி கூற்று | |
| 113 | 4 | 81 | 6 | | 6 | | 1 |
| 114-115 | 5 | 7 | 7, 8 | | | 7, 8 | 2 |
| 116-117 | 5 | 15 | 5, 6 | | 6 | 5 | 2 |
| 118- | 5 | 18 | 1 | | | 1 | 1 |
| 119-120 | 5 | 23 | 2, 5 | | 2, 5 | | 2 |
| 121-124 | 5 | 25 | 5-8 | 6-8 | 5 | | 4 |
| 125-126 | 5 | 26 | 1, 5 | 1, 5 | | | 2 |
| 127-128 | 5 | 39 | 1, 2 | 1, 2 | | 1, 2 | 2 |
| 129-132 | 5 | 46 | 2-5 | 4-5 | 2, 3 | | 4 |
| 133 | 5 | 64 | 4 | 4 | | | 1 |
| 134 | 5 | 66 | 9 | | 9 | | 1 |
| 135 | 5 | 78 | 4 | | | 4 | 1 |
| 136 | 5 | 81 | 3 | | 3 | | 1 |

| அகப்பாடல் - தொகை வரிசை எண் | திருமுறை எண் | பதிக எண் | பாடல் எண் | கூற்று வகை | | | அகப்பாடல்களின் தொகை எண் |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | தலைவி கூற்று | தோழி கூற்று | செவிலி கூற்று | |
| 137-142 | 5 | 88 | 4-9 | 4 | | 5-9 | 6 |
| 143 | 6 | 2 | 9 | 9 | | | 1 |
| 144 | 6 | 25 | 7 | | 7 | | 1 |
| 145-150 | 6 | 35 | 1, 3-7 | 1, 3-7 | | | 6 |
| | | | மொத்தம் | 88 | 10 | 52 | 150 |

## பின்னிணைப்பு எண் : 5

**தத்துவங்கள் முப்பத்தாறு**

தத்துவங்கள் மாயையிலிருந்து தோன்றுவன.

**சிவதத்துவம் - 5**

1. சிவம், 2. சித்தி, 3. சதாசிவம், 4. ஈசுரம், 5. சுத்தவித்தை இவை உலகைத் தொழிற்படுத்தும் இறைவனுக்கு இடமாய் நிற்பன. அசுத்தமாயையில் இருந்து தோன்றும்.

**வித்தியாதத்துவம்-7**

1. காலம், 2. நியதி, 3. கலை, 4. வித்தை, 5. அராகம், 6. புருடன், 7. மாயை.

பிரகிருதிமாயையில் இருந்து தோன்றும்.

**ஆன்ம தத்துவங்கள்-24**

அந்தக்கரணம் 4; ஞானேந்திரியம் 5; கன்மேந்திரியம் 5; தன்மாத்திரைகள் 5; பூதங்கள் 5.

**அந்தக்கரணம்-4**

1. மனம் 2. புத்தி 3. சித்தம் 4. அகங்காரம்

**ஞானேந்திரியம்-5**

1. மெய் (தோல்) 2. வாய் (நாக்கு) 3. கண் 4. மூக்கு 5. செவி

**கன்மேந்திரியம்-5**

1. மொழி (வாக்கு) 2. கால் 3. கை 4. எருவாய் 5. கருவாய்

**தன்மாத்திரை-5**

1. சுவை 2. ஒளி 3. ஊறு 4. ஓசை 5. நாற்றம்

**பூதங்கள்-5**

1. நிலம் 2. நீர் 3. தீ 4. வளி (காற்று) 5. விண் (ஆகாயம்)

### தாத்துவிகங்கள் அறுபது

தத்துவங்களின் கூறுகள், காரியங்கள் தாத்துவிகங்கள் எனப்படும். அவை அறுபது.

### பிருதிவியின் கூறு-5

1. எலும்பு 2. தசை 3. மயிர் 4. தோல் 5. நரம்பு

### அப்புவின் கூறு-5

1. சிறுநீர் 2. இரத்தம் 3. சிலேத்துமம் 4. வியர்வை 5. சுக்கிலம் (அ) சோணிதம்

### தேயுவின் கூறு-5

1. இருதய வெப்பம் 2. பசித்தீ 3. கண்வெப்பம் 4. உடல் வெப்பம் 5. பைத்தியம்

### வாயுவின் கூறு-10

1. உதானன் 2. பிராணன் 3. அபானன் 4. சமானன் 5. வியானன் 6. நாகன் 7. கூர்மன் 8. கிருகரன் 9. தேவதத்தன் 10. தனஞ்செயன்

### ஆகாயத்தின் கூறு-10

1. அத்தி 2. அலம்புடை 3. இடை 4. பிங்கலை 5. சுழுமுனை 6. காந்தாரி 7. குகுதை 8. சங்கினி 9. சிகுவை 10. புருடன் ஆகிய நாடிகள்.

### ஞானேந்திரியங்களின் விடயங்கள்-5

1. சத்தம் 2. பரிசம் 3. ரூபம் 4. ரசம் 5. கந்தம்

### கன்மேந்திரியங்களின் விடயங்கள்-5

1. வசனம் 2. கமனம் 3. தானம் 4. விசர்க்கம் 5. ஆனந்தம்

### அகங்காரத்தின் கூறு-3

1. தைசதம் 2. வைகாரிகம் 3. பூதாதி

**குற்றம்-5**

1. காமம் 2. குரோதம் 3. உலோபம் 4. மோகம் 5. மதம்

**குணத்தின் கூறு-3**

1. சாத்துவிகம் 2. இராசதம் 3. தாமதம்

**வாக்கு-4**

1. சூக்குமை 2. பைசந்தி 3. மத்திமை 4. வைகரி

தத்துவம் 36-ம், தாத்துவிகம் 60-ம் சேர்ந்து 96 தத்துவங்கள் எனக் கூறும் வழக்கும் உண்டு.

இக்கருத்துக்கள் திரு.சி. அருணை வடிவேல் முதலியார் எழுதிய 'சித்தாந்த வினா விடை' என்னும் நூலில் இருந்து தொகுக்கப் பட்டுள்ளன. நூலாசிரியர்க்கு நன்றி.

# பின்னிணைப்பு-6

**சுருக்க விளக்கம்**

அதி. - அதிகரணம்

உரை. - உரையாசிரியர்

கழகம். - திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட்

களவு. - களவியல்

குறள். - திருக்குறள்

குறுந். - குறுந்தொகை

சிலப். - சிலப்பதிகாரம்

சிவஞா. சித். - சிவஞான சித்தியார்

சூ. - சூத்திரம்

செ. - செய்யுள்

செய். - செய்யுளியல்

செ-ள். - செய்யுட்கள்

திருநாவு. - திருநாவுக்கரசு நாயனார் புராணம்

திருவரு. - திருவருணைக் கலம்பகம்

தொல். - தொல்காப்பியம்

நூ. - நூற்பா

ப. - பக்கம்

பக். - பக்கங்கள்

பதி. - பதிகம்

பா. - பாடல்

பா-ள். - பாடல்கள்

பெ.பு. - பெரிய புராணம்

பொருள். - பொருளதிகாரம்

மது.கா. - மதுரைக்காஞ்சி



தமிழறிந்த குடும்பத்தின் வழிவந்த முனைவர் அ. நலங்கிள்ளி என் நெடுநாள் கெழுதகை நண்பர். தென்னார்க்காடு மாவட்டம் திருப்பாதிரிப்புலியூரைச் சார்ந்தவர். இளங்கலை, முதுகலை, எம்.பில்., ஆகிய பட்டங்களை அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தில் பெற்றவர். அப்பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் மிகச் சிறந்த மாணவர்களில் ஒருவராகத் திகழ்ந்து, மாநில அளவிலான சைவ சித்தாந்தப் பரிசு, ரா.க. சண்முகஞ் செட்டியார் ஆராய்ச்சிப் பரிசு ஆகியவற்றை வென்றவர். பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றவர்.

நண்பர் அ. நலங்கிள்ளி துறைப்பணிகளில் தம்மை முழுமையும் ஈடுபடுத்திக் கொண்டவர். நிகழ்ச்சிகள் அமைப்பதில் வல்லவர். எப்பொறுப்பினையும் சிறப்புடன் நிறைவேற்றும் திறத்தவர். எளிமையுடனும் இனிமையுடனும் பழகும் பண்பும், ஆரவாரமில்லாது ஆக்கமொடு பணியாற்றும் இயல்பும் இவருக்குரிய தனி முத்திரைகள்.

தொல்காப்பியம், சங்க இலக்கியம் ஆகியவற்றில் துறைபோகியவர். பக்தி இலக்கியத்தில் மூழ்கித் தோய்ந்தவர். நூற்றுக்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள் எழுதியவர். பிற கல்லூரிகள் மற்றும் பல்கலைக்கழகங்களில் பொறுப்புகள் பல வகிப்பவர்.

வள்ளலாரும் வாழ்வியலும் என்ற நூலை அடுத்து இந்நூலை வெளியிட்டுள்ளார். இந்நூலில் வாழ்வியல் நடைமுறைகள் ஒரு மனிதனை எப்படி வெறுப்பிற்கும் இன்பத்துக்கும் ஆளாக்குகின்றன என்பதையும், வாழ்வியல் ஏற்றம் பெற இறையியலும் தேவை என்பதையும் முனைவர் அ. நலங்கிள்ளி அப்பர் தேவாரத்தின் மூலம் சிறப்பாக நிறுவியிருக்கிறார். ஆசிரியரின் இலக்கியப் பயிற்சிக்கும் ஆய்வுத் திறனுக்கும் இந்நூல் சிறந்த சான்று.

- ஒய். டென்னிசன்